# கோவை மாவட்ட வழக்குச் சொல் அகராதி

தொகுதி - 1

முனைவர் டி. மகாலட்சுமி

பாடுமீன் பதிப்பகம்
- New No:16 - Old No:32 -
First Floor, Second Street
Balaji Nagar, Royapettah
Chennai - 600 014.

கோவை மாவட்ட வழக்குச் சொல் அகராதி

தொகுதி – 1

முனைவர் டி. மகாலட்சுமி



பதிப்பு : ஆகஸ்டு, 2003

பக்கம் : 288

பிரதிகள் : 1200

பதிப்பு :

பாடுமீன் பதிப்பகம்

- New No:16 - Old No:32 -
First Floor, Second Street
Balaji Nagar, Royapettah
Chennai - 600 014.

விலை: 125. 00

வடிவமைப்பு :
வே. கருணாநிதி

அச்சிட்டோர்:
தி பார்க்கர்
293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்,
இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை - 600 014.
தொலைபேசி : 2835 3983, 3100 8554.

# முன்னுரை

அகராதிப்பணி நிறைவடையாத ஓர் இலக்கு. மனிதர்கள் வாழும் வரை சொற்கள் பிறப்பதும், அவை அகராதிப்படுத்தப்படுவதும் நிகழ்ந்து கொண்டே இருக்கும். அதனால் கிளைமொழி களை அகராதிப்படுத்துவது காலத்தோடு செய்ய வேண்டிய கட்டாயம்.

நாளுக்குநாள் நாடுகள் ஒன்றிணைந்து கொண்டி ருக்கின்றன. எல்லைகளால் பெருஞ்சுவர் எழுப்பப் பட்ட போதிலும் உலகமளாவிய பொதுப்பண் பாடு மெல்ல வளர்ந்து வருவதை யாவரும் உணர்ந் திருக்கிறோம்.

மிக விரைவில் கிளைமொழிச் சொற்கள் அகராதிப் படுத்தப்படவில்லையெனில் நம் முன்னோர்களின் சுவடுகளை மறந்தவர்களாகிப் போவோம்.

ஒவ்வொரு வழக்குச் சொல்லும் அதன் சிதையாத் தன்மையோடு பதிவு செய்ய வேண்டியது முதல் குறிக்கோளாகக் கொண்டு, கோவை மாவட்டத் துச் சொற்கள் திரட்டும் பணி செவ்வனே செய்யப் பட்டது.

அகராதிப்பணி என்பது மிகுந்த பொருட் செல வில், அதிக நபர்களின் உதவியோடு செய்யப்பட்டு வருகிறது. இதற்கிடையில் தனிநபர்கள் ஆர்வத் தோடு செய்வதுவரும் முயற்சி குறைவானதாகி விடாது.

பதினோராராயிரத்திற்கும் மேற்பட்ட கோவை வழக்குச் சொற்கள் திரட்டப்பட்டு அகராதியாகி யிருக்கிறது. என்னுடைய ஆண்டுக் கணக்கான

உழைப்பும், பொருளும் இப்பணிக்காக மனம் உவந்து கொடுக்கப்பட்டிருக்கிறது.

பலமொழி ஆய்வுக்கும், பண்பாட்டு ஆய்வுக்கும் இந்த அகராதி களனாகும்; நிறைந்த பயன் உடையதாகவும் ஆக்கும் என்கிற உணர்வு மட்டுமே உழைப்புக்குக் கிடைத்த ஊதியமாக அமையும்.

மாணவர்கள், கல்லூரிகள். பல்கலைத் தமிழ்த் துறை வாணர்கள், தமிழ் விரும்பிகள் அனைவருக்கும் பெரும்பயனைச் செய்யவிருக்கிறது இப்புத்தகம். அரிய முயற்சிக்குப்பின் வெளிவரும் இப்புத்தகத்தின் ஆக்கத்திற்கும் ஊக்கத்திற்கும் உறுதுணைபுரிந்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கும், பேராசிரியப் பெருமக்களுக்கும், என் ஆய்வு மாணவர் இரா. கை. சங்கர் அவர்களுக்கும் மனமுவந்த நன்றிகளைத் தெரியப்படுத்துகிறேன்.

என் கோவை மாவட்டத்து மக்கள், சொற்களையும் சொற்பொருள்களையும் வழங்கி எனக்கும் தமிழகத்திற்கும் வாழ்நாள் தொண்டு செய்திருக்கிறார்கள். அவர்களுக்கும், காலத்தின் தேவை உணர்ந்து பதிப்பிக்க முன்வந்திருக்கும் சென்னை 'தி பார்க்கர்' பதிப்பகத்தாருக்கும் என் பணிவான நன்றிகளைத் தெரியப்படுத்துகிறேன்.

***

## சொல் அகராதி

அகராதியின் வரலாறு, பரந்து விரிந்து அமைகின்றது. அகராதி என்ற சொல்லாட்சி திருமந்திரத்தில் (2292) சொற் பிரபஞ்சம் எனும் பொருளில் கையாளப்பட்டுள்ளது. 1732 இல் தோன்றிய சதுரகராதியில் இச்சொல் இன்று வழங்கும் பொருளில் அறிமுகமாகியுள்ளது. அகரவரிசையில் சொற்களை யமைத்துப் பொருள் கூறுவது அகராதி என்பதற்கு இன்று வழங்கும் பொருள் ஆகும்.

அகராதியைக் குறிக்கும் பல சொற்களுள் சொற்களஞ் சியம், சொற்பொருட் களஞ்சியம் என்பன குறிப்பிடத்தக்கன. இதனைத் 'தமிழ் ஆங்கில சொற்களஞ்சியம் (கருணானந்த சுவாமி, 1869), பிரபாகர அச்சுக்கூடம், சென்னை), 'மாணவர் சொற்பொருட் களஞ்சியம்' (சீதாராமகாருலு, 1874, கலா ரத்னாகரம் பிரஸ், சென்னை), 'சொற்க்ளஞ்சியம்' (1878, கமலாலய விலாச அச்சுக்கூடம், சென்னை), மாணவர்க்கான சொற்களஞ்சியம்' (சீதாராமகாருலு, 1879, ஸ்ரீநிதி பிரஸ், சென்னை) ஆகியன புலப்படுத்துகின்றன.

முதன்முதலில் 'வட்டார வழக்குத் தமிழகராதியை பெஸ்கி தொகுத்ததாகத் தெரிகிறது. ஆனால், இது குறித்து ஏதும் அறிய இயலவில்லை. எனினும், இவர் தொகுத்த வட்டார வழக்குத் தமிழ்ச் சொற்களுக்கு இலத்தீன் மொழியில் பொருள்கூறும் தமிழ் - லத்தீன் அகராதி ஒன்று 1882 இல் பதிப்பிக்கப் பட்டுள்ளது. இவருக்குப் பிறகு தமிழ்நாட்டில் வட்டார வழக்குச் சொல்லகராதி தயாரித்தவர் கி. ராஜநாராயணன். இவர் 'வட்டார வழக்குச் சொல்லகராதி' என்ற பெயரில், நெல்லை மாவட்டச் சொற்களுக்கு 1982 ஆம் ஆண்டு அகராதி வெளி யிட்டுள்ளார். அகரநிரலில் அமைக்கப்பட்டுச் சொல்லுக்குப் பொருள் இவ்வகராதியில் கூறப்பட்டுள்ளது. அடுத்த நிலையில், 'கோவை மாவட்டச் சொற்களஞ்சியம்' என்னும் இவ்வட்டார

வழக்குச் சொல்லகராதியில், சொற்கள் அகரநிரலில் வழங்கும் வடிவில் கொடுக்கப்பட்டுள்ளன. ஒரு சொல்லுக்கு ஒருபொருள், ஒரு சொல்லுக்குப் பல பொருள் கொடுக்கப்பட்டுள்ளன. ஒரே சொல் ஒரே பொருளில் பலவாறு உச்சரிக்கப்படுதல், ஒரு பொரு ளுக்கு வழங்கும் வேறுபல பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. பெயர், வினை, அடை, இடை ஆகிய இலக்கணச் சொல் வகைகள் காட்டப்பட்டுள்ளன. தேவைப்படும் இடங்களில் மேற்கோள்களும் பழமொழிகளும் தரப்பட்டுள்ளன. 'சொற் களஞ்சியம் என்ற இவ்வாட்டார வழக்குச் சொல்லகராதி, மேலும் பல மாவட்ட, வட்டார வழக்குச் சொல்லகராதிகள் தோன்றுவதற்கு வழிகாட்டலாம். பதினெட்டாம் நூற்றாண்டு முதல் பல்வகையான அகராதிகள் பெருமளவில் தோன்றி கொண்டிருப்பினும், வழக்கு சொல்லகராதியின் வளர்ச்சி தொடக்க நிலையில் உள்ளது.

***

## சொல் அகராதியின் அமைப்பு

திரட்டப்பட்ட சொற்கள் அனைத்தும் தொகுத்து அகர வரிசைப்படுத்தி, அகரநிரல் சொற்பொருள் அகராதி தயாரித்துக் கொள்ளப்பட்டது.

**சொல் வைப்புமுறை**

(அ) சொல்வைப்புமுறை அகரநிரலில் அமைக்கப்பட்டது.

(ஆ) சொற்கள் வழங்கும் விதத்தில் அப்படியே - அடிச்சொல் வடிவிலும், பெயர்ச்சொற்கள் விகற்பங்களோடு கூடிய வடிவிலும் (வேற்றுமை உருபு அல்லது மற்ற உருபுடன் வருபவை), வினைகள் திரிபாக்கம், புடைபெயர்ச்சி பெற்ற வடிவிலும், அடைகளும், இடைகளும் வழங்கும் வடிவிலும் - கொடுக்கப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| அடிச்சொல் வடிவம் | கடு - பெயர்<br>உரி - வினை. |
| விகற்பங்களுடன் கூடிய வடிவம் | ராவோடு - பெயர் + உருபு<br>ராவும்பகலும் |
| | ஆயிடுது - வினைமுற்று.<br>கரிக்கி - வினைஎச்சம். |

இ) வழங்கும் வடிவத்திற்குத் திருந்திய வடிவம் இருப்பின், தேவைப்படும் இடங்களில் தெளிவுகருதிச் சொல்லுக்கு அடுத்துத் தரப்பட்டுள்ளது.

ஈ) ஒரே சொல் ஒரே பொருளில் பலவாறு உச்சரிக்கப்படுதல், ஒரு பொருளுக்கு வழங்கும் வேறுபல பெயர்கள் சுட்டப் பட்டுள்ளன (அடைப்பில்).

உ) தெளிவுபற்றி 'ழ'கரம் சொற்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. 'ழகரம்' இவ்வழக்கில் பெரும்பாலும் உச்சரிக் கப்படுவதில்லை.

ஊ) தனிச்சொற்கள் அன்றிப் பல தொடர்களும் இடம் பெறுகின்றன.

### இலக்கணச் சொல்வகை காட்டும்முறை

ஒவ்வொரு சொல்லிற்கும் (தொடர்களை விடுத்து), அதன் இலக்கணச் சொல்வகை அடுத்த நிலையில் குறிக்கப்பட்டுள்ளது. இடை, எதிர்மறை வினை, ஏவல்வினை, தொழிற்பெயர், பெயர், பெயரடை, பெயரெச்சம், வியங்கோள் வினை, வினைமுற்று, வினையடை, வினையாலணையும் பெயர், வினையெச்சம் ஆகிய இலக்கணச் சொல்வகையினுள் எல்லாச் சொற்களும் பிரிக்கப் பட்டுள்ளன. உரிச்சொல் தன்மையினைக் கொண்ட சொற்கள் அடை அல்லது இடைப்பாகு பாட்டில் அடக்கப்பட்டுள்ளன.

### பொருள் வைப்புமுறை

அ) வழக்கு குறிக்கும் பொருள் அப்படியே தரப்பட்டுள்ளது.

ஆ) ஒரு சொல்லுக்குப் பலபொருள் என்பது இயல்பான ஒன்றாகும். ஒரு சொல்லுக்கு ஒருவராலேயே பலபொருள் கூறப்படும் நிலை காணப்பட்டது. குறுகிய வட்டத்திற்குள் ஒரு சொல்லுக்குள் பல பொருள் உள்ள நிலையும் அறிந்து கொள்ளப்பட்டது. எனினும், இங்குக் கொடுக்கப்பட்டுள்ள ஒருசொல் பல பொருளில் பெரும்பான்மை வட்டத்திற்கு வட்டம், கிராமத்திற்குக் கிராமம் வேறுபடுபவை. எனவே, பொருள்கள் ஒவ்வொன்றையும் முதன்மைப் பொருளாகக் கருதி, முதலில் முதன்மைப் பொருள் எனத் தரப்படாமல், அகரவரிசையில் பொருள்கள் வைக்கப்பட்டுள்ளன. அதே போல், கொடுக்கப்பட்டுள்ள பல்வேறு வழக்கு வடிவங் களும் இத்தன்மையின. ஆகவே, அவையும் (இருப்பின்) அகரவரிசையில் காட்டப்பட்டுள்ளன.

### மேற்கோள் பொருட்சூழல்

எத்தகைய சூழலில் சொல் வழங்கப்படுகிறது என்பது தேவைப்படின், மேற்கோள்மூலம் உணர்த்தப்படுகிறது. மேற் கோள் தொடராக அல்லது பழமொழியாக இருக்கின்றது. இப்பழமொழிகள் 809 சொற்பதிவுகளில் இடம்பெறுகின்றன.

## சிறப்புக் குறிப்புகள்

*சொற்களைப் பற்றி ஆய்வாளர் அறியும் குறிப்புகள், குறிப்பிடத்தக்க சிறப்புடையனவாக இருப்பின், (அடைப்பில்) தரப் பட்டுள்ளன.*

## எடுத்துக்காட்டு

*அட்டாணி: அட்டாலை: பெ. 1. பாய் வைக்கத் தொங்க விடப்பட்டுள்ள கயிற்றின் அமைப்பு, 2. பொருட்கள் வைக்க ஏற்படுத்திய அமைப்பு, 3. மாடிவீடு, 4. மேல்வீடு, "அனந்தவள்ளம் அட்டாணி மேலே இருக்கும்" (அட்டா: கன்னடச்சொல்; அட்டாலி, பரணி).*

*தெளிவுபற்றிப் பல சொற்கள் மேற்குறிப்பிட்ட பாகுபாடின்றியும் அகராதியில் தரப்பட்டுள்ளன.*

***

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| எ.ம.வி. | - | எதிர்மறை வினை. |
| ஏ.வி. | - | ஏவல் வினை. |
| தொ.பெ. | - | தொழிற் பெயர். |
| பார். | - | பார்க்க. |
| பெ. | - | பெயர். |
| பெ. அடை. | - | பெயரடை. |
| பெ.எ. | - | பெயரெச்சம். |
| வி.அடை. | - | வினையடை. |
| வி.அ.பெ. | - | வினையாலணையும் பெயர். |
| வி.எ. | - | வினையெச்சம். |
| வி.மு. | - | வினைமுற்று. |
| வியங்.வி. | - | வியங்கோள் வினை. |

★★★

## சொற்களஞ்சியத்தைப் பயன்படுத்தும் முறை

சொற்கள் முதலில் வழங்கு வடிவிலும், அகரநிரலிலும் கொடுக்கப்பட்டுள்ளன. தெளிவுகருதி, தேவைப்படும் இடங்களில் சொல்லை அடுத்துத் திருந்திய வடிவம் காட்டப்பட்டுள்ளது.

திருந்திய வடிவத்தை அடுத்துப் பெயர், வினை, அடை, இடை ஆகிய இலக்கண வகைப்பாடுகள் கொடுக்கப்பட்டுள்ளன. இப்பாகுபாடின்றி, வழக்கிலுள்ள சொற்றொடர்களும் சேர்க்கப் பட்டுள்ளன.

இலக்கண வகைப்பாட்டை அடுத்துப் பொருள் தரப்பட்டுள்ளது. சொல்லுக்குக் களப்பணியின்மூலம் கிடைத்த பொருள் மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளது. ஒன்றுக்கு மேற்பட்ட பொருள் இருப்பின் ஒன்று, இரண்டு என எண் தரப்பட்டுள்ளது.

தேவைப்படும் இடங்களில் பொருளை அடுத்து மேற்கோள், ஒற்றை மேற்கோள் குறியிலும், பழமொழி இரட்டை மேற்கோள் குறியிலும் தரப்பட்டுள்ளன.

இதனையடுத்து, அடைப்புக் குறிக்குள் சொல்லின் சிறப்புச் செய்திகளாகக் கருதுவன கொடுக்கப்பட்டுள்ளன. இதில் பிறமொழிச் சொற்கள், சொல்லுக்கு உள்ள வேறு வடிவங்கள், இதே பொருளில் வழங்கும் வேறு சொற்கள். சொற்களின் வகை ஆகியன கொடுக்கப்பட்டுள்ளன.

எ-டு. சொல் : அட்டாலெ.

வேறு வடிவம் : அட்டாணி, அட்டாலி.

வேறு சொல் - பரணி.

சொல் : நரி.

வகை : கழுதெ நரி, குள்ளநரி, பெருநரி, வங்கநரி.

மேலும், சொற்களைப் பார்த்தவுடன் பொருள் புரியக் கூடிய சில செய்திகளும் தரப்பட்டுள்ளன. எ-டு. 'கௌாப்பழம்'

என்ற சொல்லுக்கு அடைப்பில் 'கௌாச்செடி' எனக் கொடுக்கப் பட்டுள்ளது. இதனால் இப்பழம், செடிவகையைச் சார்ந்தது என்பது புலப்படுகிறது. ஆனால், இவ்வகைச் சொற்கள் அகரநிரலில் புகுத்தப்படவில்லை. அடைப்பில் எண் கொடுக்கப் பட்டிருப்பின், அடைப்பிலுள்ள செய்தி அவ்வெண்ணிற்கு மட்டும் உரியதாகும்.

பார். என்ற குறிப்பினைக் கொண்டு, அச்சொல்லுக்குள்ள பொருளைப் பார்க்க வேண்டும்.

ஒரு சொல்லுக்குப் பொருள் கூறும்போது, அப்பொருளி லுள்ள வழக்குச் சொற்களும் அகரநிரலில் தரப்பட்டுள்ளன. எ-டு. 'பானக்கு மெரவனை' என்ற சொல்லுக்குப் பெண்கள் பானக்குவைத் தலையில் வைத்து ஊர்வலம் வருதல் என்று பொருள் கூறப்பட்டுள்ளது. இங்குப் பயன்படுத்தப்பட்ட 'பானக்கு' என்ற சொல்லுக்கு அகரநிரலில் பொருள் தரப்பட் டுள்ளது.

சொற்களுக்குப் பொருள் கூறும்போது, அப்பொருளே அது எது தொடர்பான சொல் என்பதை உணர்த்தும் நோக்கிலும் கொடுக்கப்பட்டுள்ளது.

எ-டு. பல்லக்கடிச்சு நிக்கு : பயிர் நன்றாக வளராமை.

குதர மொகம் சாஞ்சிருக்கு : அறுவடைக்கு வந்த பயிர் தலைசாய்தல்.

★★★

## அ

அக்கச்சி : பெ. அக்காள் (அக்கா, அக்கை).

அக்கட்டாலெ : வி.அடை. அந்தப் பக்கம்.

அக்கடா : இடை. சும்மா இருத்தற் குறிப்பு 'அக்காடனு இரு' (தெலுங்கு).

அக்கப்போர் : பெ. 1. தொல்லை, 2. வம்புப் பேச்சு, 3. கலகம்.

அக்கரெ ஆடு : பெ. ஒருவகை ஆடு.

அக்கரெ கிச்சிலி : பெ. ஒருவகை அரிசி.

அக்கரெப் பச்சை : பெ. பொய்த்தோற்றம் "இக்கரெக்கி அக்கரே பச்செ"

அக்கறை : பெ. பொறுப்பு.

அக்காளிப்பா : பெ. அலங்காரச் செடி.

அக்கி : பெ. கொப்பளம்.

அக்கி எழுதறது : தொ. பெ. கொப்பளங்கள் உடம்பில் தோன்றினால் காவிக்கல்லால் முதுகில் சிங்கம் வரைதல்.

அக்கியானம் : பெ. 1. கவலை, 2. பயம்.

அக்கினிக் கரகம் : பெ. வேண்டுதலின் பேரில் எடுக்கப்படும் நெருப்புச் சட்டி (அக்கினிச்சட்டி, அக்னிக்கும்பம்).

அக்குசு : பெ.பொறுப்பு 'ரொம்பத்தா உனக்கு அக்குசு' - (உருது. அக்கு)

அக்குத்தா பேசறான் : வி.மு. அக்கிரமமாகப் பேசுகின்றான்.

அக்குத்தொக்கு : பெ. ஒட்டுப்பற்று.

அக்குனி நச்சத்திரம் : பெ. சித்திரைக் கடைசி ஏழு நாளும் வைகாசி முதல் ஏழு நாளும்.

அக்னிச்சட்டி எடுக்கறது : தொ. பெ. அக்கினிக்கரகத்தை ஆற்றிலிருந்து கோவிலுக்குக் கையால் ஏந்தி வருதல்.

*அக்னிப்புழு* : பெ. புழுவகை.

*அக்னி மூலெ* : பெ. தென்கிழக்குத் திசை.

*அகட்டி* : *அகல* : பெ. அடை.

*அகத்தி* : பெ. ஒருவகைக் கீரை.

*அகத்தீஸ்வரர்* : பெ. தெய்வம்.

*அகத்தூர் அம்மன் கோவில்* : பெ. தெய்வம்.

*அகமுடையார்* : பெ. ஓர் இனம்.

*அகராதி* பெ : 1. தெரியாததையும் தெரிந்ததுபோல் காட்டிக் கொள்ளுதல் 'இவபெரிய அகராதினு நெனப்பு', 2. தொல்லை 'உங்கூட ஒரே அகராதியாப் போச்சு',

*அகல் வெளக்கு* : பெ. மண் விளக்கு வடிவிலுள்ள பித்தளை விளக்கு (கார்த்திகேய வெளக்கு, மாட வெளக்கு).

*அகலக்கால் வக்காதெ - அகலக்கால் வைக்காதே* : வி.மு. எளிமையாய் முடியும் செயலைப் பெரிதாக்கிக் கொள் பவனுக்குக் கூறுதல்.

*அகவெலை* : பெ. தானிய விலை.

*அகிலாண்டவல்லி* : பெ. தெய்வம்.

*அகுடுகொம்பு* : பெ.விரிந்து இருக்கும் மாட்டின் 'கொம்பு நல்லது அல்ல :

*அங்கம்* : பெ. 1. உறுப்பு 'அங்க அங்கமா வெட்டிருவே', 2. சரீரம் "அங்கத்தெக் காட்டி தங்கத்தெ சேத்தாள்".

*அங்கராக்கு* : பெ. மேல் சட்டை (கம்சு, சட்டை, சரட்டு, சொக்காய்).

*அங்கலாப்பு* : *அங்கலாய்ப்பு* : பெ. 1, கலக்கம், 2. பேராசை 'சரியான அங்கலாப்புக்காரி', 3. பொறாமை.

*அங்கவெஸ்திரம்* : பெ. தோளின்மேல் இடும் துண்டு.

*அங்கனக்குள்ளெ* : வி. அடை. அந்த இடத்திற்குள் 'அங்குனக் குள்ளெதா வச்சே'

*அங்காளம்மன்* : பெ. ஒரு கிராம தேவதை.

*அங்கினாலும்* : வி. அடை. அங்கேயாவது.

அங்குறான் : வி.மு. என்கின்றான்.

அங்கே போப்பா : வழி கூறும்போது (அனைவருக்கும்) பயன் படுத்தும் தொடர்.

அங்கையு மிங்கையு : வி.அடை அங்கும் இங்கும்.

அச்சக்காரம் : பெ. முன்பணம் "சொப்புமனைய மாண்டாதவன் மொடாவுக்கு அச்சக்காரம் வாங்கினாப்பலே" (அச்சாரம்).

அச்சாணி : பெ. வண்டிச்சக்கரம் சுழன்று வராதபடி பாது காக்கும் ஆணி.

அச்சு : பெ. 1. நெய்தற் கருவி - சிறுசிறு பற்களால் ஆகிய இச் சட்டத்தினுள் இழை செல்லும், 2. முறுக்குப் பிடியின் உள்ளே போட்டுப் பிழிய உதவும் கருவி, 3. வண்டியின் இரு சக்கரங்களையும் இணைக்கும் இரும்பாலான கம்பி.

அச்சுக் கொலையாமெ : அச்சுக் குலையாமல் : வி. எ. 1. ஒருவர் போல் மற்றொருவர் தெரிதல் 'அச்சுக் கொலையாமெ அவெ மாதிரியே இருக்கா' 2. முன்பு பார்த்த ஒருவர் பல ஆண்டுகளுக்குப்பின் அப்படியே இருப்பின் வியந்து கூறுதல்.

அச்சுப்பலகை : பெ. நெய்தற் கருவி.

அச்சுமரம் : பெ. 1. சுண்டக் காய வைத்த கரும்புப்பாலை ஊற்றும் அச்சு, 2. நெசவுக் கருவி.

அச்சு முட்டாயி : பெ. ஒருவகை மிட்டாய்.

அச்சு முறுக்கு : பெ. பலகார வகை.

அச்சு வெல்லம் : பெ. ஒருவகை சிறிய பழுப்பு வெல்லம்.

அசட்டுச்சிரிப்பு : பெ. அறியாமை புலப்படும்படி சிரித்தல்.

அசட்டுப் பிசட்டுனு பேசாதே : வி.மு. கண்டபடி உளறாதே.

அசட்டை : பெ. 1. கவனக்குறைவு, 2. மதியாமை.

அசடன் : பெ. மூடன் (அசடு).

அசத்திட்டான் : வி.மு. வியப்பில் ஆழ்த்திவிட்டான் 'அப்பா ஆளையே அசத்திட்டான்'

அசந்தப்பமா : வி.அடை. எதிர்பாராதவிதமாக.

அசந்து : வி.எ. 1. சோர்ந்து, 2. மலைத்து 'தந்தியினு கேட்டதுமே அசந்துட்டே(ன்).

அசப்பு : பெ. தோற்றம்.

அசம்பாவிதம் : பெ. சம்பவிக்கக் கூடாதது.

அசல் : பெ. 1. அருகிலுள்ள இடம், 2. கடன்முதல், 3. மூலமாயுள்ளது (அரபி).

அசலூர்க்காரன் : பெ. 1.அன்னியன், 2. வெளியூரைச் சேர்ந்தவன்.

அசலூரு : பெ. 1. பக்கத்தூர், 2. வெளியூர்.

அசாத்தியம் : பெ. 1. ஆயாசம் 'அசாத்தியமா இருக்கு'', 2. இயலாதது 'அவனுக்கு அசாத்திய துணிச்சல்'.

அசால்ட்டு : பெ. கவனக்குறைவு.

அசுவணி : பெ. 1. பசு, எருமை, நாய் இவற்றின்மேல் உட்காரும் பறக்கக் கூடிய பூச்சி, 2. பயிர்களைத் தாக்கும் பூச்சி.

அசைத்தல் : தொ. பெ. தறி நெய்யும்போது கட்டுதல் என்று பொருள்.

அசோக்கா : பெ. ஒருவகை மரம்.

அசோலா : பெ. பாசிவகை.

அஞ்சர(றை)ப் பொட்டி : பெ. 1. கடுகு, மிளகு முதலியன வைக்கும் பெட்டி, 2. பச்சையின் வடிவம் (அஞ்சனப் பொட்டி).

அஞ்சாங்கரம் : பெ. ஒருவகை விளையாட்டு.

அஞ்சாங்கல்லு : பெ. ஒருவகைக் கல்லாட்டம் (தட்டாங்கல்லு).

அஞ்சு சுழிமாடு : பெ. முன் மண்டையிலிருந்து வால்வரை நடுமுதுகை யொட்டி ஐந்து சுழி இருக்கும் "அஞ்சிசுழி மாடு கெஞ்சினாலும் கிடையாது".

அஞ்சு மூக்குக் குத்து வெளக்கு : பெ. ஐந்து திரியிடும் விளக்கு வகை (அஞ்சு மொகக் குத்து வெளக்கு)

அஞ்சு மொக வங்கி : பெ. கையணி.

அஞ்சூர் : ஐந்து ஊர் : பெ. "அஞ்சூர் பஞ்சாங்கம் ஹைகோர்ட்டுக்கு வரு(ம்)"

அஞ்ஞா : இடை.எருமைகள் போடும் சத்தம்.

அட்சதை : பெ. மஞ்சள் கலந்த அரிசி.

அட்டக்கரி : பெ. மிக்க கறுப்பு (காக்காக் கருப்பு, சட்டிக்கரி, தொட்டா ஒட்டிக்கற கருப்பு).

அட்டகாசம் : பெ. 1. பாராட்டு 2. ரகளை 'அட்டகாசம் பண்ணாதே' (பிரமாதம்).

அட்டடை : பெ. ஒருவகைப் பூச்சி (அட்டரை, ஆயிரங்கால் அட்டை, ஒலக்கப் பூணு, ஒலப்பூணு, கூரை வண்டு, ரயில் பூச்சி).

அட்ட புரோட்டா : பெ. புரோட்டா வகை.

அட்டரசு : பெ. முகவரி.

அட்டாணி : அட்டாலை : பெ. 1. பாய் வைக்கத் தொங்க விடப்பட்டுள்ள கயிற்றின் அமைப்பு, 2. பொருள்கள் வைக்க ஏற்படுத்திய பலகை அமைப்பு, 3. மாடிவீடு, 4. மேல் வீடு "அளந்த வள்ளம் அட்டாணி மேலே" (அட்டா- கன்னடச்சொல். அட்டாலி. பரணி).

அட்டி : பெ. கழுத்தைப் பிடித்தது போலுள்ள கழுத்தணி.

அட்டிகை : பெ. இடுப்பணிகலன் (கன்னடம்).

அட்டுவான்சு : பெ. முன்பணம் (ஆங்கிலம்).

அட்டூளியம் : பெ. அநியாயம்.

அட்டை : பெ. ஒருவகைப்புழு (வகை : மரவட்டை, நீரட்டை).

அட எளவே! : இடை. 'அப்படியா' எனக் கூறும் நல்லது கெட்டது குறித்த வியப்புச்சொல்.

அடக்கம் : பெ. உடல் தகனம் 'அடக்கம் பண்ணியாச்சா'

அடகல்லு : பெ. இரும்பைத் தட்ட உதவும் இரும்புக்கல்.

அட கெடக்குது : வி.மு. கோழி அடைக்கு உட்கார்ந்துவிட்டது.

அடங்கல் : பெ. சாகுபடிக்கணக்கு.

அடங்காப்பிடாரி : பெ. யாருக்கும் அடங்காதவள்.

அடங்கிடுச்சு : வி.மு. காளையின் சேர்க்கைக்காகக் கத்திய மாடு, சேர்க்கைக் குப்பின் கத்துவதை நிறுத்துதல்.

அடங்கொப்பரானே : இடை வியப்புச்சொல் (ங்கொப்பரானோ!)

அடச்சு : அடைத்து : வி.எ. 'ஓட்டயெ அடச்சுட்டு வா'

அடடா : இடை. வியப்புச்சொல்.

அடடா கடலாடி வெள்ளைக்கோழி மலாடு அல்லா கெலாடு அல்லவெ : கடினமான இச்சொல்லை விரைவாகப் பலமுறை கூறச்சொல்லி, சிரித்து விளையாடுதல்.

அடபயிறு : பெ. கால்நடை மேய்ச்சலுக்காக அடர்த்தியாகப் பயிரிடும் சோளம் (அடசோளம்).

அடப்பு : பெ. பகை.

அடப்புடுச்சிடுது : வி.மு. அடைமழை பிடித்துவிட்டது.

அடப்பையா : சிறுவனை அழைக்கக் கூறும் சொல்.

அடபடமாட்டேங்குது : வி.மு. யூகிக்க முடியவில்லை.

அடம் : பெ. 1 அடர்த்தி 'அடம்பா நட்டுட்டு வா', 2. திடகாத்திரம் 'ஆளு நல்லா அடமா இருக்கான்', 3. பிடிவாதம் 'அடம் புடுச்சவன்'

அடைமழை : பெ. விடாது பெய்யும் மழை.

அடமானம் : பெ. அடகு. (அடவு)

அடமூடா எட்டிப் போடா : வசை.

அடவாதம் : பெ. பிடிவாதம்.

அடா : இடை. இகழ்வு, வியப்புக்களின் குறிப்பு (அடே).

அடாசு : ஏ.வி. தலைகீழாக நில்.

அடாவடி : பெ. கொடுஞ்செயல்.

அடிஈரம் : பெ. உழவு ஓட்டும்போது புரட்டிக் கொடுக்கப் படும் மண்ணின் ஈரம். இந்த ஈரம் இல்லாவிட்டால் மீண்டும் நீர் விட்டு பின் உழுவர்.

அடி என்னடி : இடை. மனைவியை அழைக்கும் தொடர்.

அடி ஒரம் : பெ. 1. செடிக்குக்கீழ் வைப்பது, 2. நடவுக்குமுன் சேற்றில் இடும் உரம்.

அடிக்கற அடியிலே கண்ணாமுழி பிதுங்கிப் போகும் : வசை.

அடிக்குப் புடிக்குச் சரியாச்சு : வி.மு. இலாபமும் இல்லை; நஷ்டமும் இல்லை.

அடிக்கும் தொலைக்கும் : வி.அடை. கால்முதல் தலைவரை.

அடிக்கொருதரம் : வி.அடை. அடிக்கடி 'அடிகொருதரும் கூப்புடாதே'

அடிங்கற ராசா இல்லெ புடிங்கற மந்திரி இல்லே; கேள்வி கேட்பார் இல்லாதவன்.

அடிச்ச அடி நாக்கு பிதுங்கிப் போச்சு : அடியின் பயங் கரத்தைக் குறித்தல்.

அடிச்சக்கை : இடை. பாராட்டும் முகமாக வியப்புடன் கூறுதல்.

அடிச்சால் மூக்கு வெத்தலெ பாக்கு போட்டுக்கும் : வசை.

அடிச்சிட்டு : வி.எ. அடித்துக் கொண்டு 'அடிச்சிட்டு அழிச் சாட்டியம் பண்றீங்களா'

அடிச்சுக்கறதா : வி.மு. பறித்துக் கொள்வதா 'அவம் பணத்தெ நாம அடிச்சுக்கறதா'

அடிச்சுட்டா (ன்) : வி.மு. அடித்துவிட்டான்.

அடிசாய்தல் : தொ.பெ. அடியின் நிழல் சாய்தல்.

அடிசீப்பூ : பெ. வாழைக்குலையின் முதல்சீப்பூ.

அடிதிரும்புதல் : தொ.பெ. பொழுது சாய்தல்.

அடிதாவுதல் : பெ. ஒருவகை விளையாட்டு.

அடிதுடி : பெ. சண்டை "கொசவனுக்குப் பல நாள் வேலெ, அடிதுடிக்காரனுக்கு ஒரு நாள் வேலெ".

அடிபட்டவன் : வி.அ. பெ.1 . அனுபவப்பட்டவன், 2. காயம் பட்டவன், 3. நொந்துபோனவன், 4. விளையாட்டில் தோற்றவன்.

அடிபடுது : வி.மு. 1 செவிக்கு எட்டுதல் 'பேச்சு அடிபடுது', 2. பரிந்துரை 'உம்பேர் அடிபடுது'.

அடிபந்து : பெ. ஒருவகை விளையாட்டு (எறிபந்து).

அடிபலகை : பெ. தறியின் அடிப்பகுதி.

அடிபின்னிட்டான் : வி.மு. நன்றாக அடித்துவிட்டான்.

அடிபோடுதல் : தொ.பெ. திட்டமிடுதல் 'சொத்தெப் பிரிக்க மெல்ல அடிபோடுறா(ன்)',

அடிமட்டை : பெ. பளுவைத் தாங்குகின்ற அடியிலுள்ள தென்னை மட்டை "அப்பனே அடிமட்டையில் தொங் கறானாம்மா, மவ(ன்) வறக்காய் என்னானாம்".

அடிமடை : பெ. முதல்மடை (தலைமடை).

அடிமடைப்பாத்தி : பெ. தண்ணீர் பாயும் முதல் பாத்தி (தலைமடைப் பாத்தி).

அடிமாடு : பெ. கொல்லுவதற்குரிய மாடு (அடிவெட்டு மாடு).

அடியிலிருந்து வெட்டுங்க : ஏ.வி. கரும்பை அடிப்பாகத்தி லிருந்து வெட்டுங்கள்.

அடிராசி : பெ. நெல் குவியலிலுள்ள அடிப்பகுதி நெல்.

அடிலெ : வி.அடை. கீழே.

அடிவவுறு : பெ. கீழ் வயிறு.

அடிவாங்கிரிச்சு : வி.மு. 1. வியாபாரத்தில் நஷ்டம் வந்து விட்டது, 2. விவசாயம் கெட்டுவிட்டது.

அடிவாரம் : பெ. மலையடிவாரம்.

அடிவெட்டு : பெ. கிணற்றில் நீர்வர மிக ஆழத்தில் வெட்டும் வெட்டு.

அடுக்களை : பெ. சமையல் அறை (அடுப்பாங்கரை, கிச்சன், குசினி, சோறாக்கூடு).

அடுக்கு அரளி : பெ. அரளியில் ஒருவகை.

அடுக்கு ஊமத்தை : பெ. ஊமத்தையில் ஒருவகை.

அடுக்குசட்டி : பெ. பானைகளை ஒன்றன்மீது ஒன்றாக அடுக்குதல்.

அடுக்குச்செட்டு : பெ. வாய் அகன்ற அண்டாக்கன் (கலாய் அடுக்கு).

அடுக்குத்தாள் நோவு : பெ. பயிர் நோய்.

அடுக்குத்தேனு : பெ. ஒருவகைத் தேன்.

அடுக்கு நந்தியாவட்டம் : பெ. நந்தியாவட்டையில் ஒருவகை.

அடுக்குப் பருத்தி : பெ. பருத்திவகை.

அடுக்குப் பாத்திரம் : பெ. ஒன்றனுள் ஒன்று அடங்கி அடுக் காக உள்ள பாத்திர வகைகள்.

அடுக்கு போசி : பெ. சாதம் எடுத்துச் செல்லும் வட்டமான பாத்திர வகைகள்.

அடுக்கு மல்லிகை : பெ. மல்லிகையில் ஒருவகை.

அடுக்கு மூலை : பெ. அன்றாடும் பயன்படுத்தாத சாமான்களை அடுக்கும் அறையின் மூலைப்பகுதி.

அடுக்கு மொடா : அடுக்கு மிடா : பெ. பெரிய பானைகளை அடுக்கு மூலையில் ஒன்றன்மீது ஒன்றாக அடுக்குதல்.

அடுக்கு வாகை : பெ. வாகை மரத்தில் ஒருவகை.

அடுங்கோவம் : பெ. கடுங்கோபம்.

அடுச்சா பல்லு தெறிச்சுப் போவும் : வசை.

அடிச்சிருச்சு : வி.மு. தாக்கிவிட்டது 'நோவு அடுச்சிருச்சு'

அடுச்சு : பெ. சேலையைக் கெட்டியாக நெய்தல்.

அடுச்சுப்புடுச்சு வாங்கினே : வி.மு. தன் வலிமையால் பெறுதல்.

அடுத்தாப்பிடி : வி.அடை. அடுத்தாற்போல்.

அடுப்பு : பெ. சமைக்கும் அடுப்பு "சூடு கண்ட பூனெ அடுப்பெக் கண்டா அஞ்சும்"

அடுப்புக்கல்லு : பெ. பச்சையின் வடிவம்.

அடுப்பு மமுட்டி : பெ. மண்வெட்டியில் ஒருவகை.

அடுப்பு மூட்டு : ஏ.வி. அடுப்பில் தீயிடு.

அடுப்பு மொறையுது : வி.து. அடுப்பு சத்தத்துடன் எரிந்து விருந்தினர் வருவதைக் குறிப்பால் உணர்த்துதல்.

அடுமத்தொழில் : பெ. கைநீட்டி ஊதியம் பெறும் தொழில்.

அடைக்கெத்து : பெ. அடைக்கோழியின் சத்தம்.

அடையாளம் போடறது : தொ.பெ. வண்ணான் துணிகளுக் குக் குறியிடுதல்.

அடெமூக்கெ : பெ. மூக்கால் பேசுபவன்.

அடேயப்பா : இடை. வியப்புக்குறிப்பு (அடேங்கப்பா!).

அடை : பெ. 1. ஒருவகைப் பணியாரம் 2. திருமணச் சடங்கிற் சாகக் பச்சரிசியால் உப்பின்றிச் சுட்டது.

அடைதட்டுச் சீடு : பெ. பள்ளர் திருமணச் சடங்கு.

அடையாள வெட்டு : பெ. ஆட்டின் விலையை முடித்துக் கொண்ட வியாபாரிகள் தங்களுக்கென வைத்துள்ள அடையாளத்தை ஆட்டின் முடியை வெட்டி இடுதல்.

அண்ட : வி.அடை. 1. அடிவரை 'அண்ட அறுக்கக்கூடாது', 2. ஒதுங்க (ஒண்ட).

அண்டங்காக்கா : பெ. கழுத்து கறுப்பாக உள்ள காகம்.

அண்ட சரப்பா : பெ. காட்டுமரம்.

அண்டப்பிசுநாரி : பெ. கருமி.

அண்டபுளுகு : பெ. பெரிய பொய் " பூசாரி புளுகன்னா ஆசாரி அண்டபுளுகன்"

அண்டபுளுகன் ஆகாசப்புளுகன் : பெ. பெரும் பொய்யன்.

அண்டபிரசண்டன் : பெ. அதிகப்பிரசங்கி "ஊமையங் கல்யா ணத்திலே ஔருவாய(ன்) அண்டப்பிரசண்டே"

அண்டா : பெ. ஒருவகைப் பெரும் பாத்திரம், "அவசரத்துக்கு அண்டாவ்லியுங் கை பூதாது"(இந்துஸ்தானி).

அண்டாத்தட்டு : பெ. அகலமான பெரிய தட்டு.

அண்டிருச்சு : வி.மு. பிடித்துவிட்டது 'பேய் அண்டிருச்சு'

அண்ணமார் சாமி : பெ. தெய்வம்.

அண்ணமார் நோன்பு : பெ. குன்றுடையாய் கடவுண்டனின் மக்களான பெரியண்ண சாமிக்கும், சின்னண்ண சாமிக்கும் மாசி மாதம் எடுக்கும் பெருவிழா.

அண்ணனுக்கு வாச்சவோ : பெ. அண்ணன் மனைவி.

அண்ணா : பெ.1. அண்ணன், 2. அப்பா.

அண்ணாக்கவுரு : பெ. அரைஞாண் "அம்மா நூக்கற நூலு அய்யன் அண்ணாக் கவுத்துக்கே பத்தாது"(அர்ணா, அரிஞாக்கயிறு).

அண்ணா டி.எம்.கே.வேட்டி : பெ. கறுப்பு, சிவப்பு, வெள்ளை ஆகிய கரையுள்ள வேட்டி.

அண்ணி : பெ. அண்ணன் மனைவி.

அணத்துதல் : தொ.பெ. 1. உடல்நிலை சரியின்றி முனகுதல் "எல்லா நோவு வந்து அணத்துனா, வண்ணா சும்மாவே அணத்துவா(ன்)", 2. முணுமுணுத்தல்.

அணப்பு : பெ. 1. ஏக்கரில் மூன்றில் ஒருபாகம் 2. ஒரு சதுரை அளவை.

அணா : பெ. ரூபாயின் பதினாறிலொரு பகுதி (இந்துஸ்தானி).

அணாமத்தா : வி.அடை. பயனின்றி 'அணாமத்தாப் போச்சு'.

அணை : பெ. 1. அணைக்கட்டு "வெள்ளம் வர்ரதுக்கு முன்னே அணெ போடனும்"

2. ஒரு கிராமத்திற்கும் இன்னொரு கிராமத்திற்கும் இடையிலுள்ள காடு.

அணைகவுரு : பெ. மாட்டின் பின்னங் கால்களுக்குக் கட்டும் வயிறு.

அணைங்கறபுத்தி : பெ. சாதிக்குணம் "பறையனைக் கொண்டு பள்ளிக் கொடத்திலே வச்சாலும் அணைங்கற புத்தி போகாது."

அணைத்தல் : தொ. பெ. கட்டுதல் 'வரப்புக்கு மண் அணைச் சாச்சா'

அத்தசாமம் : அர்த்தசாமம் : பெ. நள்ளிரவு.

அத்தாட்சி : பெ. சாட்சி.

அத்தி : பெ. ஒருவகை மரம் "அத்தி பூத்தாப்பாலே"

அத்திம்பேர் : பெ. 1. அக்கா கணவர் : 2. அத்தை கணவர்.

அத்தினி : தூரெரா : பெ. அதிக தூரம்.

அத்து : பெ. 1. சாட்சி, 2. வரம்பு 'அத்துமீறி பேசதே' (அரபு)

அத்து : வி.எ. 1. அறுந்து 'நூல் அத்துப் போச்சு', 2. பெயர்த்து 'அடுத்த பாத்திக்குத் தண்ணி அத்துவுடு'

அத்துட்டு : வி.எ. அறுத்துக் கொண்டு "அத்துட்டுப்போன மாட்டுக்குத் தெக்கென்ன வடக்கென்ன"

அத்துவானக்காடு : பெ. பாழிடம்.

அத்துவானம் : பெ. மோசம் "ஆள்காரன் செஞ்சா அத்து வானம்; மகன் செஞ்சா மத்திமம், தானே செஞ்சா உத்தமம்"

அதக்குதல் : தொ.பெ. வாயில் அடக்குதல் 'அதக்கிகிட்டே இருக்குறா(ள்)',

அதக்கொண்டு : வி.அடை. அதை வைத்து.

அதத்தொட்டு : வி.அடை. அதைப்பற்றி 'அதத்தொட்டு உனக்கென்ன?''

அதது உக்காந்த நேரம் : பெ. பூப்படைந்த நேரம் : நெடுநாள் திருமணமாகாது இருக்கும் பெண்களைக் குறித்துக் கூறுதல்.

அதாகட்டும் : இடை. பேச்சு இடையில் அடிக்கடி பயன் படுத்துவது எப்படி, என்ன, அதாவது, என்ன சொல்ல றேனா. அதுபோகுட்டு, வந்து).

அதிகாரத் தோரணை யெல்லாம் இங்கே காட்டாதே; எதி ராளியை அடக்கும் முகமாகக் கூறுதல்.

அதிகாரம் கொடிகட்டிப் பறக்குது : அளவுக்கு மீறிய அதி காரத்தைப் பயன்படுத்துதல் 'என்ன உன்ர அதிகாரொ கொடிகட்டிப் பறக்குது'

அதிபதி : பெ. உரிமையாளன்.

அதிமதுரம் : பெ. மருந்துப் பொருள்.

அதிய : பெ. அடை. மிகுதியான 'அதிச சத்தம் கேக்குது'

அதிரசம் : பெ. 1. அரிசி மாவில் சுட்ட இனிப்பு, 2. ரவையையும் மைதாவையும் கலந்து சுட்ட இனிப்புவகை.

அதிராதே : எ.ம.வி. பயப்படாதே.

அதிருது : வி.மு. ஆடுகிறது.

அதுக்கு நீயென்ன பூசாரி : இருவர் பேச்சினிடையே ஒருவனுக் குப் பரிந்து வரும் நபரைப் பார்த்துக் கூறுதல்.

அதுக்கு மேலே போனா : மிகுதியாகிவிட்டால் 'அதுக்கு மேலே போனா என்ன செய்யறுதுன்னே தெரியலெ'

அதுக்குள்ளெ : வி.அடை. 1. அதற்குள்ளாகவா 'அதுக்குள்ளெ வந்துட்டியா' 2. அதனுள் 'துணி அதுக்குள்ளெ இருக்குது'

அதுக்கென்ன கேடு : வசை.

அதுக்கோசரம் : வி.அடை. அதற்காக.

அதுங்காட்டி : வி.அடை. அதற்குள்.

அதுதா நெசோ : அதுதான் உண்மை.

அதுந்தவிரொ : வி.அடை. மேலும்.

அதுபத்தி : அதைப் பற்றி : வி.அடை.

அதுமில்லாமெ : அதுவும் இல்லாமல் : வி.அடை.

அதெல்லாம் வருது : வி.மு. கட்டுப்படியாகும் 'அதெல்லாம் வருது ரூபாய்க்கு ரெண்டுபடி மேலே போடுங்கோ'

அதோகதி : பெ.1. தாழ்நிலை, 2. மீள்வது கடினம்.

அந்த அளவுக்கு வந்துட்டியா : அடங்காவதனைப் பார்த்துக் கேட்டல். அந்தக்கரெ : பெ. அக்கரை.

அந்தட்டம் : வி.அடை. அந்தப்பக்கம் (அந்தத்தளை, அந்தப் பொற(ம்), அந்தாண்டே, அந்தெல்லெ).

அந்த நிதுதெ : இடை. பார். அதாகட்டும்.

அந்தராத்துலெ : அத்தரத்தில் : வி.அடை. இடையில் 'உன்னெ நம்புனா அந்தரத்துள்லெ உட்டுடுவே'

அந்தர் வெட்டு : பெ. பெரிய மூட்டைகளை எடைபோடும் தராசுவகை.

அந்தரக்கம்பம் : பெ. வீட்டின் கூரைக்கு மேல்வரும் சட்டத்தைத் தாங்கக் கூடிய பகுதி.

அந்தரம் : பெ. ஆகாயம் 'உன்னெ நம்புனா அந்தரத்துலெ தொங்க வேண்டியது தான்!

அந்த வேலை யெல்லா நம்மகிட்டே நடக்காது : உன்னுடைய ஏமாற்று என்னிடம் பலிக்காது.

அந்தன்னைக்குன்னு : விடை.அடை. அன்றைக்குப் பார்த்து.

அந்தா, அந்தா : இடை. அதுதான்.

அந்தோ : இடை. இரங்கற் குறிப்பு (சிங்களம்)

அந்தி : பெ. 1. இரவு "பகல்லே பக்கம் பாத்துப் பேசு அந்திலே அதுவும் பேசாதே", 2. மல்லிகையில் ஒருவகை.

அந்திசந்தி : பெ. இருட்டு நேரங்கள், 'எம் பொண்ணு தனியா இருக்கா, அந்தி சந்தியிலே வந்து கொஞ்சம் பாத்துக்கோ'

அந்திப்பூ : பெ. மாலையில் மலரக்கூடிய ஒருவகை மலர்.

அந்தியூர் ஆடு : பே. செம்மறி ஆட்டுவகை.

அந்தியூர் வெத்திலெ : பெ. வெற்றிலைவகை.

அந்துப்பூச்சி : பெ. நெற் பூச்சி.

அந்துவன் கூட்டம் : பெ. ஓர்இனம்.

அந்தோரியம் : பெ. ஒருவகை மலர். இம்மலர் மூன்றுமாதம் வரை காயாமல் இருக்கும். அலங்காரத்திற்குப் பயன் படுகிறது.

அந்நாட்டி : வி. அடை. இல்லாவிட்டால் (இல்லாட்டி).

அந்நேரத்திற்கு : அந்த நேரத்தில் : வி.அடை.

அநாவசியமா : வி.அடை. தேவையில்லாமல்.

அப்ப : வி.அடை. அப்பொழுது (அப்பக்கோடம்).

அப்பக்கப்ப : வி.அடை. அவ்வப்போது (அப்பத்திக்கு அப்போ).

அப்பச்சிமார் சாமி : பெ. தெய்வம்.

அப்பத்தா(ள்) : பெ. அப்பாவின் அம்மா (ஆயா, ஆத்தா).

அப்பத்தெ : வி.அடை : அப்பொழுதுதான்.

அப்பவெ : வி.அடை : 1. அப்போது, 2. சற்றுமுன்பு (அப்வெ).

அப்ப வரட்டுமா : போய் வருகிறேன் என்று பொருள்.

அப்பனு : பெ. சகநண்பர்கள் பழகும்போது ஒருவருக்கொரு வர் அன்பாக அழைத்தல் (அப்பா).

அப்பா : பெ. தந்தை (அப்பன், அய்யன், அய்யா).

அப்பா அம்மா வெளையாட்டு : பெ. சிறுவர் விளையாட்டு.

அப்பார்த்திக்கோம் : வி.அடை. அப்புறம்.

அப்பாரு : பெ. அப்பாவின் அப்பா.

அப்பாளம் : பெ. அப்பளம் "மலெ முழுங்கி மகாதேவனுக்கு கதவு ஒரு அப்பாளம்".

அப்பி : வி.எ. 1. அறைந்து 'அப்பிப் போடுவேன்', 2. போட்டு 'பவுடரு அப்பிட்டு வா'.

அப்பிச்சி : பெ. அம்மாவின் அப்பா.

அப்பிய பாளையம் பெரியக்காண்டி கரிச்சிக்குமார் கோவில் : பெ. ஓர் ஆலயம்.

அப்புச்சியா மடம் : பெ. குன்னத்தூருக்கு அருகிலுள்ள மடம். உற்சவத்திற்கு வரும் பக்தர்களுக்கு வேண்டிய தானியங் களை இம்மடத்தில் இலவசமாகத் தருகின்றார்கள்.

அப்புசி : பெ. ஐப்பசி மாதம்.

அப்புடின்னு : வி.அடை. அப்படி என்று.

அப்புருவல் : பெ. ஏற்றுக்கொள்ளுதல் (ஆங்கிலம்).

அபசகுணம் : பெ. சகுனத்தடை.

அபத்தம் : பெ.1. அநியாயம், 2. பொய்.

அபாண்டம் : பெ. 1. இடுபழி 2. பெரும்பொய் (மராத்தி).

அபிசேக ஆராதனை : பெ. மகாசிவன் இராத்திரி - விழாச் சடங்கு.

அபிஞ்சதிப்பொ : வி.மு. அணைந்துவிட்டது இப்பொழுது.

அபிப்பமின்னு : வி.எ. 1. எண்ணம் "ஆனெ ஏறொனும்ன்னு அபி மானமில்லே தவறி உழுந்தோம்னு கேவலமு மில்லே", 2. தன்மதிப்பு.

அபிலாசை : பெ. விருப்பம்.

அபினி : பெ. போதைப் பொருள் (உருது).

அம்பக் : பெ. திருட்டு 'அம்பக் பண்ணிட்டா(ன்).

அம்பட்டன் : பெ. முடிவெட்டுபவன் (நாசவன்).

அம்படலெ : பெ. அகப்படவில்லை :

அம்பராம் வள்ளி : பெ. காட்டுமரம்.

அம்பருதி : பெ. காட்டுமரம்.

அம்பலம் : பெ. 1. அதிகாரம் 'இவனோட அம்பலந்தா பெருசா இருக்குது', 2. வெளிப்படுதல் 'உன் குட்டு அம்பலம் ஆயிடுச்சு', "அறையிலாடித்தானே அம்பலத்துக்கு வர வேண்டும்".

அம்பாரம் : பெ. தானியம், புகையிலை, பருத்தி முதலியவற்றின் குவியல், "ஆண்டிக்கு எதுக்கு அம்பாரக் கணக்கு" (உருது).

அம்பாரம் திளுப்பறது : அம்பாரம் திருப்புதல் : தொ.பெ. அடுக்கப்பட்ட புகையிலைக் குவியலைச் சூடு தணிய, இடம் மாற்றி அடுக்குதல்.

அம்பு : பெ. 1. அன்பு, 2. பாணம்.

அம்புக்கட்டு : பெ. அம்புகளின் கட்டிய தொகுதி.

அம்புட்டுக்கிட்டா(ன்) : வி.மு. 1. சிக்கிக் கொண்டான், 2. தப்பிக்க முடியாமல் மாட்டிக் கொண்டான்.

அம்புட்டுத்தா : வி.அடை. அவ்வளவுதான்.

அம்புட்டும் : பெ. அடை. முழுதும் 'அம்புட்டும் பொய்'.

அம்புலி : பெ. தானியக்கூழ்.

அம்புவில் : பெ. குருவி விரட்டும் கருவி.

அம்பேல் : பெ. விளையாட்டில் பிள்ளைகள் தடை நிகழ்த்த கூறும் சொல்.

அம்போனு போயிட்டா(ன்) : வி.மு. 1. இறந்துவிட்டான் 'நல்லா இருந்தவ அம்போனு போயிட்டா(ன்)', 2. ஏமாந்து விட்டான் 'எப்படியோ அம்போனு போயிட்டா(ன்).

அம்போனுவுட்டுடுவே : அம்போ என்று விட்டுவிடுவாய் : வி.மு. நம்பாதவனைப் பார்த்துக் கூறுதல்.

அம்மணம் : பெ. நிர்வாணம் "நெய்யறவ(ன்) குண்டி அம்மணம்"

அம்மணி : பெ. பெண்ணைக் குறிக்கும் மரியாதைச் சொல்.

அம்மத்தளும்பு : பெ. அம்மையால் ஏற்பட்ட வடு.

அம்மத்தா : பெ. அம்மாவின் அம்மா (அம்மாச்சி, அம்மாயி, அம்முச்சி, அம்மைய).

அம்மன் அளப்பு : அம்மன் அழைப்பு : பெ. மாரியம்மன் விழாச் சடங்கு.

அம்மன் பூ கொடுக்கறது : தொ.பெ. அம்மன் தலையில் பூ வைத்து, அது வலப்புறம் விழுந்தால் விழா நடத்த பூ கொடுத்ததாகப் பொருள் கொள்ளுதல்.

அம்மன் பூசெ : பெ. மாரியம்மன் விழாச் சடங்கு.

அம்மா : பெ. தாய் (அம்மாள்).

அம்மா ஆளு : பெ. தவற்றை மறைக்க முயல்பவனைப் பார்த்துக்கூறுதல் 'அம்மா ஆளு எங்கிட்டெ மறைக்கப் பார்க்கிறியா'

அம்மாஞ்சி : பெ. அம்மான் மகன்.

அம்மாடி : இடை. 1. வியப்புக்குறிப்பு, 2. நிம்மதிப் பெருமூச்சு.

அம்மா பத்ரி : பெ. வேப்பிலை (வேப்பம் பத்திரி, வேம்பிலெ).

அம்மா மேலே ஆணையா : சத்தியம் செய்வதில் ஒருவகை.

அம்மாயி : பெ. 1. பார். அம்மத்தா, 2. அம்மா.

அம்மாவாசெ : அமாவாசை : பெ. "அய்யர் வர்ற வரைக்கும் அமாவாசை காத்திருக்குமா?"

அம்மா வெளையாட்டு : பெ. அம்மை வந்தால் கூறுவது.

அம்மான் : பெ. 1. அத்தை கணவன், 2.தாயுடன் பிறந்தவன், 3. பெண் கொடுத்தவன்.

அம்மி : பெ. அரைகல் "அம்மியே ஆகாசத்திலே பறக்கெயிலே எச்சிலெ எம்மாத்திரம்" (அம்மிக்கல்லு).

அம்மிக்கொளவி : பெ. அம்மியில் அரைக்க உதவும் கல் (கொளவி)

அம்மி மிதித்தல் : தொ. பெ. திருமணச்சடங்கு.

அம்முசு : அம்சம் : பெ. 1. அதிர்ஷ்டம் "ஆசையிருக்கு தாசில் பண்ண அமுசமிருக்குது கழுதெ மேக்க", 2. அழகு 'பொண்ணு அம்முசமா இருக்கா'

அம்மெ நோவு : பெ. உயிரினங்களுக்கு ஒருநோய்வகை.

அம்மெ வாத்திருக்கு : வி.மு. அம்மை வந்துள்ளது (அம்மை கண்டிருக்கு, ஆத்தா போட்டிருக்குது, ஆத்தா வந்திருக்கு, மகமாயி நெறஞ்சிருக்கா, மகமாயி போட்டிருக்குது, மகமாயி வெளையாடிட்டிருக்கறா, மாரியம்மா போட்டிருக்குது, மாரியாத்தா வந்திருக்கு).

அமக்களம் : அமர்க்களம் : பெ. 1. கலகலப்பு, 2. கலாட்டா.

அமச்சு : அமைத்து : வி.எ.

அமதி : அமைதி : பெ. (அமுதி).

அமப்பான வாக்கை : அமைப்பான வாழ்க்கை : பெ. நல்ல வாழ்க்கை.

அமப்பு : அமைப்பு : பெ. விதி. 'அவனோட அமப்பு அப்பிடி நாம் என்ன செய்ய?'

அமருது : வி.மு.கசங்குகிறது.

அமியலெ : வி.மு. 1. அணையவில்லை 'வௌக்கு அமியலெ' 2. அமையவில்லை 'வாழ்க்கெ சரியா அமியலெ'

அமீனா : பெ. "ஆமை பூந்த ஊடும் அமீனா பூந்தவூடும் உருப் படாது" (அரபு).

அமுக்கலாங் கெழங்கு : பெ. கிழங்குவகை.

அமுக்கன் : பெ. 1. இரகசியமாகக் காரியங்களைச் செய்பவ்ன், 2. தந்திர புத்தியுடையவன்.

அமுக்கு : அழுத்து : ஏ.வி. (அமுத்து).

அமுட்டோடெ : வி.அடை. அத்தோடு.

அழுத்தறது : தொ.பெ. 1. அழுத்துதல் "காத்து கொண்டுபோற எச்சிலெயெ கல் வச்சு அழுத்துனா கடலேறி வந்தது" 2. திருடுதல் 'பத்து ரூபா அழுத்திட்டா(ன்)', 3. நடவு போடுதல்.

அமுதம் : பெ. நல்ல சுவை "நுனி நாக்லே அமுதம் அடி நாக்லே நஞ்சு"

அமுல் : பெ. அதிகாரம் (அரபு).

அய்கோர்ட் லாந்தர் : பெ. பச்சையின் வடிவம் (அய்கோர்ட் - ஆங்கிலம்).

அய்த்தே : அத்தை : பெ. 1. அப்பாவின் சகோதரி, 2. அம்மாவின் சகோதரர் மனைவி, 3. மாமியார்.

அய்யய்யோ அப்பப்போ : இடை. சாவுச்சடங்கு. சவத்திற்குப் பூசையிட்டபின் மூவர் 'அய்யய்யோ அப்பப்போ' என மூன்றுமுறை கூறியபின்தான் மற்றவர்கள் அழவேண் டும்.

அய்யர்வாள் : பெ. அய்யங்கார் "ஆட்டுக்கும் மாட்டுக்கும் ரண்டு கொம்பு அய்யர்வாளுக்கு மூனு கொம்பு".

அய்யன் : பெ. அப்பா.

அய்யானம் : பெ. கருத்து.

அய்யோ : இடை. இரங்கற் குறிப்பு "அய்யோங்கற பாவம் கை யோட வந்தாப்பலே"

அய்னிஸ் : பெ. இனிப்புப் பலகாரம்.

அயரக்குஞ்சு : பெ. மீன்வகை.

அயார் மயிரு : பெ. குதிரையின் பிடரி மயிர்.

அயிலை : பெ.1. கருவாடு, 2. மீன்வகை.

அயினி : பெ. மரவகை.

அயோக்கியத்தனம் : பெ. ஒழுங்கீனம்.

அயோக்கியன் : பெ. நாணயமற்றவன்.

அர்ணாக்கொடிச் செயினு : பெ. கழுத்தணி.

அர்த்தங்கெட்டவன் : பெ. வசை.

அர்ரோகரா : இடை. முருக பக்தர்கள் எழுப்பும் ஒலி.

அரக்கு : பெ. மணிவகைகளை மெருகிட உதவும் பவுடர்.

அரக்கு : ஏ.வி. 1. அடி 'நல்லா அரக்கிட்டாங்க', 2. சீவு 'வாய்க் காலெ அரக்கு', 3. செதுக்கு 'வேலியெ அரக்கிவுடு', 4. தேய் 'துணியெ அரக்கித் தொவே'.

அரக்குக்கொப்பு : பெ. காதில் மேல்மடலில் போடும் காதணி.

அரக்கை சரட்டு : பெ. ஆண்கள் ஆணியும் ஆடை வகை.

அரங்கு : பெ. 1. திரை அரங்கு, 2. நாடகம் நடக்கும் இடம்.

அரச்சு : அரைத்து : வி.எ.

அரச எலைத்தாலி : பெ. தாலிவகை.

அரசம்பூ : பெ. அரசமரத்தின் மலர் "அரசமரத்தெ சுத்தி வந்திட்டு அடிவயித்தெ தொட்டுப் பார்த்தாளாம்".

அரசமர மேடை : பெ. கோவில்களுக்கு அருகிலுள்ள மேடை. பஞ்சாயத்து, பொதுபோக்கு ஆகியவற்றிற்குப் பலரும் கூடும் இடம்.

அரசவாகை : பெ. வாகைமரத்தில் ஒருவகை.

அரசாணிக்கா(ய்) : பெ. ஆரஞ்சு நிறமுடைய பூசணிவகை.

அரசாணித்தம்பம் : பெ. முகூர்த்தக்கால்.

அரசெலை மூடி : பெ. குழந்தைகளின் அரைஞாண் கயிற்றி லுள்ள, பட்டையான இது ஆண் பகுதியை மூடி இருக்கும்.

அரட்டை : பெ. வெட்டிப்பேச்சு.

அரண்டவன் : வி.அ. பெ. பயந்தவன் "அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்".

அரணை : பெ. செந்துவகை (பாம்பரணை).

அரநெல்லி : பெ. நெல்லிகனிவகை (சிறுநெல்லி).

அரப்பள்ளொ : அரைப்பள்ளம் : பெ. மழையால் நீர் நிறையும் இடம்.

அரப்பிடி : அரைப்படி : பெ. ஓர் அளவுக்கருவி.

அரப்பு : பெ. தலைக்குத் தேய்த்துக் குளிக்கும் பச்சைநிறப் பொடி.

மரப்புமரொ : பெ. ஒருவகை மரம்.

அரம் : பெ. அராவும் கருவி.

அரமனெ : பெ. அரண்மனை.

அரவாசி : பெ. அரைப்பாகம்.

அரவான்பண்டிகை : பெ. அரவானுக்கு எடுக்கப்படும் விழா.

அரவெள்ளாமை : பெ. பாதி விளைச்சல் கிடைத்தல்.

அரளி : பெ. ஒருவகை மலர் (கொடியரளி, கொத்தரளி, நல்லரளி (அடுக்கரளி) ).

அரற்றுதல் : தொ.பெ. புலம்புதல்.

அரி : பெ.1. கைப்பிடி அளவு, 2. அறுவடை செய்து கீழே போடப் பட்ட இரண்டு மூன்று கைப்பிடியுள்ள தானியக்கதிர்.

அரிக்கடை : பெ. அறுத்த நெல் காயக்கிடத்தல்.

அரிக்கில் லைட்டு : பெ. கையில் பிடித்துச் செல்லும் கண்ணாடி யாலான மண்ணெண்ணெய் விளக்கு (ஆங்கிலம் , அரிக் கேன், லாந்தர்).

அரிக்கெ : அறிக்கை : பெ. கோரிக்கை 'சாமிக்கு அரிக்கே பண்ணியிருக்கு'.

அரிகரண்டி : பெ. துளைகள் நிறைந்த கரண்டி.

அரிச்சி : அரிசி : பெ. "அம்மி குத்தினா என்ன அரணெ குத்தினா என்ன நெல்லு அரிசியானா சரி".

அரிச்சந்திரங்கல்லு : பெ. சுடுகாட்டின் நுழைவாயிலிலுள்ள கல்.

அரிசல்லடை : பெ. தானியத்தைக் கொழித்தெடுக்கும் சல்லடை.

அரிசிக்கம்பு : பெ. ஒருவகைக் கம்பு.

அரிசிக்கருக்காய் : பெ. பாளை அரிசி.

அரிசிச்சீரு : பெ. திருமணச் சடங்கு,

அரிசித்திப்பிலி : பெ. திப்பிலி.

அரிசிப்பல்லு : பெ. சிறு பற்கள் 'அவனுக்கு அரிசிப் பல்லு'.

அரிசிப்பாளை : பெ. பார். அரிசிக்கருக்காய்.

அரிசிப்புல்லு : பெ. புல்வகை.

அரிசிபுடித்தல் : தொ. பெ. சமைத்துப் போடுதல் 'பந்தல் அன்னிக்கு ராத்திரி அரிசி புடிப்போம்'.

அரிசி போடுதல் : தொ. பெ. தாலிகட்டும்போது மணமக்கள் மீது அரிசி வீசுதல்.

அரிசிம் பருப்பு : பெ. அரிசியும் பருப்பும் கலந்து வேக வைத்த உணவு (கூட்டாஞ்சோறு, பருப்பு சோறு, பருப்பாஞ் சோறு).

அரிசிவுடறது : தொ. பெ. சவக்குழியிலுள்ள சவத்தின்மேல் வாய்க்கரிசியை மூன்றுமுறை அனைவரும் போடுதல்.

அரிஞ்சு : வி.எ. அறுத்து 'அரிஞ்சு தின்னு'

அரிபோடுதல் : தொ.பெ. அறுவடை செய்த தானியக் கதிர்களைப் படுக்கையாகப் போட்டுச் செல்லுதல்.

அரிமலெ சிரிமலப் பூச்சி : பெ. பூச்சி வகை.

அரியணங்கெ : பெ. மூலிகை.

அரியாந்திரம் : பெ. வீட்டுப் பகுதியிலுள்ள ஒரு சட்டம்.

அரிவா(ள்) மணை : பெ. அரிவாள் பதித்த பலகை "கத்தரிக்கா சொத்தென்னா அரிவாமணை குத்தம்ங்கறா(ள்) (அருகாமனெ).

அரிவாள் : பெ. 1. நெல் முதலியன அரியுங் கூனிரும்பு "அறுக்க மாட்டாதவன் இடுப்பிலே அம்பத்தெட்டு அருவாளு", 2. வெட்டரிவாள்.

அரிவேணிச்சீரு : பெ. மணப்பெண்ணுக்கு ஏழு மண் பாத்திரத்தை விநாயகர் கோவிலில் வைத்துக் கொடுக்கும் சடங்கு.

அருகங்காடு : பெ. விவசாயத்திற்கு உதவாத நிலம், "ஆனமாட்டெ வித்தவனும் கெட்டா, அருகங்காட்டை உழுதவனும் கெட்டா(ன்)".

அருகதெ : அருகதை : பெ. தகுதி.

அருகி : வி.எ. குறைந்து 'அருகிப் போச்சு'.

அருணாசி : பெ. பலகாரம் செய்யப் பயன்படும் பழங்களின் கூழ்.

அருத்தம் : அர்த்தம் : பெ. பொருள்.

அரும்பாவி : பெ. பெரும்பாவி.

அரும்பு : பெ. மொட்டு.

அரும்புமீசை : பெ. இளமீசை.

அருமச்சீரு எடுக்கறது : தொ. பெ. சடங்குகளில் முன் நின்று செய்யும் தகுதிபெற அய்யர் மூலம் விரும்பியவர்கள் எடுத்துக் கொள்ளும் சடங்கு.

அருமாந்த : பெ. அடை. பிரியமான 'உன் அருமாந்த புள்ளெ பண்ணுன காரியத்தெப் பாரு'.

அருமெ : அருமை : பெ.1. அபூர்வம் 'இதென்ன அருமெப் பொருளா, 2. கவுரவம் , "அரிசி சிந்தினா அள்ளலாம் அருமெ சிந்தினா அள்ள முடியுமா?, 3. சிறப்பு.

அருமைக்காரன் : பெ. சடங்கு நடத்தும் பெரியோன்; திருமணத்தை நடத்தி வைக்கும் முதுமகன்.

அருமைக்காரி : பெ. திருமணத்தை நடத்தி வைக்கும் முதுமகள் (அருவைக்காரி).

அருவம் அரவம் : பெ. சத்தம் 'ஊர் அருவம் ஓய்ஞ்சிருச்சு'

அருள் வருதல் : தொ.பெ. இறைவன் மக்கள்மேல் வருதல்.

அருள்வாக்கு : பெ 1. இறைவன் அருள் பெற்றவர்கள் மக்கட்குப் பலாபலன் கூறுதல், 2. மகாசிவராத்தரி - விழா நடத்தும் போது பூசாரி வரும் ஆண்டின் பலனைக் கூறுதல்; அருள்வாக்கில் வீசும்படி என்றால் கூப்பன் அரிசி கூடக் கிடைக்காது; அரைக்கால் என்றால் சுமாராக இருக்கும்; காலே அரைக்கால் என்றால், மழை பெய்து நல்ல நிறைவு இருக்கும் என்று பொருள்.

அருஜண்டா : வி.அடை. அவசரமாக (ஆங்கிலம்).

அரேளியா : பெ.அலங்காரச்செடி (ஆங்கிலம்)

அரைக்கால் பாவாடை : பெ. முழங்கால்வரை அணியும் ஆடை.

அரைக்கீரை : பெ. கீரைவகை (அறுகீரெ).

அரைகுறை : பெ. முற்றுப்பெறாமை.

அரைச்சீவனாப் போனான் : வி.மு. உடம்பு மெலிந்தவனைப் பார்த்துக் கூறுதல்.

அரைநிசார் : பெ. காற்சட்டை.

அரைமூடி : பெ. சிறு பெண் குழந்தைகளின் இடுப்பணி (அரை மூடிக்காய்).

அல்சேசன் : பெ. 1. நாய்வகை, 2. போலீஸ்காரரைக் குறிக்கும் குறிப்பு (ஆங்கிலம்).

அல்பம் : பெ. சிறுமைக்குணம் உடையவன்.

அல்லக்கம்பி : பெ. மாட்டுவண்டியின் பாகம்.

அல்லக்கவுறு : பெ. மரமேறி முதுகில் அணிவது.

அல்லக்கன்னு : பெ. வாழையின் அருகில் முளைக்கும் சிறு வாழை (அல்லகுருத்து, அல்லபொடை).

அல்லக்கன்னு குத்தறது : தொ.பெ. அல்லக்கன்னைத் தோண்டி அல்ல்து அறுத்து எடுத்தல்.

அல்லக்காதுத்தளுக்கு : பெ. 1. பச்சைக்கல் முருகுவை அடுத்துப் போடும் காதணி, 2. முருகுகாதில் போடும் சிறிய காதணி.

அல்லப்பகலை : பெ. மாட்டு வண்டியின் பாகம்.

அல்லப்பொடங்கு : பெ. கிளைப்பயிர் (அல்லப்பொடத்தான்)

அல்லாடி : வி.எ. துன்பப்பட்டு ‘உங்கூட அல்லாடியே எனக்குப் போதுமினு போச்சு’.

அல்லாமெ : எல்லாம் : பெ. அனைத்தும்.

அல்லாரும் : எல்லாரும் : பெ. அனைவரும்.

அல்லிக்குஞ்சு : பெ. அணில்.

அலக்கழிச்சிட்டான் : வி.மு. துன்பப்படுத்திவிட்டான்.

அலகு : பெ. 1. தச்சுக்கருவி, 2 . வேண்டுதலின்பேரில் குத்தப் படும் கூர்மையான ஆயுதம்.

அலகு குத்தறது : தொ. பெ. 'வேண்டுதலின் பேரில் நாக்கு, தோள் முதலிய உறுப்புகளில் கம்பிகளைக் குத்திக் கொள்ளுதல் (நாக்கலகு, இடுப்பலகு).

அலகு தெரிசனம் : அலகு தரிசனம் : பெ. சிவன் ராத்திரி விழாச் சடங்கு. சொம்பு விளிம்பில் மூன்றுஅடி உயரமுள்ள தலைகீழான கத்தியை அனைவரும் தரிசித்தல்.

அலகு வெட்டறது : தொ.பெ. கோழி வளர்ப்பில் கோழியின் மூக்கை வெட்டுதல்.

அல்லிக்குட்டி : பெ. ஆட்டில் அலிவகை.

அலங்காரக் கொன்னை : பெ. ஒருவகை மரம்.

அலங்காரப் பீடை : பெ. நோய்இன்றி நோயாளிபோல் காண்பவன்.

அலங்காரப் பூசை : பெ. விழாச் சடங்கு.

அலங்குதல் : தொ. பெ. அசைதல்.

அலட்டுதல் : தொ. பெ. 1. உபத்திரவித்தல், 2. பிதற்றுதல்.

அலமாரி : பெ. (போர்ச்சுக்சீசியம். அலமேரி, கப்போர்டு).

அலர : வி.எ. காய 'துணியெ அலர போட்டிருக்கெ'

அலரிப்பூ : பெ. அரளிப்பூ.

அலரிவிட்டாள் : வி.மு. சாபமிட்டாள்.

அலருது : வி.மு. 1. எரிதல் 'புண்ணு அலருது', 2. துடித்தல் 'கேட்ட ஒடனே தேகமெல்லா அலருது'.

அலன் : பெ. பார். அல்லிக்குஞ்சு, "அலன் கெட்டது அதன் வாயினாலே" (அனலு).

அலாக்கா : வி.அடை. தலைக்குமேலே எளிமையாகத் தூக்குதல் (உருது).

அலாசுதல் : அலசுதல் : தொ. பெ. 1. கலக்குதல் 'அண்டாவுலெ கொதிக்கிற கஞ்சியெ அலாசு, 2. நீரில் கழுவுதல் 'சொம்பெ அலாசு'

அலாதி : பெ. தனி (உருது).

அலுக்குதல் : தொ.பெ. குண்டு விளையாட்டில் ஒரு குண்டினை இன்னொரு குண்டு உரசுதல்.

அலுங்குதல் : தொ.பெ. கல்லாட்டத்தில் சுண்டும் கல் வேறொரு முத்தின்மேல் படுதல்.

அலுப்பு : பெ. தளர்வு 'அலுப்புத் தட்டிப் போச்சு'.

அலுமினியப் பாத்திரக் கூடை : பெ. கூடைவகை.

அலுவனாங்குருவி : பெ. பறவை 'வாயப்பாருடா அலுவனாங் குருவியாட்டா'

அலுவா : அல்வா : பெ. (அரபு).

அலெக்சாண்டியன்லராஸ் : பெ. பின்னை மரவகை (ஆங்கிலம்).

அலே : இடை : மனைவியை அழைக்கும் குறியீடு 'எங்கல்லே போனே'.

அலைச்சல் : தொ.பெ. 1. திரிகை, 2. தொந்தரவு.

அலைமோதுதல் : தொ.பெ. விடாப்பிடியான முயற்சி 'அலை மோதிகிட்டு திரியரா வேலை தேடி'.

அவ்வா : பெ. அப்பாவின் அம்மா.

அவகாசம் : பெ. 1. இடைவெளி 'அவகாசம் பண்ணி வா'.

அவகாரம் : பெ. 1. ஆக்ரோசம், 2. மிகுந்த துன்பம் (அவகோரம்).

அவங்காட்லெ மழெ பேயுது : வி.மு. ஒருவன் தன் அதிகாரத்தை அதிகமாகச் செயல்படுத்துவதைக் குறித்தல்.

அவங்காலக் கழுவித் தண்ணி குடி : ஏ.வி. அறிவுரையுடன் கூடிய வசை.

அவங்கிட்டெ போனவதானே : ஒருவனுடன் மறைமுக உறவு கொண்டுள்ளவளைத் திட்டுதல்.

அவசரக் கலியானோ : பெ. அவசரக் கல்யாணம் ; உடனடி முடிவால் குறுகிய காலத்தில் முடியும் திருமணம்.

அவசரக்குடுக்கை : பெ. பதற்றக்காரன்.

அவசாரம் : அவசரம் : பெ.

அவசாரி : பெ. விபச்சாரி "திருடி தேர்மேல வாரா அவசாரி ஆனெமேலே போறா பத்தினி பாழுலேல ஒதுங்குறா" (அவ்சாரி, அவிசாரி, அவுசேரி).

அவதாரம் : பெ. தோற்றரவு.

அவதி : பெ. இன்னல் (அவத்தை, அவுதி).

அவநம்பிக்கை : பெ. நம்பிக்கையின்மை.

அவத்தக்காலேயே : வி.அடை. அங்கேயே (அவத்தையே).

அவ(ன்) போக்கே போக்கு : அவன் குணமே தனி.

அவமங்கிலி : பெ. கணவனை இழந்தவள்.

அவ(ன்-ள்) மூஞ்சிலெ காரித்துப்பு : ஏ.வி. வசை.

அவரை : பெ. கொடிவகை (அவரக்கா - பசுமையான தோலுடன் இருப்பது; அவரக்கொட்டை - காய்நத முழு அவரை ; துவரப்பருப்பு -உடைத்த பருப்பு; காட்டு அவரை).

அவரூமா : வி.அடை. ஆச்சரியமாக.

அவ வாயிலெ வுழுகாதே : ஏ.வி. புத்திமதி.

அவனாச்சி : வி. அடை. அவனாவது.

அவனாசி ராயர் : பெ.தெய்வம்.

அவஸ்தை : பெ. துன்பம்.

அவிகளோடெ : அவர்களோடு : பெ.

அவிசேகொ : அபிசேகம் : பெ. (அவுசாயம்).

அவிஞ்சுபோச்சு : வி.மு.1. அணைதல், 2. பட்டுப்போதல்.

அவிதல் : தொ. பெ. அழிதல்.

அவிய : பெ. 1. அவர்கள், 2. கணவனைப் பிறரிடம் குறிக்கப் பயன்படுத்துவது.

அவியலெ தின்னு அவியலெ பேலனும் : வசை.

அவியவிய : பெ. அவரவர்.

அவினிய சுந்திரி : பெ. பெண்களைக் குறிக்கும் கேலிச்சொல்.

அவனாசித்தேர் : பெ. அவனாசியில் ஓடும் மிகப் பெரிய தேர்.

அவுங்ககிட்டெ : பெ. அவர்களிடம்.

அவுசப்பருப்பு : பெ. உளுத்துப்போன பருப்பு (ஊசப்பருப்பு).

அவுஞ்ச மொட்டு : பெ. அடை வைத்ததில் பொரிக்காத முட்டை

அவுட்டு : பெ.1. இறப்பு, 2. தோல்வி (ஆங்கிலம், ஆள் அவுட்டு).

அவுத்தன் : பெ. மோசமானவன் "அவுத்தனெக் கட்டிட்டு அழு கறதெவிட சமத்தனெக் கட்டிட்டுச் சாகக் கொடுப்பது மேல்".

அவுத்து : அவிழ்த்து : வி.எ. "சிரிச்சுப் பேசினா சீலெயெ அவுத்துக் குடுத்துடுவா".

அவுமானம் : அவமானம் : பெ.

அவுரி : பெ. மீன்வகை.

அவுரு : அவிழ் : ஏ.வி.

அவுல்சரம் : பெ. 1. காலில் குத்தப்படும் பச்சையின் வடிவம், 2. நகை.

அவுலதா : வி.அடை. அவ்வளவுதான்.

அவுலு : அவல் : பெ. "வெறுவாயெ மெல்றவனுக்கு அவுல் கெடெச்சாப்பலே".

அவுனி : பெ. தென்னம்பாளையில் உரித்த நார்.

அவெ : அவன் : பெ.

அவொ : அவள் : பெ.

அழகினியம்மன் : பெ. விழா எடுக்கப்படும் சிறு தேவதை.

அழகு நாச்சியம்மன் : பெ. தெய்வம்.

அழிச்சாட்டியம் : பெ. அழிம்பு.

அழிச்சுப் போட்டாங்க : வி.மு. சேதம் ஏற்படுத்திவிட்டார்கள் (சேதாரம் செஞ்சுட்டாங்க).

அழிமாட்டம் : பெ. அழிவு.

அழிமானம் : பெ. அழிந்தது.

அழுக்கு : 1. பிரசவத்தின்பின் வடியும் நீர். 2. மாசு 'அழுக்கு மோளி' 3. வெளுத்தற்குரிய ஆடைகள்.

அழுக்குக் கூடை : பெ. அழுக்குத் துணிபோடும் கூடை (துணிக் கூடை).

அழுக்குசோப்பு : பெ. துணி துவைக்கும் சோப்பு (சுண்ணாம்பு சோப்பு).

அழுகல் : பெ. பதன்ழிந்தது.

அழுகல் நோவு : பெ. பயிர்நோய்.

அழுகுணி : பெ.1. ஏமாற்று 'அழுகுணி ஆட்டம் ஆடறே', 2. ஏமாற்றுக்காரன் 'இவே சரியான அழுகுணி'

அழுஞ்சி : பெ. ஒருவகை மரம்.

அழுத்தக்காரன் : பெ. தந்திரபுத்தியுள்ளவன் "அழுத்தக்காரன் சந்தெக்கிப் போனா புழுத்த கத்திரிக்கா(ய்)".

அழுதபுள்ளெ சிரிச்சதாம் : கழுதெபாலெக் குடிச்சதாம் : அழும் சிறு பிள்ளைகளைச் சிரிக்க வைக்கக் கூறுதல்.

அழுது தொலச்சே(ன்) : வி.மு. வெறுப்புடன் கொடுத்தல் 'வேற வழியில்லாமெ பணத்தெ அழுது தொலச்சே'.

அழுது போட்டாங்கொ : வி.மு. அழுதுவிட்டார்கள்.

அழுந்ததுது : வி.மு. உறுத்துகிறது.

அழும்பு : பெ. 1. தீம்பு, 2. தொந்தரவு 'பசங்களோட அழும்பு தாங்க முடியலே'

அள்ளு : பெ. நெசவுக் கருவி.

அள்ளுதல் : தொ.பெ. 1. கையால் முகத்தல், 2. வாரிக்கொண்டு போதல்.

அள்ளு தொண்ணை : பெ. சமுக்காளம் நெய்யப் பயன்படும் கருவி.

அள்ளை : பெ. பக்கம்.

அள்ளைமறை : பெ. பக்கங்களில் வெள்ளை நிறம் கலந்த காளை.

அளகாமல் : அளக்காமல் : வி.எ. படியைத் திருப்பி அளத்தல் 'அளந்து ஒருபடி அளகாமல் ஒருபடி'.

அளகோலு : பெ. நெசவுக்கருவி - நூலுக்குள் இருக்கும் நீளத்தடி.

அளவு : பெ.1. எல்லை, 'இந்த அளவோட பேச்சே நிறுத்திக்கோ; 2. பரிமாணம்.

அளவுநாடா : பெ. அளக்கும் டேப்.

அற்பம் : பெ. 1. இலேசு, 2. சிறுமை, 3 சின்னபுத்தி.

அற்பாயுசு : பெ. குறைந்த வாழ்நாள்.

அறியாத புத்தி : பெ. இளம் பிராயம்.

அறிவுக்கொழுந்து : பெ. முட்டாளைக் குறிப்பிடுதல்.

அறுக்கறது : தொ.பெ. அறுவடை 'அறுக்கறதுக்கு வந்திடுச்சு'.

அறுகமணம் எடுக்கறது : தொ.பெ. குவளையில் வெற்றிலை அறுகு கிள்ளிப் போட்டு நலுங்கு எடுக்கும் திருமணச் சடங்கு.

அறுத்த கைக்குச் சுண்ணாம்பு தரமாட்ட(ன்) : கஞ்சன்.

அறுத்தவ(ள்) : வி.அ.பெ. பார். அவமங்கிலி "அறுத்தவ அப்ப னூட்லயிருந்தா என்ன புருஷ வூட்ல இருந்தா என்ன?

அறுத்தா : வி.எ. கணவனை இழந்தால் "அறுத்தா அப்பனூர் பொழச்சா புருசனூரு"

அறுப்பாளுங்க : பெ. அறுவடை செய்வோர்.

அறுப்பு : பெ. அறுவடை.

அறுப்புக்காலம் : பெ. கதிரறுக்கும் பருவம்.

அறுப்புக்கூலி : பெ. கதிரறுக்குங் கூலி.

அறுப்புச்சீட்டு : பெ. கதிரறுக்கக் கொடுக்குமுத்தரவு.

அறுப்புமிசினு : பெ. மரம் அறுக்கும் இயந்திரம்.

அறுவதாந்தழை : பெ. மூலிகைச்செடி.

அறுபடலெ : வி.மு. அறுபடவில்லை.

அறுவதாம்கம்பு : பெ. அறுபத்தைந்து நாளில் விளையும் கம்பு வகை.

அறுவாமுடி : பெ. ப்க்கவாட்டில் வரும்படி போடும் கொண்டை (கொடுவா முடி, கோடாலி முடுச்சு).

அறுவு : அறிவு : பெ.

அறுவுகெட்ட பயலெ மூக்கெ ஒடச்சிருவெ : வசை.

அன்டர்வேரு : பெ. உள்ளே அணியும் காற்சட்டை (ஆங்கிலம் : டாயரு).

அன்றதுதானே : வி.மு. என்பதுதானே.

அன்றாடங்காய்ச்சி : பெ. 1. அன்றன்று கிடைக்கும் பணத்தால் உணவு பெறுபவன், 2. ஏழை.

அன்னக்காவடி : பெ. 1. சாப்பாடு வாங்க உதவும் கரண்டிவகை, 2. தரித்திரன்.

அன்னக்குத்தி : பெ. சாப்பாடு எடுக்க உதவும் கரண்டி (அன்னக்கை).

அன்னசத்திரம் : பெ. அன்னமிடுஞ்சாலை.

அன்னத்தன்னைக்கு : வி.அடை. அன்று.

அன்னத்தாரை : பெ. குதிரையின் முதுகிலுள்ள நீளமான கறுப்புக்கோடு.

அன்னதானம் : பெ. இலவசமாகப் போடும் உணவு.

அன்னநடை : பெ. பெண்களின் நடையில் ஒருவகை.

அன்னப்பக்கி : பெ. அன்னப்பறவை.

அன்னப்பிச்செ : பெ. வீடு வீடாகச் சென்று உணவு வாங்குதல் "தன்னெப் பெத்த தாயி அன்னப்பிச்செ எடுக்கிறா(ள்), புள்ளெ தங்கச்சரம் போடச்சொல்லித் தொங்கித் தொங்கி அழுகிறா(ள்).

அன்னப்பட்சி : பெ. அன்னபட்சியின் டாலர் உள்ள கழுத்தணி.

அன்னம் : பெ. 1. கதிரிலுள்ள மணிகள் 'கம்பு அன்னம் புடுச் சிடுச்சு' 2. சோறு. "அன்னமிட்ட ஊட்டுக்குக் கன்ன மிட்ட மாதிரி".

அன்னவாகனம் : பெ. சிவன், பார்வதிக்குரிய வாகனம்.

அன்னாங்காலு : பெ. மாட்டின் ஒரு காலையும் மூக்கணாங் கயிற்றையும் இணைத்தல்.

அன்னாச்சிப் பழ நோவு : பெ. கரும்பை இந்நோய் தாக்கினால் அன்னாசிப் பழத்தின் மணம் இருக்கும்.

அன்னாச்சிபூ : அன்னாசிப்பூ : பெ. வாசனைப் பொருள் (போர்ச்சுக்கீசியம் - அன்னாசி).

அன்னாட்டி : வி.அடை . இல்லாவிட்டால்.

அன்னியோன்யம் : பெ. 1. ஒற்றுமை, 2. நெருக்கம்.

அன்னைக்கு அன்னைக்குச் செய்யற வேலை : பெ. அன்றாடும் செய்யும் வேலை.

அனத்தம் : பெ. பொல்லாங்கு 'நமக்கு அனத்தம் வந்து நேந்த திப்போ'.

அனாதை : பெ. யாருமற்றவர்.

அனாமத்து : பெ. பிரத்தியோகமானது 'இது அனாமத்துப் பணம்'.

அனுசரிச்சு : அனுசரித்து : வி.எ.

அனுப்புச்சு : அனுப்பி : வி.எ. 'நாளைக்கி அனுப்புச்சு குடு'.

அனுபோவம் : அனுபவம் : பெ.

அனுபோலி : அனுபவி : ஏ.வி. சொத்தெ நீயே அனுபோவிக் கலாம்.

அனுமார்பிடி : பெ. பிடி. மணியின் வகை.

அஸ்கா : பெ. வெள்ளைச் சர்க்கரை.

அஸ்தமனம் : பெ. அஸ்தமிக்கை.

அஸ்திவாரம் : பெ. 1. அடித்தளம், 2. ஆதாரம்.

## ஆ

ஆக்கங்கெட்ட : பெ. எ. விருத்திகெட்ட 'சுத்த ஆக்கங்கெட்ட பயல்'.

ஆக்கங்கெட்ட கூகை : பெ. வசை.

ஆக்கறது : ஆக்குதல் : தொ.பெ. சமைத்தல் : "ஆக்கப் பொறுத்த வனுக்கு ஆறாப் பொறுக்கலே".

ஆக்கி அரித்தல் : தொ.பெ. சமைத்தல் "ஆக்கி அரிச்சா ஆம்பிளைக்கு சந்தோசம்? பூசி வழிச்சா பொம்பிளைக்கு சந்தோசம்".

ஆக்கிப்போடறது : தொ.பெ. வளைகாப்பு 'புள்ளெக்கு ஆக்கிப்போடப் போறோ வாங்க'

ஆக்கினை : பெ. தண்டனை 'அடிச்சாரைச் சொல்லியழு ஆக்கினைகள் பண்ணுகிறேன்'.

ஆக்கு : ஏ.வி. 1. சமை, 2. செய்.

ஆக்குடி : இடை : 1. அதாவது, 2. ஆக மொத்தத்தில்,

ஆக்குப்பூட்டு : பெ. ஒருவகை முடிச்சு.

ஆக்கை : பெ. 1. நார், 2. விளாறு.

ஆக்கைக்கட்டறது : தொ.பெ. வெற்றிலைக் கொடியை அகத்தி மரத்தோடு சேர்த்து வாழை நாரால் போடும் முடிச்சு.

ஆக்கைபோட்டுத் தண்ணி வாத்தல் : தொ.பெ. புளிய விளாறைக் கொண்டு மணமக்களுக்கு நீவி பின் அந்த விளாரை மூன்றுமுறை தாண்டச் செய்து குளிப்பாட்டுதல்.

ஆக்சாபிளேடு : பெ. இரும்பை அறுக்கும் கருவி.

ஆகுல்லே : வி.மு. ஆகவில்லை.

ஆகலையா : வி.மு. சரியாயிற்றுதானே 'வாங்குன செலவுக்கு அம்பது ரூவா கொடுத்திருக்கே ஆகுலையா'.

ஆகாது : வி.மு.1 பகை 'அவுங்க ரெண்டு பேருக்கும் எப்பவுமே ஆகாது',

2. முடியாது 'கெடாய சாமிக்கு வெட்டறதா அதெல்லாம் ஆகாது'.

ஆகாமல் : வி.எ. உறவு இல்லாமல் 'கண்டதெச் சொல்லி எங்க இரண்டு பேருக்கும் ஆகாம செஞ்சுட்டாங்க'.

ஆகாரம் : பெ. உணவு.

ஆகாவலி : பெ. ஒன்றுக்கும் உதவாதவன் "ஆனதுக்கு ஒரு ஆகாவலி", 2. பயனற்றது.

ஆகோணும் : ஆகவேண்டும் : வி.மு.

ஆங்காரி : பெ. ஆணவம் பிடித்தவள்.

ஆங்காரொ : அகங்காரம் : பெ. ஆணவம்.

ஆச்சா : பெ. காட்டுமரம்.

ஆச்சா : வி.மு. செய்தாகிவிட்டதா.

·ஆச்சாங்கல்லு : பெ. கல்லைக் கையின் பின்புறம் நிறுத்திப் பிடித்தல்.

ஆச்சி : பெ.1 அக்கா, 2. சீதனம் - சீர்வரிசை, 3. பாட்டி.

ஆச்சி : வி.மு. ஆயிற்று (ஆச்சு).

ஆசனம் : பெ. இருக்கை.

ஆசாமி : பெ.1. பார். 2. அவிய, 2. ஆள் (அரபு).

ஆசாரம் : பெ.1. அறை 'இந்த ஊட்லெ எட்டு ஆசாரம் இருக்கு'

2. சாஸ்திர முறைப்படி ஒழுகுகை, 3. வீட்டின் முன் பகுதியிலுள்ள பெரிய அறை (உருது).

ஆசாரி : பெ.1. பொன்வேலை செய்பவன் "பூசாரி புளுகன்னா ஆசாரி அண்டப்புளுகன்" 2. மரவேலை செய்பவன்.

ஆசை ஆட்டம் கண்டிருச்சு : வி.மு. எண்ணம் நிறைவேறுமா என்ற சந்தேகம் ஏற்படின் கூறுதல்.

ஆசைநாயகி : பெ. வைப்பாட்டி.

ஆஞ்சூரடிக்குது : வி.மு. ஆண்வாடை அடிக்கின்றது.

ஆஞ்சோளொ : ஆண்சோளம் : பெ. தடித்த நீளமான கதிர்.

ஆட்காட்டி வெரலு : பெ. சுட்டுவிரல்.

ஆட்டங்கட்டறா(ள்) : வி.மு. கை, கால்களை வேகமாக அசைத்தவாறு சத்தமிட்டுச் சண்டையிடுகிறாள் (தாம் தூம்னு குதிக்கிறா(ள்) ).

ஆட்டம் : பெ. 1. அதிகாரம், 'இவனோட ஆட்டம் தாஸ்தி ஆயிடுச்சு' 2. காட்சி 'மொதலாட்டம் போலாமா', 3. கூத்து, சினிமா, 'ஆட்டம் பாக்கப் போலாமா'.

ஆட்டமா : இடை. போல 'கழுதையாட்டமா கத்தறா(ன்), "ஆரார் ஆட்ட அத்தைமார் ஆட்ட" (ஆட்ட).

ஆட்டாங்கல்லு : ஆட்டுக்கல் : பெ.

ஆட்டாரங்கல்லு ஆறுமுகன் : பெ. ஆட்பெயர்.

ஆட்டிட்டு : ஆட்டிக்கொண்டு : வி.எ. 'ஆட்டிட்டு வர்றா பாரு' "தொட்டிலெ ஆட்டிட்டு கொழந்தெயெயும் கிள்ளி னாப்பலெ".



ஆட்டின் : பெ. சீட்டாடச் சீட்டுக்களிலுள்ள நான்கு குறிகளில் ஒரு குறியீடு.

ஆட்டு : ஏ.வி. அசை 'காலாட்டு' 2. அரை 'மாவாட்டு'

ஆட்டுக்காரெ : ஆட்டுக்காரன் : பெ. ஆடு மேய்ப்பவன்.

ஆட்டு பூட்டு : பெ. சுற்றி விளையாடும் சிறுமியர் விளையாட்டு.

ஆடகூட்டம் : பெ. ஓர் இனம். .

ஆடம்பர(ம்) : பெ. வீண்பகட்டு.

ஆடாதோடை : பெ. மூலிகை.

ஆடி அடங்குதல் : தொ.பெ. ஆணவம் அடங்குதல் 'ஆடி அடங்கிப் போனான்'

ஆடிப்பட்டம் : பெ. ஆடி மாதத்துப் பயிரிடும் பருவம் 'ஆடிப் பட்டம்' தேடி வெதெ' (மாதத் தொடக்கத்தில் விதைப் பது முதல் பட்டம்; மாதத் இறுதியில் விதைப்பது கடைசிப் பட்டம்).

ஆடிப்பெருக்கு : பெ. பதினெட்டாம் பெருக்கு.

ஆடு : பெ. விலங்குவகை "ஆடு பகெ குட்டி ஒறவு" (வகை : 1. செம்பிலி ஆடு, 1.1. கம்பளியாடு, 1.2. கீழக்கரிசல், 1.3 . கோயமுத்தூர் ஒய்ட்டு,1.4. சல்போக்கு, 1.5. டார்செட்டு, 1.6. மாண்டியா, 1.7.மெட்ராஸ் ரெண்ட், 1.8. மேச்சேரி அல்லது சேலத்து ஆடுகள், 2. வெள்ளாடு, 2.1. டெலிச் சாரி, 2.2. பள்ளை ஆடு, 2.3. குறும்பை ஆடு).

ஆடு : ஏ.வி. 1. நடனமாடு, 2. விளையாடு.

ஆடுசல்லை : பெ. சமுக்காளம் நெய்யப் பயன்படும் கருவி.

ஆடுதின்னாப்பாளை : பெ. மூலிகைச்செடி.

ஆடுபுலி ஆட்டம் : பெ. விளையாட்டின் பெயர்.

ஆடுமாடு : பெ. கால்நடை "ஆடுமாடு இல்லாதவன் அடெ மழெக்கி ராஜா, பெண்டு பிள்ளை யில்லாதவன் தண் டுக்கு ராஜா." ஆடை : பெ. 1. உடை "ஆடெயில்லா தவன் அரெ மனுசெ", 2. பால் ஏடு,

ஆண்டி : பெ. 1. பரதேசி, 2. பிச்சைக்காரன் "ஆண்டிக்கு அவம் பாடு தாசனுக்குத் தன்பாடு", 3. வசதியற்றவன் 'எல்லாம் போயி ஆண்டியாயிட்டான்'.

ஆண்டிப்பண்டாரம் : பெ. பண்டாரச் சாதியின் உட்பிரிவு.

ஆணி : பெ. இரும்பாணி.

ஆணிக்காலு : பெ. பாதத்தில் குத்திய முள் உள்ளே தங்கி அந்த இடம் கறுப்பாதல், 2. பாதத்தில் தானாகவே ஆணி வருதல்.

ஆணிச்சு வருது : வி.மு. பருமனாகச் செழித்து வருகிறது.

ஆத்தங்கரெ : ஆற்றங்கரை : பெ. "ஆத்தங்கரெ புள்ளெ யார் நெலெக்க மாட்டார்.

ஆத்தஞ்சோரி அம்மன் : பெ. இருளர், மலசர் ஆகியோர் தெய்வம்.

ஆத்தமாண்டாதவன் : ஆற்றமாட்டாதவன் : வி.அ. பே. பொறுமை யற்றவன் "ஆத்த மாண்டதவனுக்கு பொண்குடுத்து ஆத்தாளும் மகளும் சேந்து ஆக்கியது போல".

ஆத்தா : பெ. 1. அம்மா "ஆத்தாளெப் பழிச்சாலும் ஆத்தெப் பழிக்காதே"

2. தாய்வழி தந்தைவழிப் பாட்டி.

ஆத்தி : பெ. மரவகை.

ஆத்தி : ஆற்றி : வி.எ. 'ஆத்திக்குடி'.

ஆத்திநாரு : பெ. குழந்தை நலுங்கினால் இந்நாரைத் திரித்து இடுப்பில் கட்டுவர் "ஆத்திநாரு கோமணமும் ஆக்கி உட்டாளா மாதகே".

ஆத்திரம் : பெ. அவசரம் "ஆத்திரத்தக்கு ஆளுட்டா சாத்தி ரத்துக்கு வந்து சேர்வான்".

ஆத்து : ஏ.வி. ஆட்டு 'தொட்டல் ஆத்து'.

ஆத்துக்கருவாடு : ஆற்றுக் கருவாடு : பெ.

ஆத்துக்காடு : பெ. ஆற்றை யொட்டிய காட்டுப்பகுதி.

ஆத்துக் குடுக்கறது : தொ. பெ. ஏமாற்றிச் செல்லுதல் 'அவெ ஆத்துக் குடுத்திட்டுப் போயிட்டாண்டா".

ஆத்துக்கோல் : பெ. ஆற்றிற்கு 'ஆத்துக்கோல் அந்தப்பக்கம்'.

ஆத்துத் திருவிழா : பெ. கிராமங்களில் ஆற்றோரங்களில் நடப்பது.

ஆத்துதல் : தொ.பெ. 1. ஈரமுலர்த்துதல், 2. குணமாக்குதல்.

ஆத்துப்பாசனம் : பெ. ஆற்றுநீரைக் கொண்டு செய்யப்படும் விவசாயம்.

ஆத்துமேடு : பெ. ஆற்றுக்கரை மேடு.

ஆத்துலெ : ஆற்றில் : பெ. "ஆத்துலெ கொட்டினாலும் அளந்து கொட்டு".

ஆத்து வாய்க்கா(ல்) : பெ. ஆற்றிலிருந்து விவசாயத்திற்கு நீர் வரும் அகலமான பெரிய வாய்க்கால்.

ஆதாண்ட வேர் : பெ. மூலிகை.

ஆதாயம் : பெ. "ஆதாயம் இல்லீன்னா செட்டி ஆத்தோடு போவானா".

ஆதி : பெ. தொடக்கம் "ஆதியில் வந்தவ(ள்) வீதியில் போனாள்".

ஆதிகூட்டம் : பெ. ஓர் இனம்.

ஆதிக்கம் : பெ. தலைமை 'வெள்ளாமையிலெ மாடு பூந்து ஆதிக்கம் பண்ணிடுச்சு'.

ஆதிவேல் : பெ. சிவராத்திரி விழாவில் பயன்படுத்தும் வேல்.

ஆதேஷ் மந்திரம் : பெ. பண்டார சாதியில் இறந்தவர் மோட்ச மடைய சவத்தின்முன் பெரியவர்கள் உட்கார்ந்து சொல்லும் மந்திரம்.

ஆந்திரா குரணை : பெ. ஆந்திரா மசூரியின் பொடி அரிசி.

ஆந்திரா மசூரி : பெ. அரிசிவகை.

ஆந்தைகூட்டம் : பெ. ஓர் இனம்.

ஆந்தையன் : பெ. ஆட்பெயர்.

ஆப் : பெ. கல், விறகு ஆகியனவற்றைப் பிளக்க, பிளவில் வைக்கும் மரத்துண்டு அல்லது சிறிய கல்.

ஆப்பக்காலெ : ஆப்பக்காலன் : பெ. காலை விரித்து நடப்பவன்.

ஆப்பக்கொடலு சக்கரை : பெ. பார். அஸ்கா.

ஆப்பாரம் : பெ. சரட்டு.

ஆப்பிரிக்க எண்ணெய்ப் பனை : பெ. பாம் ஆயில் எடுக்கும் மரம்.

ஆப்பு : பெ. 1. நெசவுக் கருவி ., 2. பொருள்களைத் தூக்க முடியாத போது தாங்கிபோல் தூக்க உதவுவது.

ஆப்புக்குண்டா : பெ. ஒருவகைப் பாத்திரம்.

ஆப்புட்டுக்கிட்டான் : வி.மு. அகப்பட்டுக் கொண்டான்.

ஆப்பொ : ஆப்பம் : பெ. தோசைவகை.

ஆப்பை : அகப்பை : பெ. "சட்டியிலே இருந்தாத்தான் ஆப்பையிலே வரும்".

ஆப்பேண்டு : பெ. முட்டிவரை அணியும் கால்சட்டை.

ஆம்படையான் : அகமுடையான் : பெ.கணவன்.

ஆம்பிளே : பெ. ஆண்பிள்ளை "காட்டெ கெடுத்தான் ஆம்பிளே ` ஊட்டெ கெடுத்தாள் பொம்பிளே" (ஆம்பளே).

ஆம்லான் : பெ. நெல்லிக்கனிவகை (ஆங்கிலம்).

ஆமரக்கத்தி : பெ. பனை ஓலையை அறுக்க உதவுவது.

ஆமரம் : ஆண்மரம் : பெ.

ஆமா கிழிஞ்சி போச்சு : சலிப்பின்மேல் கூறுதல் (ஆமா கிழிஞ்சது போ).

ஆமாஞ்சாமி : பெ. எது கூறினாலும் ஆமாம் போடுபவன் 'இவனா, இவஞ் சரியான ஆமாஞ்சாமி'.

ஆமானுங்க : இடை. 1. ஆம், 2. சரி.

ஆமை மடி : பெ. சிறுமடி.

ஆமை வண்டு : பெ. வண்டில் ஒருவகை.

ஆய்ஊய் : இடை. வெற்று மிரட்டல் 'ஆய்ஊங்கான்'.

ஆய்மரம் : பெ. மரவகை (ஆயமரம்).

ஆயக்காட்டு ஏரியா : பெ. ஆற்றுநீர்மூலம் விளையும் வயல் பகுதி.

ஆயத்தம் : பெ. அணியம்.

ஆயபஞ்சு : பெ. மரவகை.

ஆயா : பெ.1. அப்பாவின் அம்மா, 2. அம்மா (போர்ச்சுக்கீசியம்).

ஆயிஅம்மன் : பெ. தெய்வம்.

ஆயிடுது : வி.மு. ஆகிவிட்டது 'சோறு ஆயிடுது'

ஆயிப்போகும் : வி.மு. ஆகிவிடும் 'சித்தெ இருசோறு ஆயிப் போகும்'

ஆயிப்போச்சு : வி.மு. தீர்ந்துவிட்டது 'பருப்பு ஆயிப்போச்சு' (ஆயிடுச்சு).

ஆயிரங்கண் ரஷ்தாளி : பெ. ரஷ்தாளிவகை.

ஆயிரங்கால் சடை : பெ. சடைப்பின்னல் வகை.

ஆயிரங்கால் பூச்சி : பெ. பார். அட்டை

ஆயுசு : ஆயுள் : பெ.

ஆயுசு நூறு : பெ. நினைக்கும் ஒருவர் வந்து சேர்ந்தால் அவருக்கு ஆயுசு நூறு எனும் பொருளில் கூறுதல்.

ஆயுசு முடிஞ்சது : வி.மு. ஒருவர் இறப்பின் சமாதானாம் அடையும் வகையில் சொல்லுதல் 'ஆயுசு முடிஞ்சுது என்ன பேசி என்ன'.

ஆய்ஸ், அச்சு : இடை. தாலாட்டுப் பாடல் அடிகளை முடிக்கும் போது சொல்வது.

ஆர் ஆரு : பெ. யார். யாரு.

ஆர்கண்டி : பெ. மெல்லிய துணிவகை.

ஆர்சு : பெ. கதவின்மேல் வளைந்துள்ள பகுதி.

ஆர் பிரி : பெ. ஒன்றாகத் திரிக்கப்பட்ட ஆறு குடிக்கயிறுகள்.

ஆர்மினியப் பொட்டி : ஆர்மொனியம் : ப. (ஆங்கிலம்).

ஆரக்கால் : பெ. கும்பத்தில் வந்து குவியும் வண்டிச் சக்கரத்தின் பாகம்.

ஆரஞ்சி : பெ. கிச்சிலி.

ஆரஞ்சி மிட்டாயி : பெ. மிட்டாய் வகை.

ஆரம் : பெ. மாலை.

ஆராச்சும் : யாராவது : வி.அடை.

ஆராட்டம் : பெ. கோப உணர்வின் மிகை நிலை.

ஆராமீனு : பெ. மீன்வகை.

ஆரார் : யார் யார் : பெ. 'ஆராரோ போறாங்கோ'.

ஆரியக்கல்லு : பெ. திருகுகல்.

ஆரியவித்தை : பெ. அரியசெயல்.

ஆரு : யார் : பெ.

ஆரூடம் : பெ. சோதிடம்.

ஆரூலிக்குசு : பெ. ஆர்லிக்ஸ் (ஆங்கிலம்).

ஆரை : பெ. கீரைவகை (நீராரை).

ஆரோட்டுமாவு. பெ. கூவைக்கிழங்குமா (ஆங்கிலம்).

ஆல்ட் ஆயிக்கும் : வி.மு. தங்கிவிடும் 'பஸ் அங்கியே ஆல்ட் ஆயிக்கும்' (ஆல்ட் -ஆங்கிலம்).

ஆலச்சட்டி : பெ. சிறியதாழி.

ஆலவட்டம் : பெ. கவன ஈர்ப்பு.

ஆலவிருச்சம் : பெ. பெருகி விரிந்த ஆலமரம்.

ஆலாத்தி எடுத்தல் : தொ.பெ. திருமணச்சடங்கு.

ஆலாத்தித்தட்டு : பெ. பள்ளர் திருமணத்தில் மணமக்களுக்கு எடுக்கப்படும் மூன்றுவகை ஆலாத்தியில் இரண்டாவது எடுக்கப்படும் பித்தளைத் தட்டு.

ஆலி : பெ. மாட்டு வியாபாரத்தில் ஏழு ரூபாயையும் எழுபது ரூபாயையும் குறிக்கும் சொல்.

ஆலிதட்டை : பெ. மாட்டு வியாபாரத்தில் எழுபத்து ஐந்து ரூபாயைக் குறிக்கும் சொல்.

ஆலிவாயன் : பெ. ஆட்பெயர்.

ஆலை : பெ. 1. கரும்பாலை, 2. பஞ்சாலை.

ஆலை அடுப்பு : பெ. திருமணத்திற்கு முதல் நாள் சமையல் செய்யப் போடும் அடுப்பு.

ஆலைக்குழி : பெ. கரும்பாலையில் சாறேற்கும் இடம்.

ஆலைத்தொட்டி : பெ. கருப்பஞ்சாறு காய்ச்சும் சால்.

ஆவண்கூட்டம் : பெ. ஓர் இனம்.

ஆவத்து : ஆபத்து : பெ. "ஆவத்துக்குப் பாவமில்லே"

ஆவலை : ஆகவில்லை : வி.மு.

ஆவாசம் : பெ. 1. ஆகாயம், 2. ஆவேசம்.

ஆவாசவாணி : பெ. ஆக்ாயவாணி.

ஆவாரஞ்செடி : பெ. செடிவகை.

ஆவி : ஆகி : வி.எ. 'கலியானோ ஆவிப்போச்சு'.

ஆவி அடங்கிருச்சு : வி.மு. உயிர் போய்விட்டது.

ஆள் மாறாட்டம் : பெ. வேறாளாகத் தன்னைக் காட்டி வஞ் சிக்கை 'ஆள் மாறாட்டம் நடந்திருக்கு'.

ஆள்மேலே ஆளைப் போடாதீங்க; ஒருவர் மேல் புருவர் புறங் கூறாதீர்கள். ஆளாப்பாருடா சோளக்காட்டுக் குள்ளே : வசை.

ஆளாக்கு : பெ. உழக்கு (1,8 பாகம்) "கறக்கறது ஆளாக்குப் பாலு ஒதெக்கறது பல்லுப்போக" (ஒளக்கு).

ஆளு அம்பு : பெ. வேலை ஆள் 'தானியத்தெ ஆளு அம்புக் கெல்லா கொடுப்போம்'

ஆளுக்காரன் : பெ. வேலையாள்.

ஆளுக்கொடி : பெ. கொடிவகை ; வயற்களை.

ஆளே தொலிச்சு எடுத்துடுவே : என்னை வாட்டி எடுத்துவிடுவாய்.

ஆளை அருகம்புல்லு : பெ. புல்வகை : வயற்களை.

ஆறுக்குஆறு : பெ. ஆறடி நீளம், ஆறடி அகலம்.

ஆறுகால் சடை : பெ. சடைப்பின்னல் வகை.

ஆறுகுத்தம் நூறுபொா(பி)ழை எது இருந்தாலும் பரவாயில்லை; ஒரு திருமணம் நடக்க, பல பிழைகள் புறக்கணிக்கப் படுதல்.

ஆறுலையே : வி.மு. சமாதானம் ஆகவில்லையே 'ஆறுலையே எம்மனசு'.

ஆறுவள்ளக்காடு : பெ. ஒரு ஏக்கர் நிலம்.

ஆன்லா : பெ. நெல்லிக்கனி வகை (ஆங்கிலம்).

ஆனக்கொம்பு : பெ. ஆறு மாதத்தில் விளையும் ஒருவகை நெல் (ஆணைக்கொம்பன்).

ஆனதுனாலே : ஆகையினாலே : வி.அடை.

ஆனபுத்தி : பெ. தம்மால் இயன்ற அளவு புத்தி 'ஆனபுத்தி சொன்னாலும் அவனுக்கு ஏறாது'

ஆனமுட்டு சொல்லிட்டே : வி.மு. என்னால் இயன்றவரை சொல்லிவிட்டேன்.

ஆனிலே : ஆனியில் : பெ. "ஆனிலே பூனையுங் குடிபோகாது".

ஆனை அசவு மாடு : பெ. நிற்கும்போது முன்னும் பின்னும் ஆடக்கூடிய மாடு நல்லதல்ல.

ஆனைக்கரளி கத்தாழை : பெ. ஒருவகை நீண்ட கற்றாழை.

ஆனைக்காதன் : பெ. ஆட்பெயர்.

ஆனைக்கால் சட்டி. பெ. ஒருவகைப்பாத்திரம்.

ஆனைக்காலு : யானைக்கால் : பெ. பெருங்கால்.

ஆனைச்சொரியன் : பெ. மரவகை.

ஆனைச்சொள்ளெ : பெ. பார். 1. அசுவணி.

ஆனைபுடுக்கன் : பெ. மரவகை.

ஆனைபுளியன் : மரவகை.

ஆனைமுள்ளு : பெ. முள்வகை.

ஆஸ் : பெ. ஒன்று, பதினான்கு என்னும் எண்களைக் குறிக்கும் சீட்டாட்டச் சீட்டு (பிரெஞ்சு, ஆசு).

ஆஸ்தி : பெ. 1. செல்வம், 2. சொத்து "ஆசைக்கொரு புள்ளே ஆஸ்திக்கொரு பையன்" 3. பொருள்.

ஆஸ்திரேலியன் அன்னாசி : பெ. பழவகை (ஆங்கிலம், மானிஸ்ட்டிரியா).

ஆஸ் துருப்பு : பெ. ரெம்மி ஆட்டத்தில் ஒருவகை.

## இ

இக்கட்டாலே : வி.அடை. இந்தப் பக்கம்.

இக்கட்டு : பெ. தொல்லை.

இக்கட்டே : வி.அடை. இங்கே.

இக்கு : இடை. செய்தியில் பொடி வைத்துப் பேசுதல் 'இக்கு வச்சுப் பேசறா(ள்)'

இக்கட்டு : பெ. அடை. மனத்தில் ஒன்றை வைத்துக் கொண்டு வெளியே ஒன்று பேசுதல் 'இவ சரியான இக்குட்டுக்காரி; இவ பேச்செ நம்பவே முடியாது'.

இக்குது : வி.மு. இருக்கின்றது.

இங்கனக்குள்ளெ : வி.அடை. இதற்குள்ளே (இவடத்துக்குள்ளெ, இவத்திகாலேயெ).

இங்கிட்டு : வி.அடை. இங்கே.

இங்கிதம் : பெ. சமயோசித நடை "இங்கிதம் தெரியாதவன் சங்கீதம் தெரிஞ்சென்ன."

இங்க்மரம் : பெ. மரவகை.

இங்கிதா : வி.அடை. இங்குத்தான்.

இங்கிலீசு : பெ. ஆங்கிலம் (ஆங்கிலம்).

இச்சி : பெ. மரவகை.

இசிஇசியினுட்டு : வி.அடை. பல்லைக் காட்டிச்சிரித்தல் 'அவங்கிட்டெ என்னலே இசிஇசியினுட்டு நிக்கறே' (ஈஈயினுட்டு).

இசிஉக்கார்றியா : வி.மு. குழந்தையை மலம் கழிக்கிறாயா எனக் கேட்டல்.

இஞ்சி : பெ. உணவுப்பொருள் "இஞ்சி லாபம் மஞ்சளிலே"

இஞ்சின் காடு : பெ. மின்சாரக் கிணற்றின்மூலம் நீர் பாயும் பூமி.

இட்டாரி : பெ. 1. இரு வேலிகளுக்கிடையே உள்ள மண்பாதை, 2. ஒருவழி காட்டுப்பாதை, 3. குறுகிய மண்பாதை, 4. சிறிய ஏரி (இட்டாலி, இட்டேரி).

இட்லிப்பூ : பெ. அலங்காரச் செடி.

இடத்து மாடு : பெ. வண்டிக்கு, உழவிற்கு இடப்பக்கம் மட்டும் பூட்டுவது (எடத்தெருது).

இடம்பிரி வலம்பிரி : பெ. மூலிகை. குழந்தை நலுங்கினால் தொட்டிலில் கட்டுவர்.

இடமுடங்கா : வி. அடை. 1. சிக்கல், 2. நெருக்கடி 'இடமுடங்கா எதையும் பண்ணாதே'.

இடர் : பெ. இடையூறு.

இடறிட்டுது : வி.மு. 1. ஆடுமாடுகளுக்கு அசைபோட வாய்க்கு வராமல் உணவு தொண்டையில் சிக்கிக் கொள்ளுதல், 2. வழுக்கிவிட்டது.

இடி : பெ. அடி 'நெத்தமும் இடி தப்புதா'

இடிஇடுச்சு ஓஞ்ச மாதிரி இருக்கு : பெரிய சண்டைக்குப்பின் நிலவும் அமைதி.

இடிக்குதேங்கறா : வி.மு. இடிக்கிறது என்கிறான் "ஓரலுக் குள்ளே தலையுட்டுட்டு இடிக்குதே இடிக்குதேங்கறான்."

இடிகுட்டிவாரு : பெ. ஒட்டருள் ஈஞ்சங் கூட்டப் பிரிவினர்.

இடிமேல் இடி கொடைமேல் கொடை : பெ. தீய மாட்டுச்சுழி. 1. நெற்றியில் அல்லது நடுமுதுகில் அருகருகிலுள்ள இரண்டு சுழிகள், 2. முக்கணச் சுழிக்கு மேல் பகுதியில் அல்லது கீழ்ப்பகுதியில் மிக அருகில் இன்னொரு சுழி இருத்தல், 3. ஸ்தான சுழிக்கு அருகருகில் இருத்தல்.

இடுக்கி : பெ. குறடு.

இடுக்கினவள் : வி.அ.பெ. வளர்த்தவள் "பெத்தவளுக்குத்தான் புள்ளெ இடுக்கினவளுக்குத் தளும்பு."

இடுக்கு : பெ. 1. அக்குள், 2. சந்து 'அந்த இடுக்குலெ நின்று பாக்காட்டி என்னோ' (இடுகு).

இடுகாடு : பெ. சுடுகாட்டின் முன்பகுதி.

இடுகோல் : பெ. பாளையைப் பதப்படுத்தும் கருவி.

இடுச்சு : இடித்து : வி.எ.

இடுப்பு சொட்டை ஆடு : பெ. இடுப்பில் மட்டும் வேறு நிறம் உள்ள ஆடு.

இடையுளி : பெ. தச்சுக்கருவி.

இண்டக்கம்பி : பெ. சமுக்காளம் நெய்யும் கருவி.

இண்டம்புடுச்சவன் : வி.அ.பெ. கருமி (பிசுணி).

இண்டம் பொதறு : இண்டம் புதர் : பெ. இந்தப் புதருக்குள் சிக்கினால் வெளி வருவது கடினம்.

இண்டு : பெ. கொடிவகை.

இணுக்கு : பெ. 1. கிள்ளி வைக்கப்பட்ட ஒரு பகுதி 'ஒரு இணுக்கு வெத்தலெ இருந்தா குடு', 2. மிகச் சிறிய அளவு 'ஒரு இணுக்குக்கூட தண்ணி இல்லே'.

இணுக்கு நோவு : பெ. கேழ்வரகில் கதிரில் தோன்றும் நோய்.

இத்தப் பெற : பெ. அடை. இவ்வளவு பெரிய.

இத்தன : வி. அடை. இவ்வளவு 'இத்தன நேரமா'.

இத்தினியூண்டு : பெ. அடை. மிகச் சிறிய (இமுட்டூண்டு).

இத்து : இற்று : பெ. 'துணி இத்துப் போச்சு'.

இத்யாதி : பெ. முதலியன.

இதா : இதுவா : பெ. (கன்னடம்).

இதிலென்ன : வி.அடை. இதற்குள் என்ன?

இதிலென்ன தப்பாக் கெடக்குது : இதில் என்ன தவறு?

இதுக்கு : அடை. ஒரு பேச்சிற்கு 'சும்மா ஒரு இதுக்குச் சொன்னே'.

இந்த ஊரே நமக்கு ஒத்துக்காது : வெளியூர்க்காரர்கள் குறிப் பிடும் சொல் 'இந்த ஊரே நமக்கு ஒத்துக்காது நம்ம ஊர்தான் நமக்கு லாயக்கு',

இந்தக் கதெயெலா இங்க வேணா : இந்தக் கதையெல்லாம் இங்கு வேண்டாம் : தவறுக்கான சூழலைக் கூறின் மறுத்துச் சொல்வது.

இந்தக்கரெ : பெ. இக்கரை.

இந்தப்போகம் கெட்டுப் போச்சு : இம்முறை விளைச்சல் சரி யில்லை.

இந்தாண்டே : வி.அடை : இந்தப் பக்கம்.

இந்திரா காங்கிரஸ் வேட்டி : பெ. பச்சை, சிவப்பு, வெள்ளை கரையுள்ள வேட்டி.

இந்நத்த நா : இன்றைய நாள் : வி.அடை. 'இந்நத்த நா சனி கெழமெதா போயிட்டு வந்தே'.

இப்பத்த : இப்பொழுதிய : பெ. அடை. 'இப்பத்த கேள்வி என்னன்னா'.

இப்பத்துக்கு : இப்போதைக்கு : வி.அடை.

இப்பலையே : இப்பொழுதே : வி.அடை (இப்பலெ).

இப்பியா : இப்பொழுதா : வி.அடை.

இம்புட்டு : பெ. 1. இவ்வளவு 'இம்புட்டு நேரமா வரதுக்கு', 2. சிறியது 'முகம் இம்புட்டாகிப் போச்சு' (இமுட்டு).

இம்புட்டுதா : பெ. இவ்வளவுதான்.

இம்மட்ட பையனிலிருந்தே : சிறுவனாய் இருக்கும்பொழுதே.

இம்முசு : பெ.1. துன்பம் 'உங்கூட பெரிய இம்முசு', 2. தொல்லை 'இமிசை பண்ணாமே இரு' (இமுசு, இமிசை).

இமுட்டோட : இத்தோடு : வி.அடை.

இமெ : பெ. கண்ணிமை : "இமெக் குத்தம் கண்ணுக்குத் தெரி யுமா?"

இயல்வாகை : பெ. மரவகை.

இராசயோகம் : பெ.1. அதிர்ஷ்டம், 2. யோகவிசேஷம்.

இராஜாப் பாண்டி : பெ. பல்லாங்குழியாட்ட வகை.

இருக்கமாட்டாம திரியறாள் : வி.மு. வலிய வம்பை இழுக்கின்றாள்.

இருக்கமுடியாமெ பண்ணிக்கறது : வலிய வம்பை வாங்குபவர் களைக் குறித்தல்.

இருக்குதில்லியோ : இருக்குமல்லவா : வி.மு.

இருகாது : இருக்காது : வி.மு.

இருசு : பெ. வண்டியின் நடு அச்சு.

இருட்டறதுக்கு மொதலெ : இருட்டுவதற்கு முன்பே : வி.அடை.

இருட்டுட்டுலெ சண்டை போட்டாப்பலெ இருக்கு : கசமுச எனவும் பரபரப்பாகவும் இருத்தல்.

இருத்திட்டாங்க : வி.மு. இருக்க வைத்துக் கொண்டார்கள்.

இருதயரேகை : பெ. இக் கைரேகை வலிமையாய் இல்லா விட்டால் பயம், நோய், கவலை இருக்கும்.

இருந்தா(ல்) ஒண்ணு இல்லாட்டி ஒண்ணு பேசப்படாது; முன்னால் ஒன்று பின்னால் ஒன்று பேசக்கூடாது.

இருந்திருந்து சொல்லு : நிறுத்தி நிறுத்திச் சொல். 'மடமடன்னு சொல்லாமெ இருந்திருந்து சொல்லு'.

இருந்துச்சு : வி.மு. 1. இருந்தார் 'மாமனாரு நேத்து இருந்துச்சு', 2. இருந்தாள் 'ஊட்டுக்காரி நேத்து இருந்துச்சு', 3. இருந்தான் 'தம்பி நேத்து இருந்துச்சு'.

இருந்து போட்டுத்தா : இருந்துவிட்டுத்தான் : வி.எ.

இருப்பு : இருப்பிடம் : பெ. 'இருப்பு எங்கே?'

இருபதாம் நெம்பர் : பெ. கைத்தறி நெய்யப் பயன்படும் நூல்.

இருபாறை : பெ. மாட்டுவிலை பேசப்படும்போது 2,000 ரூபாயைக் குறிக்கும் சொல் (காளை).

இருபோகக் கரை : பெ. இருமுறை விளைவு (இருபோகம்).

இரும்புக்கட்டர் : பெ. இரும்பு வெட்டுங் கருவி (கட்டர் ஆங்கிலம்).

இரும்புக்கட்டு : பெ. வண்டிக் கும்பத்தின் மேல்பாகம்.

இரும்புக்கம்பம் : பெ. மின்சாரக் கம்பம்.

இரும்புக்கம்பி : பெ. காய்ச்சிய பித்தளையை எடுத்து ஊற்றும் கருவி.

இரும்புக் குத்தூசி : பெ. பயிர்களிலுள்ள வண்டுகளைக் குத்தி எடுக்க உதவும் ஊசி.

இரும்புச் சட்டி : பெ. வாணலி.

இரும்புப்பட்டா : வண்டிச் சக்கரத்தின் வட்டாவின் மீதுள்ள இரும்புப்பட்டை.

இரும்பு வாகனங்கள் : பெ. கார், பஸ், லாரி போன்றவை.

இரும்போக மரம் : பெ. மரவகை.

இருவது : இருபது : பெ.

இருவாச்சிப்பூ : இருவாட்சி மலர் : பெ. மலர்வாகை.

இருள் : பெ. மரவகை.

இருளப்பசாமி : பெ. விழா எடுக்கப்படும் தெய்வம்.

இருளர் பதி : பெ. இருளர் வசிக்கும் இடம்.

இருளன் : பெ. பழங்குடியினன்.

இரைக்காய் : பெ. கோழியின் இரைப்பை.

இல்லாட்டா : இல்லாவிட்டால் : வி.எ. "அப்பன் அருமெ செத்தாத் தெரியும், உப்பின் அருமெ இல்லாட்டாத் தெரியும்".

இல்லாட்டி தெரியாதா : வி.மு. தெரியும் என்று பொருள்.

இல்லேண்ணா : இல்லை என்றால் : வி.எ. 1. எதிராளிகளுக்குச் சவால்விடும்போது கூறுவது 'இல்லேண்ணா எம்பேர மாத்திக் கூப்பிடு', 'இல்லேண்ணா ஒரு பக்கத்து மீசெயெ செரச்சுக்கறெ' 'இல்லேண்ணா சொடக்குப்போட்டுக் கூப்பிடு', 'இல்லேண்ணா செருப்பெ கழட்டி அடி', 'இல்லேண்ணா நா ஒருத்தனுக்குப் பொறக்கலே' 2. "மேச்சா மதுரெயெ மேப்பேன் இல்லேண்ணா பர தேசம் போவேன்".

இலப்புளி : பெ. மரம் இழைக்கும் தச்சுக் கருவி. வகை : 1. சின்ன எலப்புளி, 2. பெரிய எலப்புளி.

இலவஞ்சுமரம் : பெ. உளுவை (ஒலவமரம்).

இலுப்பெப்பூ : இலுப்பை மலர் : பெ. "ஆலேயில்லாத ஊருக்கு இலுப்பேப்பூ சக்கரை" (இலுப்பை மரம், இலுப்பங் கொட்டை, இலுப்பெண்ணெய்).

இவங்கூட எழவுஎடுக்கவே சரியாப் போவுது : ஒருவர் மீது ஏற் படும் சலிப்பால் கூறுதல்.

இவடத்தை : இந்த இடத்தில் : வி.அடை.

இவந்தா பெரிய கழட்டியா : ஒருவனை மட்டந்தட்டும் வார்த்தை.

இவ வாயிலெ கொள்ளி வைக்க : வியங். வி.வசை.

இவளெ வீட்லெ வச்சிருந்தா இரும்பும் கரும்பு ஆயிடும் இட் டேரியும் பாழாயிடும் : வசை.

இவனுக்கு வந்த வாழ்வெப் பாரு : 1. ஆணவமாய் நடப்பவனைக் குறித்தல், 2. ஒருவனைக் கிண்டலாகக் கூறுதல்.

இழுத்துக் கிட்டுக் கெடக்குது : வி.மு. இறக்கும் தறுவாயி லிருப் போரைக் குறித்தல்.

இழுத்துப் பிடித்தல் : தொ.பெ. செலவு முதலியவற்றைக் குறைத்தல்.

இழுபறி : பெ. செயல் முடியாமல் நீளுகை; போராட்டம் 'எந்த நேரத்துலெ தொடங்கினாமோ ஒரே இழுபறியா இருக்கு'.

இழுவர் : பெ. பழங்குடியினர்.

இளங்கால் : பெ. இரண்டாம் ஆண்டை எட்டிய திராட்சைக் கொடி (மூன்றாவது கால்).

இளங்காலி : பெ. சக்கிலியர் விசேஷத்திற்கு ஊரை அழைக்கும் சக்கிலியருக்கென உள்ள நாவிதன்.

இளம்பு : பெ. இளனி (எளனி).

இளவு : பெ. நைதல் "கௌவி தொட்டாலாம் சோறு இளவுச் சாம்".

இளிச்சவாயன் : பெ. 1. இலகுவில் ஏமாற்றப்படுபவன் "இளிச்ச வாயங் கடெலியே அள்ளுவார் பஞ்சம்". 2. எப்போதும் பல்லைக் காட்டுபவன்.

இளிப்பு : பெ. சிரிப்பு "ஈயத்தெப் பாத்து இளிச்சுதாம் பித்தாளெ".

இறக்கமில்லே : இறங்கவில்லை : வி.மு. 'ரெண்டு நாளா சோறு இறக்கமில்லெ'.

இறுக்கம் : பெ. நெகிழாத்தன்மை.

இறுத்ததண்ணி : பெ. 1. இரசம். 2. வடித்தநீர்.

இறுத்தி : இறுக்கி : வி.எ.

இன்னக்கி : இன்றைக்கு : பெ.

இன்னாமுட்டும் : இதுவரை : வி.அடை. (இன்னாவரை, இன்னுந்தண்ணி).

இன்னீர் : என்றீர் : வி.மு.

இன்னேதுமில்லெ : இனி ஏதும் இல்லை : வி.மு.

இனாம் : பெ. நன்கொடை (அரபு).

இனிக்க இனிக்கப் பேசினாப் போதுமா : வாய் அளவில் உபசரிப்பவர்களைக் குறித்தல்.

இனிக்குங்கொ : வி.அடை. இன்றைக்குப் பார்த்து.

இனிப்பு : பெ.1. தித்திப்பு, 2. மகிழ்ச்சி.

இனிப்புசேவு : பெ. இனிப்புவகை.

இஸ்திரிப்பொட்டி : பெ. துணி தேய்க்கும் பெட்டி (இஸ்திரி - இந்துஸ்தானி).

இஸ்பெட் : பெ. சீட்டாட்டச் சீட்டின் நன்கு குறிகளுள் ஒன்று (ஆங்கிலம்).

இஸ்பெட் துருப்பு : பெ. ரெம்மி ஆட்டத்தில் ஒருவகை.

## ஈ

ஈ : வீட்டு ஈ "இரும்படிக்கற பக்கம் ஈக்கென்ன வேலை?"

ஈ ஓட்டுது : வி.மு. வியாபாரம் மந்தமாய் உள்ளது.

ஈக்கருப்பு : பெ. கருப்பரிசி (கரு அரிசி, ஈய்யரிசி).

ஈக்குக் குச்சி : பெ. தென்னை ஓலையிலிருந்து எடுக்கப்பட்ட குச்சி (ஈக்குச்சி).

ஈக்கிங்கூடை : பெ. மூங்கிற் கூடை.

ஈக்கிமாறு : பெ. ஈக்கிக்குச்சியால் கட்டப்பட்ட துடப்பம் (தென்னந்தொடப்பம், வெளக்குமாறு).

ஈக்குச்சி மாதிரி ஆயிட்டே : மெலிந்துவிட்டாய்.

ஈச்சப்புள்ளி : பெ. வெள்ளைநிறப் புள்ளிகளுள்ள குதிரை.

ஈச்சமட்டை : பெ. மரமேறிகள் பாளைக்குச் சுண்ணாம்பு இட்டுத் தேய்க்கும் மட்டை.

ஈச்சை : பெ. 1. ஈ, 2. மரவகை.

ஈசர்பண்ணாடி : பெ. பள்ளர் உட்பிரிவு.

ஈசுல் : பெ. சிறகு முளைத்த கரையான் "ஈசல் புத்திலிருந்து வந்தாப்பலே" (ஈச்சல்).

ஈசானிய மூலெ : பெ. வடகீழ்த் திசை.

ஈசிசேர் : பெ. சாய்வு நாற்காலி (ஆங்கிலம்).

ஈசு : பெ. ரோசம்.

ஈசுகன்னு : பெ. மாடு ஈன்ற இறந்த கன்று.

ஈஞ்ச கூட்டம் : பெ. ஓர் இனம்.

ஈஞ்சை : பெ. துடப்பம், பாய் முதலியன தயாரிக்கப் பயன்படுவது.

"சீலையில்லைன்னு சின்னாத்தா ஊட்டுக்குப் போக அவ ஈஞ்சம் பாயைக் கட்டிட்டு வந்தாளா".

ஈட்டி : பெ. எறியும் ஆயுதம் "ஈட்டி எட்னவரெ பாயும்பணம் பாதாளம்வரெ பாயும்", 2. மரவகை.

ஈட : வி.அடை. இங்கே 'ஈட பாங்குடனே இருந்தாங்கோ'.

ஈடு : பெ. 1. அடி 'எங்கிட்டெ ஈடு வாங்கப்போறே', 2. பிரதி 'ஈடா என்ன தருவே?'.

ஈடு அனுப்பறது : ஈடு அனுப்புதல் : தொ.பெ. பள்ளர் திருமணத்தில் மாப்பிள்ளை வீட்டிலிருந்து வந்த வட்டப் பழத்திற்குப் பதிலாகப், பெண் வீட்டார் 300 பணியாரம் அடங்கிய குடத்தையும் பெரிய ஆட்டையும் அனுப்புதல்.

ஈடு தேங்காய் : பெ. சிதறு தேங்காய் (சூறைத்தேங்காய்).

ஈத்து எடுத்திடுது : வி.மு. பசு கன்று ஈறுவதற்குமுன் உள்ள (ஒருமணி நேரத்திற்கு) நிலை.

ஈத்துப்போச்சு : வி.மு. ஈர்த்துப் போதல்; நெற்பயிர் சக்திக் குறைவால் குறைந்த தூர் கட்டுதல்.

ஈத்து மாறிப்போச்சு : வி.மு. இனிமேல் ஈன முடியாத பசு.

ஈமொச்சிருக்கு : வி.மு. ஈக்களின் கூட்டம் 'ஈ மொய்ச்ச மாதிரி ஒரே கூட்டம்'

ஈயக்காரரு : பெ. ஈயம் பூசுபவர்.

ஈயச்சட்டி : பெ. அலுமினியப் பாத்திரம் "ஈயெத்தெப் பாத்து இளிச்சுதாம் பித்தளெ". (ஈயத்தவளை, ஈயப்போசி).

ஈயம் பூசறது : ஈயம் பூசுதல் : தொ.பெ. பாத்திரங்கட்கு ஈயமுலா மிடுதல்.

ஈயோகமரொ : பெ. மரவகை.

ஈர் : பெ. பேன் முட்டை (ரீரு).

ஈர்எலைத் துண்டு : பெ. துண்டு வகை (பாலக்காட்டுத் துண்டு).

ஈர்குலி : பெ. ஈர் வாங்கும் கருவி (ஈர்கோலி).

ஈரங்காயி : பெ. சிறிய வெங்காயம் (ஈரவெங்காயொ, ஈருள்ளி, சாம்பார் வெங்காயொ, சின்ன வெங்காயொ).

ஈர நெல்லு : பெ. நீரில் ஊற வைத்த நெல்.

ஈரல் நோவு : பெ. நோய்வகை; மாட்டிற்கு ஈரல் வீங்கிக் கொள் ளுதல் (ஈரக்குலை நோவு).

ஈரு உருளி : பெ. சக்கரம்.

ஈருசுருக்காரி : பெ கர்ப்பிணி.

ஈரோட்டு வெத்தலெ : பெ. வெற்றிலைவகை.

ஈநம் : ஈனம் : பெ. இழிவு 'சுத்த ஈநம் புடுச்சவன்' (வடசொல்).

ஈவண்டு : பெ. வண்டுவகை.

ஈனங்கெட்ட படவாப் புள்ளெ : வசை.

ஈனிருச்சு : வி.மு. ஈனுதல் 'மாடு ஈனிருச்சு'.

ஈனாத வாழெ : பெ. குலை தள்ளாத வாழை.

ஈனுந்தொரை : பெ. தந்தை.

ஈனும் : வி.மு. பலன் கொடுக்கும் 'தென்னெ மூணு வருசத்திலே ஈனும்'.

## உ

உக்கலச் செயினு : பெ. 1. கழுத்தோடு ஒட்டிய தங்கச் சங்கிலி, 2. முகூர்த்தம் முடிந்தபின் மாப்பிள்ளை வீட்டிற்கு அருகி லுள்ள பிள்ளையார் கோவிலில் மாப்பிள்ளை கட்டும் மெல்லிய மஞ்சள் நூற்கயிறு. எ.டு. வேட்டுவக் கவுண்டர் (உக்கழுத்துச் சரடு, உட்கழுத்துச் சரடு, சிறுதாலி).

உக்களம் : உப்பளம் : பெ. "குருட்டு கொக்குக்கு உக்களமே சாக்கி".

உக்காந்துட்டா : உட்கார்ந்துவிட்டாள் : வி.மு. பூப்பு அடைந்து விட்டாள் (கொமுரியாயிட்டா, சமஞ்சிட்டா, தெவஞ் சுட்டா, பெரியமனுஷி ஆயிட்டா, ருது ஆயிட்டா, வயசுக்கு வந்துட்டா).

உக்காரர பலகை : பெ. மணை.

உங்க பேரைச் சொல்லி : மரியாதைக் குறிப்பு.

உங்க மொகத்துக்காக : வி.அடை. மரியாதைக் குறிப்பு.

உங்கு : ஏ.வி. சாப்பிடு.

உங்குனாலே : உங்களால் : பெ.

உங்கெண்ணெ ஊட்டறெ : வி.மு. பிறந்த குழந்தையின் வாயில் தேன் அல்லது விளக்கெண்ணெய் வைக்கும்போது பெரியவர்கள் கூறும் வார்த்தை.

உங்கோயா : உங்கள் ஆயா : பெ. 'உங்கோயா எங்கே?'

உச்சாணி : உச்சி : பெ.

உச்சந்தலை : பெ. தலைஉச்சி.

உச்சி குளுந்து போச்சு : வி.மு. மகிழ்தல்.

உச்சிச்சுழி : பெ. மாட்டின் நெற்றியிலுள்ள சுழி.

உச்சி தூக்கறது : உச்சி தூக்குதல் : தொ.பெ. பச்சைக் குழந்தை யின் மேல் அண்ணத்தைத் தூக்குதல்.

உச்சிமுட்டி : பெ. குதிரைக்குள் காதின்மேலுள்ள சுழி.

உச்சிப்பூசெ நேரம் : பெ. நண்பகல் - பன்னிரண்டு மணி (உச்சிப் பொழுது).

உச்சி முதுகுச்சுழி : பெ. எல்லா மாடுகளுக்கும் உள்ள சுழி.

உச்சுக்கொட்டறது : தொ.பெ. வெறுப்புக்குறி காட்டுதல்.

உசார் : பெ. முன் எச்சரிக்கை (ஆங்கிலம்).

உசிரு : உயிர் : பெ.

உசுப்பு ஏத்தறா(ன்) : வி.மு. தூண்டி விடுகிறான்.

உசுப்புத்தண்ணி : பெ. நடவுக்குப்பின் விடும்நீர் (உயிர்த்தண்ணி, கங்கல், மொதத்தண்ணி).

உசுர்குச்சிப்பூ : உயிர்குச்சிப்பூ : பெ. உயிர்க்குச்சி மரத்தின் பூ.

உட்ட : விட்ட : பெ.எ . 'மூணு உட்ட பய'.

உட்டி : பெ. விளையாட்டுக்காய்.

உட்டி அடிக்கறது : தொ. பெ. கீழும் மேலுமாக இழுக்கப்படும் தேங்காயை ஒருவன், தன்மேல் நீர் அடிப்பதையும் பொருட்படுத்தாமல் தடியால் இடித்தல்.

உட்டுட்டு : விட்டுவிட்டு : வி.எ. "கொத்த உட்டுட்டு கூத்துப் பாத்து ஆடவுட்டுட்டு நாடகம் பாக்கறாப்பலே".

உட்டுடுது : விட்டுவிட்டது : வி.மு.

உடபட்டிரோனும் : வி.மு. உடைந்துவிட வேண்டும்.

உடமெ : உடைமை : பெ. 1. பார், அட்டி, 2. நகை, 3. பொருள்.

உடமெ எடுக்கறது : உடைமை எடுத்தல் : தொ. பெ. காசி பாளைய மாரியம்மன் விழாச் சடங்கு. பூசாரி ஆணிச் செருப்பின்மீது நின்று தெய்வத்தைக் கழுவிப் பூசை யிடுதல். வேண்டுதலின்பேரில் இம்மாதிரி பலர் செய்வர்.

உடுக்கைப்பாட்டு : பெ. உடுக்கையடித்துப் பாட்டுப்பாடி கதை கூறுதல்.

உடுக்கை வெளக்கு : பெ. உடுக்கை வடிவிலுள்ள பித்தளை விளக்கு.

உடுத்து : ஏ.வி. அணி "உங்காமப் போலாம் உடுத்தாமல் போலாமா?"

உடுப்பு : பெ. ஆடை 'நோம்பிக்கு உடுப்பு எடுக்கணும்'.

உடும்பு : பெ. விலங்கினம் "உடும்பு புடிக்கப் போயி கையெ உட்டாப் போதும்னானாம்."

உடும்புப்புடி : பெ. பிடிவாதம்.

உடையார் : பெ. மட்பாண்டம் செய்யும் சாதியினர்.

உண்டி : பெ. 1. இரும்புக் கொக்கி, 2. காணிக்கைக் கலம், 3. காசு சேர்க்கும் மண் உண்டி.

உண்டிக்காய் சேலை : பெ. மாட்டிற்குக் கழுத்தின் கீழ்ப்பகுதி வீங்கிக் கொள்ளுதல்.

உண்டியா : வி.மு. சாப்பிட்டாயா (உண்ணையா, திண்ணியா).

உண்டுப் பண்டிகை : பெ. தமிழ்ப் புத்தாண்டப் பிறப்புக் கொண்டாட்டம்.

உண்டுனு : வி.அடை. நிறைய 'தண்ணி உண்டுனு போகுது'.

உண்டை : உருண்டை : பெ.

உண்ணி : பெ. 1. ஆடு, மாடு, நாய்களின் மேலுள்ள பூச்சி (வகை : எருமை உண்ணி, நாய் உண்ணி, மாட்டு உண்ணி), 2. மண்ணிலுள்ள புழுவகை.

உத்த : உற்ற : பெ. அடை. 'உத்த நண்பன்'

உத்தமி : பெ. கற்புடையவள்.

உத்தரம் : உத்திரம் : பெ. வீட்டின்மேல் விட்டம்.

உத்தரராய சுவாமி கோவில் : பெ. ஓர் கோவில்.

உத்தர வாக்கு : பெ. இறைவன் தலையில் பூ வைத்து வாக்குக் கேட்கும்போது காரியம் செய்யக்கூடாது எனும் குறிப்பில் பூ இடப்புறம் விழுதல்.

உத்தாள் : பெ. விளையாட்டில் நடுவர்.

உத்தாளி பிரிச்சு வெளையாடறது : தொ. பெ. ஆட்களைப் பிரித்துக் கொண்டு ஆடும் நொண்டி விளையாட்டு.

உத்தி : பெ. விளையாட்டில் ஒருவனுக்கு நிகரான எதிர் பக்கத்துத் துணைவன் (தெலுங்கு).

உத்தி உத்தி யார் உத்தி : பெ. விளையாட்டில் இப்பொழுது யார்முறை என்று கேட்டல்.

உத்திச்சு : வி.எ. கூர்ந்து.

உத்தித்தாய்ச்சி : பெ. விளையாட்டினை நடத்துபவன்.

உத்தி பிரித்தல் : தொ.பெ. விளையாட்டில் கட்சி பிரித்தல்.

உத்தியோகம் : பெ. அலுவல் (வடசொல்).

உத்திராட்சக்காய் : பெ. கழுத்திற் கோத்து அணியும் காய்.

உத்திவாய்க்கா(ல்) : பெ. இரு மொழிகளுக்கு இடையே செல்லும் வாய்க்கால்.

உத்து : பெ. விளையாட்டின் அடையாள இடங்கள்.

உத்தேசம் : பெ. 1. தோராய மதிப்பு, 'உத்தேசமா எத்தன மூட்டெ வரும்', 2. முடிவு 'இதுதா உன்ற உத்தேசமா'.

உத்தேசி : ஏ.வி. யோசி.

உதரம் : உதிரம் : பெ. (ஒதரொ -வடசொல்).

உதிரி : பெ.1. உதிர்ந்தது 'உதிரிப்பூ', 2. நேரம் 'ஊருக்குப் போலான்னா உதிரி இல்லெ'.

உதிரிதோசம் : பெ. பெயர்ப்பொருத்தம் பார்க்கும்போது பெண்ணுக்கு இருக்க வேண்டிய ஒன்பது பொருத்தத்தில் ஏழுக்குக் குறைவாக இருத்தல்; இவ்வாறிருப்பின் திருமணம் செய்துகொள்ளமாட்டார்கள்.

உதிரி மாவு : பெ. வறுத்த அரிசியை அடுப்பில் வைத்து நீர் விட்டுக் கரும்புச் சக்கரை கலந்து உருண்டை பிடித்தல்.

உதியமரம் : பெ. மரவகை.

உதைக்குது : வி.மு. 1. நடுங்குதல் 'கைகால் உதைக்குது', 2. மாறுபடுதல் 'கணக்கு உதைக்குது' (எடறுது).

உப்பி : வி.எ. பருத்து 'ஆளு உப்பிப் போனா(ன்)' (ஊதி).

உப்பில்லாப் பேச்சு : பெ. பயனற்ற உரையாடல்.

உப்பிலி நாயக்கர் : பெ. நாயக்கர் உட்பிரிவு.

உப்பு : பெ. மகளிர் விளையாட்டுவகை.

உப்புடக்கடலை : பெ உப்புநீர் விட்டு வறுத்த கொண்டைக் கடலை (சுதேசி கல்லை, சுரேஸ் கல்லை).

உப்புக்கண்டம் : பெ. உப்பிட்டுக் காய வைத்த மாமிசம்.

உப்புக்கண்டம் போட்டுடுவெ சாக்கிரதெ : வசை.

உப்புக்கல்லுக்குகூட ஒதவமாட்டா(ன்) : பயனற்றவன்.

உப்புக்குச் சப்பை : பெ. விளையாட்டில் கண்டுபிடிப்பது யார் என அறிய, கை போடும்போது கூறுதல்.

உப்புக்கோடு : பெ. கிளித்தட்டு விளையாட்டில் வரும் கோடு.

உப்புசம் : பெ. 1. புளுக்கம், 2. வீக்கம் 'வயிறு உப்பசமா இருக்கு' (தெலுங்கு).

உப்புசரக்கு : பெ. கருவாடு.

உப்புத்தண்ணிக் கெணறு : பெ. உப்புநீர்க்கிணறு.

உப்புப்பருப்பு : பெ. வேக வைத்துக் கடைந்த பருப்பு.

உப்புப்பள்ளம் : பெ. உப்புமண் உள்ள பள்ளம்.

உப்புப்பொட்டி : பெ. உப்பிடும் மரப்பெட்டி.

உப்புபொரி : பெ. உப்பு உரைக்கும் பொரிவகை.

உப்புமூஞ்சி : பெ. உர் என வைத்துக் கொள்ளும் முகம் (உப்புனா மூஞ்சி, உம்மணா மூஞ்சி).

உப்பு மூட்டை : பெ. சிறுவர்களை முதுகின்மேல் சுமத்தல்.

உப்பு வச்சு வெளையாடுதல் : தொ.பெ. மணற் குவியலில் பொருளை ஒழித்துக் கண்டுபிடித்தல்.

உப்பு வாங்கப் போகும் சீரு : பெ. 1. உடையார், செந்தலைக் கவுண்டர், பண்டாரம் ஆகியோர் திருமண நாள் குறித்தபின் வரும் திங்கட்கிழமையில் உப்புவாங்குதல், 2. சக்கிலியர் பெண்ணைச் சந்தைக்கு அழைத்துச் சென்று வளையல் அணிவித்துப் பொரியை அனைவரும் மடியில் கொட்டுதல்.

உப்பு வெக்கறது : உப்பு வைத்தல் : தொ. பெ. 1. உரமிடுதல், 2. செங்கர விளையாட்டில் மூன்று ஆட்களிடம் தப்பித்து மலையை அடைதல், 3. வெற்றியைக் குறிக்க, சிறு மணற் குவியலை இடுதல்.

உப்புனாப்பலெ : வி. அடை. வீங்கியதுபோல 'மூஞ்சி ஏனோ உப்புனாப்பலெ தெரியுதே'.

உப்பெத்தின்னவன் : வி.அ.பெ. நன்றிக்கடன்பட்டவன் "உப்பெத் தின்னவன் தண்ணி குடிப்பான்"

உபகதை : பெ. 1. கட்டுக்கதை, 2. பழமொழி (உவமானம், செலவாந்திரம், ஒபகதெ, சொலேந்தரம்).

உபகாரம் : பெ. 1. உதவி, 2. கொடை (வடசொல்).

உபசாரம் : உபசரிப்பு : பெ.

உபத்திரம் : பெ. தொந்திரவு.

உபரி : பெ. மீந்தது.

உபவாசம் : பெ.விரதம்.

உம்கொட்டுதல் : தொ.பெ. 1. உம் மொலியிட்டுப் பிறர் கூறு வதைக் கேட்டல். 2. சம்மதித்தல். உம்படது : வி.அ.பெ. உன்னுடையது.

உம்பாச்சா இங்கே பலிக்காது : உன் சாகசங்கள் என்னிடம் பலிக்காது.

உம்புத்தியெ காட்டிட்டியே : நன்றி மறந்தவனைக் கடிதல்.

உம்பொழப்பு கிளிகிளின்னு கிளியுது தெரியாதா எனக்கு : வசை.

உம்மஞ்ச எங்கிட்டே மணக்காது : உன் எண்ணம் என்னிடம் நடக்காது.

உம்மை : உண்மை : பெ.

உம்மேலே : உன்மீது : வி.அடை 'உம்மேலே பத்து ரூவா இருக்கு'.

உமி : பெ. அரிசியாக மாற்ற நெல்லிலிருந்து நீக்கப்பட்ட பகுதி "அரிசின்னு அள்ளுவாருமில்லே உமின்னு ஊது வாருமில்லே".

உயர்ரகப் பருத்தி : பெ. நாளை விரியும் நிலையிலுள்ள மொக்கில் மகரந்தக் கேசரம், அல்லிவிட்டம், புல்லிவட்டம் ஆகிய வற்றை நீக்கிவிட்டுச் சூற்பையில் வேறு ஒரு பருத்தியிலுள்ள மகரந்தத்தை துடைப்பதால் கிடைக்கும் பருத்திவகை.

உயிர் புடுச்சுகிச்சு : உயிர் பிடித்துவிட்டது : வி.மு. நடவுக்குப் பின் செடி நன்றாக இருத்தல்.

உயிர் ரேகை : பெ. கைரேகைகளில் ஒன்று (அதிர்ஷ்ட ரேகை, ஆயுள் ரேகை).

உயிரை வாங்கறே : உயிரை வாங்குகின்றாய் : வி.மு. வசை.

உயில் : பெ. மரணசாசனம் (ஆங்கிலம்).

உயில்கும்மி : பெ. ஒயிற் கும்மி.

உரி : பெ. தயிர், மோர், வெண்ணெய், உப்பு ஆகியன உள்ள சட்டிகளை மேலே தொங்கவிட உதவும் கயிற்று அமைப்பு "உரியிலே வெண்ணெயெ வச்சிட்டு ஊரெல்லாம் நெய்க்கு அலெஞ்சாளாம்."

உரி : ஏ.வி. 1. அபகரி 'சொத்தையெல்லா உரிஞ்சுட்டா', 2. ஆடை களை 'நடுரோட்டிலெ வச்சு வேட்டியே உரிஞ்சிடுவேன்'.

உரிஅடிக்கறது : தொ.பெ. கீழும் மேலுமாக வரும் பொருளைத் தன்மேல் நீர் அடிப்பதையும் பொருட்படுத்தாமல் தடியால் அடித்தல்.

உரிஉரிவெளையாட்டு : பெ. விளையாட்டுவகை (நொண்டி விளையாட்டு).

உரிச்ச கோழி : உரித்தகோழி : பெ.1. இறகு பிடுங்கிய கோழி, 2. எலும்பும் தோலுமாய் உள்ளவன்.

உரிச்சட்டி : பெ. உரியில் வைக்கப்படும் சட்டி.

உரிமரம் : ஏறுதல் : தொ.பெ. பட்டை உரிக்கப்பட்ட மரத்தின் மேல் ஏறும் ஆடவர் விளையாட்டு.

உருக்கு : பெ. கூர்மை 'கத்தி உருக்கு இல்லெ'.

உருக்கு : ஏ.வி. உருகச் செய் 'நெய்யெ உருக்கு'.

உருக்கு உருக்குனு : வி.அடை. கூர்மையாய் 'ஏதாவது பேசினா உருக்கு உருக்குனு கேட்டுட்டு உக்காந்துக்குவா.

உருட்டு ஆயிக்குது : உருண்டு கொள்ளும் : வி.மு. பொயிலையெ கருப்பட்டித் தண்ணி தெளிச்சு அம்பாரம் திளுப்பினா உருட்டு ஆயிக்குது'.

உருட்டுகுண்டு வெளையாட்டு : பெ. கோலியாட்ட வகை.

உருட்டுப்பெரட்டு : பெ. மாறாட்டமாகப் பேசும் வஞ்சகச் செயல்.

உருட்டு மூட்டை : பெ. படுதாளில் கட்டப்பட்ட புகையிலை மூட்டை

உருண்டைப்புழு : பெ. கோழியின் வயிற்றிலுள்ள புழு.

உருத்துது : வி.மு. நெருடுதல் 'மனசு ஏனோ உருத்திட்டே இருக்கு'.

உருப்பட்டாப்பலெதா : வி.மு. உருப்படாது எனும் பொருள்.

உருப்படி : பெ. கணக்கிடக்கூடிய பொருள், 'முப்பது உருப்படி (துணி) இருக்கு'.

உருப்படியில்லாத : பெ. அடை. ஒழுங்கமற்ற, 'உருப்படியில் லாத பையனெப் பெத்தனே'.

உருப்பு உருப்புனு : வி.அடை. 'பூனெ பாலைக் குடிக்கிராப் புலெ உருப்பு உருப்புனு குடிக்கறே'.

உருமம் : பெ. நண்பகல்.

உருமாலெ : உருமாலை : பெ. 1. திருமணத்தன்று மாப்பிள்ளைக்குத் தலையில் கட்டப்படும் பட்டுத் துண்டு, 2. துண்டு (பெர்சியன் உருமா).

உருமாலெ கட்டும் சீரு : பெ. திருமணச்சடங்கு; சகோதரி மாப்பிள்ளைக்குப் பொன் கொடுக்க அவள் கணவன் உருமாலை கட்டுதல்.

உருமாலெ மாட்டி : பெ. துணிகளை மாட்டும் கருவி.

உருமெப்பொண்ணு : உரிமைப்பெண் : பெ. (மொறப்பொண்ணு).

உருமெப் பொண்ணு கேக்கும் சீரு : பெ. திருமணச் சடங்கு எ-டு. உடையார்.

உருவ அலகு : பெ. வேண்டுதலின்பேரில் தோள்பட்டைக்குக் கீழிலிருந்து கையிலிருந்து ஊசி குத்தி தேர் இழுத்தல்.

உருவம் : பெ. உடலமைப்பு (வடிவம்) 'அவ உருவமெ சரியில்லே'.

உருவமா இருக்குது : வி.மு. மழைவரும் குறிப்பு (மூடுனாப்பலெ இருக்குது).

உருவாஞ்சுருக்கு : பெ. எளிதில் அவிழக்ககூடிய முடிச்சு (சுருக்கு முடிச்சு).

உருவி : வி.எ. பறித்து 'சீலெயெ உருவிருவே(ன்)', 'அவரக்கா உருவிகிட்டு வா'.

உருளி : பெ. ஒருவகை வெண்கலப் பாத்திரம்.

உருளை : பெ. 1. ஏற்றம் இறைக்குங் கருவி, 2. சமுக்காளம் நெய்யப் பயன்படும் கருவி.

உரைப்பான் : பெ.உப்புநீர்.

உவண்டு : உலர்ந்து : வி.எ.

உலுக்கி : குலுக்கி : வி.எ.

உவா நாட்கள் : பெ. அமாவாசை, பாட்டிமை, மதியம் போன்ற நாட்கள். இந்நாட்களில் வேலைக்கு ஓய்வு கொடுத்து, பொழுதுபோக்குகளில் ஈடுபடுவர்.

உழுக : விழுக : வியங்.வி.

உழுதவன் : வி.அ.பெ. விவசாயி "உழுதவங் கணக்குப் பாத்தா ஒழுக்காத் தடியுங்கூட மிஞ்சாது".

உள்தாள் : பெ. கதவின் உட்பக்கமுள்ள தாழ்ப்பாள் (தாப்பா).

உள்மூடி : பெ. இட்டலித்தட்டு.

உள்ளாடை : பெ. மகளிருள்ளுடை.

உள்ளாள் : பெ. 1. உளவறிவோன் -ள், 2. தாம்பு ஓட்டும்போது உள்ளே நடுவில் நிற்பவன்.

உள்ளிக்கு : உட்புறம் : வி.அடை.

உள்ளுக் கொளாம்பு தட்டறது : உள்குளம்பு தட்டுதல் : தொ.பெ. மாட்டின் கால்களுக்கு லாடம் வைத்து ஆணி அடிக்கும் போது ஆணியின் நுனியை வெட்டிவிடுதல். வெட்டா விட்டால் கால்கள் ஒன்றோடு ஒன்று உராய்ந்து காயம் ஏற்படும்.

உள்ளுமடி : பெ. பசுமாட்டின் மடி சிறியதாக இருத்தல்.

உள்ளுமெசினு : பெ. கயிறு திரிக்க உதவும் எந்திரம் தேங்காய் நாரிலுள்ள தூசை நீக்குகிறது.

உள்ளுவாய் : உள்வாய் : பெ. வண்டிச்சக்கரம் உருளும்போது கும்பத்தினுள் அச்சு உராயுமிடம்.

உள்ளுவாய்ப் பூண் : பெ. சக்கரத்தின் கும்பம் உருளும்போது அச்சினால் ஏற்படும் தேய்வைச் சரிகட்ட கும்பத்தினுள் வைக்கப்படும் பூண்.

உள்ளூர் : பெ. "உழுகற மாடுன்னா உள்ளூர்லே வெலெ போகாதா".

உள்ளே தள்ளிட்டாங்க : வி.மு. சிறையில் அடைத்து விட்டார்கள்.

உளறல் : பெ. குழறுபடியான மொழி.

உளி : பெ. 1. கல் உடைக்கும் பெரிய உளி "ஆயிரம் உளிபட்டா ஒரு சிவலிங்கம் ஆகும்", 2. செருப்புத் தைக்கும் சிறிய உளி (வகை : ஆணிபுடுங்கற உளி, சிறுக்குளி, பெரிய உளி), 3. ஆட்டுக்கல் கொத்தும் உளி.

உளுக்காட்டிராதே : விழுக்காட்டிவிடாதே : எ.ம.வி.

உளுக்கு : பெ. சுளுக்கு 'கால் உளுக்கிருச்சு'.

உளுகும் : விழுகும் : வி.மு.

உளுச்சு : உரித்து : வி.எ.

உளுத்தரா(ள்) : உதிர்த்துகின்றாள் : வி.மு. 'அவ உளுத்தராலா கண்ணீரு', 'வார்த்தையெ ரொம்பத்தா உளுத்தரா'.

உளுந்து : விழுந்து : வி.எ. "ஏறி உளுந்து எம் பொடவ கிளிஞ்சுது".

உளுந்துக்களி : பெ. உளுந்து, கோதுமை, அரிசி, வெந்தயம், வெல்லம் ஆகியன சேர்த்துச் செய்த களி; பூப்பு அடைந்த பெண்களுக்குக் கொடுக்கும் உணவு.

உறை : பெ. தங்கத்தைச் சோதித்துப் பார்க்கும் கல் "தான் தேடாப் பொன்னுக்கு மாத்துமில்லே உறையுமில்லே".

உன்ஒனு : பெ. இன்னொன்று.

உன்ற : பெ.அடை. உன்னுடைய 'உன்ற பாகம்'.

உன்ற : அடிக்குத் தாங்காது : முரட்டுத்தனம்.

உன்னம் : இன்னும் : வி.அடை.

உன்னி : பெ. செடிவகை (உண்ணிப்பூச்செடி).

உன்னெ ஒருகை பாத்துடறே! : எதிரிக்குவிடும் சவால்.

உன்னெ ஒருத்தங் கையிலெ புடுச்சுக் குடுத்தாத்தா நிம்மதி : தாய் மகளை வைதல்.

உன்னெ தொலச்சு தோச வச்சு மாத்தினாத்தா என்னப் புடுச்ச சனியன் தொலையும் : வசை.

உனக்கு எப்படியிஞருக்கு : 1. கிண்டலாகப் பேசுபவனைப் பார்த்துக்கேட்டல், 2. கோபத்தைப் பிறர்மீது காட்டும் குறிப்பு.

உனக்கு ஏதாச்சி இருக்காடா சுத்த இதுவா இருக்கியெ : வசை.

உனக்குத்தா பட்டயம் பண்ணி குடுத்திருக்குதா : ஒருவன் தேவையற்ற இடத்தில் உரிமையைப் பயன்படுத்தும் போது கேட்டல். 'திப்புவின் காலத்தில் அம்மன் கோவில் பூஜை செய்யும் உரிமையும் நிலமும் பண்டாரத்திற்கு அளிக்கப்பட்டதால் உருவான வார்த்தை (செம்புப் பட்டயமா எழுதி வச்சிருக்குது).

உனித்தா : இனிமேல்தான் : வி.அடை : 'உனித்தா போகோணும்'.

உஸ்க்கி : இடை : சிறுவர் மறுப்புக் குறிப்பு (ஓஹோ, இசுக்கு, இஸ்க்கு, கிசுக்கு, கிண்டு, கழ்ட்டி).

## ஊ

ஊ : இடை. பிறர் கூறுவதை ஊம் ஒலியிட்டுக் கேட்டல்.

ஊஊ : இடை. மறுத்தற் குறிப்பு "ஆயானா ஈம்பாளா ஒரு ஆளுக்குச் சோறுன்னா ஊஊம்பாளாம்".

ஊக்கு : பெ. கொக்கி (ஆங்கிலம்).

ஊசல் : பெ. பதனழிந்தது 'ஊசப்பருப்பு'.

ஊசலடிக்குது : வி.மு. பதனழிந்த வாடை வீசுகின்றது.

ஊசலாட்டம் : பெ. ஊஞ்சல் ஆட்டுகை.

ஊசி : பெ. "ஊசிக்கு ஊசி பாயுது".

ஊசிக்கப்பல் : பெ. புகையிலை வகை.

ஊசித்தமுறு : பெ. தச்சுக்கருவி.

ஊசிப்பட்டாம் பூச்சி : பெ. பட்டாம்பூச்சி வகை.

ஊசிப்பழம் : பெ. ஒருவகைப் பழம்.

ஊசிப்பில்லு : பெ. புல்வகை.

ஊசிமல்லி : பெ. மல்லிகையில் ஒருவகை.

ஊசிவேளா : பெ. மரவகை.

ஊஞ்சமரம் : பெ. பார். அரப்புரமரொ.

ஊஞ்சல்பெராக்கு : பெ. விழாச் சடங்கு; இறைவனை ஊஞ்சலில் வைத்துப் பாடி ஆட்டுதல்.

ஊட்டி : வி.எ. உண்பித்து "ஊரார் புள்ளையெ ஊட்டி வளத்தா தம்புள்ளெ தானே வளரும்".

ஊட்டுக்காரெ : வீட்டுக்காரன் : பெ. கணவன் (பண்ணாடி, புரசெ).

ஊட்டுக்கன்னு : பெ. பால் குடிக்குங் கன்று.

ஊட்டு மறந்த கன்னு : பெ. பால் குடிப்பதைவிட்ட ஒன்றரை ஆண்டுக் கன்று.

ஊட ஊட : வி. அடை. இடையிடையே 'ஊட ஊடப் பேசாதே'.

ஊடுமுட்டி : பெ. பெரிய எலிவகை (பெருக்கா(ன்), பெருச்சாளி).

ஊடை : பெ. ஆடையின் குறுக்கிழை.

ஊடைநூல் : பெ. 1. சமுக்காளம் நெய்வதற்கு ஒன்றாக முறுக்கப் பட்ட இரண்டு நிற நூல்கள், 2. பாவு நூலின் குறுக்காகச் செலுத்தும் நூல்.

ஊண் : பெ. சதை 'ஊண்லெ ஆணி குத்திடுச்சு'.

ஊண்கட்டி : பெ. பாவை இழுத்துக் கட்டி உதவும் கோல் (ஊணிக்கோல்).

ஊண : 1. வி. ஊன்றுவது 'விதெயெ எங்கே ஊண'

2. வி.எ. ஊன்ற 'நாத்து ஊண தண்ணி வேணு'.

ஊணாங்கொடி : பெ. கொடிவகை.

ஊணிக்கட்டை : பெ. மாட்டுவண்டி நிலத்தில் ஊன்ற உதவும் கட்டை (மூக்காணிக் கட்டை).

ஊணுகம்பு : பெ. மாட்டுவண்டியில் தடுக்குகள் நிற்க உதவும் கோல் (ஊணுகோல்).

ஊத்தாணிக்கோல் : பெ. மேழியையும் கலப்பையையும் இணைப்பது.

ஊத்தாப்பம் : பெ. தோசைவகை.

ஊத்தி : ஊற்றி : வி.எ.

ஊத்துத்தண்ணி : பெ. ஆற்றோரப் பகுதிகளில் குழி எடுப்பின் வரும் நீர் (கிணற்றில் குழி எடுப்பின் வருவது ஊற்றுக் கால்).

ஊத்துது : வி.மு. பெய்கின்றது 'மழெ ஊத்துது'.

ஊத்துமழை : பெ. அடைமழை.

ஊத்தோ ஊத்துன்னு : வி.அடை. 'ஊத்தோஊத்துன்னு மழெ ஊத்துது'.

ஊதா : பெ. நிறவகை (இந்துஸ்தானி).

ஊதாங்கொழலு : பெ. நெருப்பு ஊதுங்குழல்.

ஊதாரி : பெ. வீண்செலவுக்காரன்.

ஊதுகாமாலை : பெ. காமாலை நோய்வகை "ஆளைப்பாத்து மயங்காதே ஊதுகாமாலெ".

ஊதுசுருட்டை : பெ. சுருட்டைப் பாம்புவகை.

ஊதுவத்தி : ஊதுபத்தி : பெ. (அரபு).

ஊம்பு : ஏ.வி. சப்பு.

ஊமக்காயம் : பெ. முரட்டடியால் வெளிக்குக் காயம் தெரியாது உண்டான உள்வீக்கம் (ஊமஅடி).

ஊமச்சாடை : பெ. மெல்லிய வாயசைப்பில் காட்டும் குறிப்பு.

ஊமத்தாம்பூ : பெ. ஊமத்தைச் செடியின் பூ (வகை : கரு ஊமத்தே, வெள்ள ஊமத்தே).

ஊமப்படொ : ஊமைப்படம் : பெ.

ஊமாண்டி : பெ. சிறுவர்களுக்குப் பொய்யாகக் பயங்காட்டுதல்.

ஊமானம் : பெ. யூகம்.

ஊமெ : ஊமை : பெ. "ஊமை ஊரெக் கெடுக்கும் ஊர்க் கோட்டான் குடியெக் கெடுக்கும்". (ஊமையன்).

ஊர் : பெ. பல வீடுகள் உள்ள குடியிருப்புப் பகுதி "ஊர்லே கல்யாணம் மார்லே சந்தானம்".

ஊர் அடங்கற நேரம் : பெ. மக்களின் நடமாட்டம் குறைந்து உறங்கச் செல்லும் நேரம் (ஊர் ஒடுங்கற நேரம்).

ஊர் அடங்கிருச்சு : வி.மு. ஊர் அரவம் ஓய்தல்.

ஊர் அவரெச் செடி : பெ. அவரை வகை.

ஊர் அளப்பு : ஊர் அழைப்பு : பெ. திருமணம், பூப்பு முதலிய விசேஷங்களுக்கு நாவிதன் ஊர் மக்களை அழைத்தல். எ-டு. செந்தலைக் கவுண்டர், பண்டாரம்.

ஊர்க்கணக்கன் : பெ. மணியகாரருக்குத் துணைபுரியும் கிராம நிர்வாகி.

"கடவுளெ பகெச்சாலும் ஊர்க்கணக்கனெ பகெக்காதே".

ஊர்க்கவுண்டன் : பெ. கிராமத்தின் அல்லது கவுண்டர்களின் தலைவன்.

ஊர்க்கட்டு : பெ. ஊர் ஒழுங்குமுறை.

ஊர்க்காவல் : பெ.ஊர் முழுமைக்கும் பொதுக்காவல்.

ஊர்க்கிணறு : பெ. ஊர் மக்கள் பயன்படுத்தும் பொதுக்கிணறு.

ஊர்கோலம் : ஊர்வலம் : பெ.

ஊர்ச்சிதம் : பெ. உறுதி.

ஊர்சாட்டுதல் : தொ.பெ. பறை அடித்து ஊருக்குச் செய்தி அறிவித்தல்.

ஊர்நாயக்கர் : பெ. கிராமத்தின் அல்லது நாயக்கர்களின் தலைவன்.

ஊர்ப்பணம் கட்டறது : தொ.பெ. சக்கிலியார் திருமணத்தில் பெண்ணை மாப்பிள்ளை வீட்டுக்குக் கூட்டிச் செல்லும் போது கோயிலுக்குக் கட்டும் பணம் (ஏழரை ரூபாய்).

ஊர்மணியக்காரர் : பெ. கிராமம், கோவில் முதலியவற்றின் மேல் விசாரணை செய்வோன்.

ஊர்மாதாரி : பெ. சக்கிலியர் தலைவன்.

ஊர்ர புள்ளெ : ஊறுகின்ற பிள்ளை : பெ. "ஊர்ர புள்ளெயும் ஊர்ப்பன்னியும் ஒண்ணு".

ஊர்வலச்சாமி : பெ. திருவீதி உலா வரும் தெய்வம்.

ஊர்வழி : பெ. ஊரின் நுழைவாயில்.

ஊரடிக்காடு : பெ. ஊரை ஒட்டியுள்ள காடு.

ஊரடித்தோட்டம் : பெ. ஊரை ஒட்டியுள்ள தோட்டம் "உள்ளூர் பொண்ணும் ஊரடித்தோட்டமும் ஒண்ணு".

ஊரல் : பெ. தோல் வியாதி - படர்தாமரை நோய்.

ஊரளச்சுட : வி.எ. ஊரை அழைத்து வர 'ஊரளச்சுட போயிருந்தே'.

ஊராச்சி கொட்டை மலை : ஊராட்சிக் குட்டை மலை : பெ. பவானிக்கும் குறும்ப நாயக்கன் பாளையத்திற்கும் இடையிலுள்ள மலை.

ஊரான் : பெ. 1. அருகிலுள்ளவர், 2. அன்னியன் "ஊரான் புள்ளெயெவுட்டு ஆழம் பாத்தாப்பலே".

ஊருசுத்தி : பெ. 1. கழுதை, 2. கழுதை மலம் 'கொஞ்செசா ஊருசுத்தி எடுத்துட்டுவா', 3. பன்றி.

ஊரையே வித்துப்புடுவே : ஊரை விற்றிவிடுவாய்.

ஊளமூக்கு : பெ. 1. சளி 'ஊளமூக்கு ஒழுகறதப் பாரு' 2. சளி பிடித்த நாசி 'ஊளமூக்குக்காரன்'.

ஊளமூக்குப்பழம் : பெ. காட்டுப்பழம் (விரியம்பழம், வழவழத்தாம்பழம்).

ஊளை : பெ. 1. கண்பூளை, 2. சத்தம், 3. மூக்கொழுக்கி.

ஊறுகா(ய்) : பெ. உப்பு முதலியவற்றில் ஊறினகாய்.

ஊறுபுண்ணு : பெ. குழந்தையின் உடம்பு ஊறுவதற்காகக் கழுத்து இடுக்கில், மூத்திரக்காயின் அடிப்பகுதியில் வரும் புண்.

ஊன்னு : 'உம்' என்று : இடை. 1. சரியென்று 'ஊன்னு சொல்லு வெட்டிட்டு வந்துடறே', 2. என்னவென்று 'கூப்புடறானே ஊன்னு கேக்கறதுக்கு என்ன?'

ஊன்னு கேட்க ஆள் இருக்கா : ஆணவத்துடன் ஒருவன் கூறும் வார்த்தை.

ஊன்னு கேளு : ஏ.வி. கதை கூறுபவர் கேட்பவர் மௌனமாய்க் கேட்பின் கூறுவது 'ஊன்னுகேளு, ஊன்னு கேட்டாத் தானே சொல்ல நல்லாயிருக்கு'.

ஊனம் : பெ. அங்கக் குறைபாடு.

## எ

எக்கச்சக்கமான : பெ. அடை. கணக்கற்ற 'எக்கச்சக்கமான நஷ்டம் வந்துடுச்சு'.

எக்களிப்பு : பெ. 1. ஒழுங்கின்மை, 2. செருக்கோடு கூடிய மிகு மகிழ்ச்சி.

எக்காளம் : பெ. ஒழுங்கற்ற வசை 'என்ன எக்காளமா பேசிப் போட்டா(ள்)'.

எக்குத்தப்பா : வி.அடை. 1 . எதிர்பாராமல் 'எக்குத்தப்பா நடந்து போச்சு', 2. தவறுதலாய் 'எக்குத்தப்பா நடக்காமெ அவ்ளெ பாத்துக்கோ'.

எக்குப்போடுது : வி.மு. மாட்டின் திமிர் மிகுந்த செறுக்கு.

எக்கேடோ கெட்டுப்பரோக : வியங்.வி. வசை.

எகத்தாளம் : பெ. பரிகாசம்.

எகுறுறா(ன்) : வி.மு. சண்டையில் அடிக்க முயல்தல்.

எங்கடா போய்த் தொலஞ்சே : எங்கே போய் இருந்தாய் என அதட்டுதல்.

எங்கப்பனானெ : என்னுடைய அப்பாமீது ஆணை; சத்தியத்தின் ஒருவகை. எங்கிட்டியே பூச்சி காட்டறியெ; என்னைப் பயமுறுத்துகின்றாயே; பயமுறுத்த முடியாது எனும் பொருளில்.

எங்கியும் பாத்தே முடியாமெப் போச்சு : முயற்சிக்குப்பின் ஏற்பட்ட தோல்வி.

எங்குளுந்தே : எங்கே விழுந்தாய் : வி.மு.

எங்கூடு : எங்கள் வீடு : பெ.

எச்சக்கலெ : எச்சில் இலை : பெ. வசை. "எனத்தெ எனங்காக்கும் எச்சக்கலெயெ நாய் காய்க்கும்". (எச்சுக்கலை நாயெ, எச்சிற்கல்லை).

எச்சக் காளாணி : பெ. எச்சில் உமியும் பாத்திரம்.

எச்சக்கூடை : பெ. எச்சில் உமிழும் மூங்கிற் கடை.

எச்சத்தாழி : பெ. மாடு குடிக்கும் கழுநீர் உள்ள மண்தொட்டி "கெவுளி சொல்ற பல்லி எச்சத்தாழிலியே உழுந்தாப்பலே".

எச்சா : வி.அடை. அதிகமாக.

எச்சிக்கை : பெ. வலக்கை "எச்சிக்கையிலெ காக்கா ஓட்ட மாட்டான்".

எச்சில் ஓடு : பெ. எக்கட்சியார் முதலில் ஆடவேண்டும் என அறியப் பயன்படும் எச்சில் தடவியசிறு ஓடு.

எச்சில் பணிக்கம் : பெ. பார். எச்சக்காளாணி.

எச்சுக்கூட்டி ஆபிசரு : எக்சிகியூடிவ் ஆபிசர் : பெ. நிர்வாக அதிகாரி (ஆங்கிலம்).

எச்சுக்கூலி : பெ. அறுவடையின்போது சேர்த்துக்கொடுக்கும் கூலி.

எச்சுத்தக்கா : எக்கச்சக்கமாக : வி.அடை. 'எச்சுத்தக்கா பேசிப் போட்டா'.

எச்சுப் பண்ணாட்டு : பெ. அதிகப் பிரசங்கத்தினம்.

எசகடம் : பெ. வேண்டுதல்.

எசகுபிசகா : வி.அடை. தாறுமாறாய் 'போன எடத்துலெ எசகுபிசகா மாட்டிக்காதெ'.

எசமானக் கவுண்டன் : பெ. பார். ஊர்க்கவுண்டன்.

எசமானர் : பெ. தேவாங்கச் செட்டியார் இனத்தின் தலைவர் : செட்டுமையும் இவரும் சம அதிகாரம் பெற்றவர்கள்.

எசமானர் கூட்டம் : பெ. எசமானக் கவுண்டன் வழிவந்தவர்கள்.

எசவு : பெ.வழி 'தப்பிக்க எசவே இல்லெ'.

எசவுக்காரி : பெ. சாமர்த்தியமானவள்.

எசிலி : பெ. போட்டி 'ரெண்டுபேரும் எசிலி போடாதீங்க'.

எசை : பெ. இராகம்.

எசையெடுக்க ஆரம்பிச்சிடுவா : அடிக்கடி திட்டிக் கொண்டே இருப்பவளைக் கூறுதல்.

எஞ்சாமி : பெ. சிறு குழந்தையைக் கொஞ்சும் சொல் 'சின்னமணி பொன்னுமணி எஞ்சாமி'.

எட்டணாவு : எட்டணா : பெ.

எட்டன் : பெ. மூடன் (கன்னடம்).

எட்டாளு கட்டுத்தரையா : பெ. ஒருவகை விளையாட்டு.

எட்டி : பெ. மரவகை "எட்டி மரமானாலும் சிவன் தொட்ட மரம்".

எட்டி : வி.அடை. எகிறி 'எட்டிக் குதி'.

எட்டிக்காய் : பெ. மனத்திற்குப் பிடிக்காதது 'அவனென்றால் எனக்கு எட்டிக்காய்'.

எட்டிப்புடி : ஏ.வி., 1. கைநீட்டி அவனைப் பிடி, 2. வேகமாக நடந்து முன்னால் செல்பவனுடன் சேர்ந்துகொள்.

எட்டிப் போ : ஏ.வி. தூரப்போ.

எட்டிப்போடு : ஏ.வி. வேகமாக நட 'எட்டிப் போடு பஸ் போயிடு'.

எட்டுக்கட்டத் தாயம் : பெ. மகளிர் தாய விளையாட்டு.

எட்டுக்கால் பூச்சி : பெ. சிலந்தி.

எட்டுக்கையம்மன் : பெ. துர்க்கை.

எட்டுமாஸ்டரு : பெ. தலைமை ஆசிரியர்.

எட்டுவா : எடுத்து வா : ஏ.வி. 'பை எட்டு வா'.

எடக்கா செய்யாதே : ஏ.வி. செயலை முறையின்றிச் செய்யாதே.

எடக்கா : இடக்காக : பெ. 1. குதர்க்கமாக, 2. முரணகா.

எடக்கு பேசறது : தொ.பெ. குதர்க்கமாகப் பேசுதல்.

எடக்குமொடக்கு : வி. அடை. முரணாகப் பேசுகை.

எடக்கைச் சல்லை : பெ. கோவிலிலுள்ள ஆயுதம்; நீளமான மூங்கிலின் நுனிப் பகுதியில் கத்தி போன்று சாமியில் அமைப்பு இருத்தல்.

எடக் கொள்ளையிலே போறவனெ : இடைக்கொள்ளையில் போகிறவன் காலரா, அம்மை ஆகியவற்றால் வாழ்நாள் முடியாமல் இடையில் இறக்க என வைதல்.

எடத்தலஞ்சு வருது : இடையில் தளிர்க்கிறது : வி.மு. குருத்து அழிந்தபின் அடுத்த குருத்து பக்க வாட்டில் கிளைத்தல்.

எடத்தில் : வி.அடை. இடப்பக்கத்தில்.

எடப்பட்டி : பெ. கூரை விரிந்து கொடுக்காமல் இருக்க இரு ஓட்டுப்பட்டிக்கு இடையில்போடும் தப்பை.

எடப்பாளை : இடைப்பாளை : பெ. நெற்பயிரின் ஒரு தூரில் உள்ள நெல் மணிகள் பாதி நெல்லாகவும் பாதி பாளை யாகவும் இருத்தல்.

எடப்பாளைச் சோத்து நேரம் : பெ. மாலை ஐந்து மணி அளவு.

எடயன் : இடையன் : பெ. "ஆடு கொழுத்தவரெ எடெயனுக்கு லாபம்".

எடவாடு : பெ. இரண்டுங் கெட்டான்.

எடவெட்டு : பெ. இடைவெளி 'எடவெட்டு வுட்டு வெட்டுங்கள்.

எடுக்கமுடியாது : வி.மு. இல்லை எனும் குறிப்பு 'ஒரு பைசா கூட எங்கிட்ட எடுக்க முடியாது.

எடுக்கறாப்பலெ வந்துருச்சு : வி.மு. நாற்று எடுத்து நடக்கூடிய அளவு வளர்தல்.

எடுக்குறக்கு : எடுப்பதற்கு : வி.எ.

எடுகாதே : எடுக்காதே : எ.ம.வி.

எடுத்துச்சொல்லு : ஏ.வி. 1. புத்திக்கூறு 'நீ எடுத்துச் சொல்லு கேட்டுக்குவா', 2. விளக்கிக்கூறு 'நீதா கொஞ்சம் இவனுக்கு எடுத்துச் சொல்லு நாஞ்சொல்றது வெளங் கலையாம்'.

எடுத்துட்டாங்கலா : வி.மு. சவம் அடக்கம் பண்ணியாகி விட்டதா.

எடுத்துவோம் : வி.மு. வேலை ஆரம்பிப்போம் 'தினொ ஆறு மணியான எடுத்துடுவோம்'.

எடுத்தெறிஞ்சு : வி.எ. அலட்சியமாக 'எடுத்தெறிஞ்சு பேசாதே'.

எடுப்பார் கைப்புள்ளெ (பிள்ளை) : பெ. அப்பாணி.

எடுப்பு : பெ. இறுமாப்பு 'இவனுக்கு எடுப்பு தாஸ்தி', 2. நல்ல தோற்றம். 'ஆளு எடுப்பா இருக்கா(ன்)'.

எடை : பெ. இடம் 'நா பேசறதுக்கே எடை கிடையாது'.

எடை (இடை)க்கணுத் தண்டுப்புழு : பெ. கரும்பில் விழும் புழு (எடைத் தண்டுப்புழு).

எடைக்கல்லு : பெ. பொருளை நிறுத்த உதவும் அளவுக்கல்.

எடைகட்டு : ஏ.வி. பாலின் அளவுடன் அதே அளவு நீர்.சேர்.

எடை கட்டுன பாலு : பெ. சம அளவு நீர் சேர்த்த பால்.

எண்ணக்காப்பு சாத்துதல் : தொ. பெ. இறைவனுக்கு எண்ணெய் பூசுதல்.

எண்ணத்தேப்பு : பெ. எண்ணெய் தேய்த்துக் குளிக்கும் குளியல் 'எண்ணத் தேப்பு முடுஞ்சுதா' .

எண்ணுன : எண்ணிய : பெ.எ. 'எண்ணுன காரியம்'.

எண்ணெ எடுக்கறது : தொ. பெ. கல் நகையில் இறங்கிய எண்ணெய்யை எடுத்தல்.

எண்ணெ கட்டறது : தொ. பெ. குழந்தைக்குக் கண், மூக்கு, காது இவற்றிற்கு எண்ணெய் விடுதல்.

எண்ணெ கத்திரிக்காக் கொழம்பு : பெ. காரமும் புளியும் இட்டுச் செய்த கத்திரிக்காய்க் குழம்பு.

எண்ணெ கொழந்தை : பெ. பிறந்த குழந்தைக்கு ஒரு மாதம் வரை எண்ணெய் பூசி படுக்க வைத்தல்.

எண்ணெ தொடக்கறது : தொ. பெ. தலைக்கு எண்ணேய் இடுதல்.

எண்ணெய்க்காய் : பெ. எண்ணெய் வாங்கும் பாட்டில்.

எண்ணெய்க் குழி : பெ. வீடுகளில் எண்ணெய் வைப்பதற்காகச் சுவரில் விடப்பட்ட துவாரம்.

எண்ணெய்ச் சீரு : பெ. எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டும் திருமணச் சடங்கு எ-டு : நாயக்கர் (நாகவல்லிச்சீரு).

எண்ணை கூட்டம் : பெ. ஓர் இனம்.

எணக்கி : வி.எ. மயக்கி 'எப்படியோ அவனெ எணக்கிப் போட்டுக்கிட்டா' (மடக்கி)

எத்தச்சோடு : பெ. அடை. எவ்வளவு பெரியது.

எத்தன் : பெ. ஏமாற்றுவோன் 'பெரிய எத்தனா இருக்கியே'.

எத்தன வேனாலு : எவ்வளவு வேண்டுமென்றாலும் : வி.எ.

எத்தனாச்சு : எவ்வளவு ஆயிற்று : வி.மு.

எத்தனை : எவ்வளவு : பெ.

எதாந்தாலும் முடுச்சுக்கலாம் : எதுவாகிலும் முடித்துக் கொள்ளலாம் : வி.மு.

பிரச்சனைகளை நியாயம் அல்லது பஞ்சாயத்து மூலம் தீர்த்துக் கொள்ளலாம்.

எதிரடி : பெ. சொத்தின்பேரில் வாங்கிய பணத்தையும் வட்டியையும் எழுதிக் கொடுத்துள்ள காலத்திற்குள் செலுத்தாவிட்டால் சொத்தை இழத்தல் (கெடுவு கட்டறது).

எதிரடி வாக்கு : பெ. பல்லி, மாலை நேரம் இறைவனுக்கு நேராக வருதல்; கவுளி வாக்கில் இங்ஙனம் வந்தால் விழா எடுக்கக் கூடாது என்று பொருள். (எ-டு) அரியப்பம் பாளைய மாரியம்மன் விழா.

எதிரி : பெ. விரோதி "எறிஞ்ச கல்லெ எடுத்து வந்தவ(ன்) எதிரியாயிட்டான்."

எதுக்காலெ : எதிரில் : வி.அடை. (எதுப்பிலெ).

எதுக்கோசரம் : எதற்காக : வி.அடை.

எதுத்தநடை : பெ. எதிர்வீடு.

எதுப்பானா : எதிர்ப்பானா. வி.மு.

எதுனாலெ : எதனால் : வி.அடை.

எந்தரம் : பெ. எழுதி மந்திரித்த தகடு (தாயத்து).

எந்தலையெழுத்து இப்படியெல்லா இருக்கு; அலுப்புக் குறிப்பு.

எந்திரங் கட்டிட்டான் ; வி.மு. பேய் பிசாசு நெருங்காமல் எல்லை கட்டிவிட்டான்.

எந்திரியாதே : எ.ம.வி. எழுந்திருக்காதே.

எப்பும் : எப்பொழுதும் : வி.அடை. "எப்பும் சிரிச்சவ எள்ளுக் காடு பூத்தவ" (எப்பவும்).

எப்புடி : எவ்வளவு : பெ. 'வெலே எப்புடி'.

எம்படது : என்னுடையது : வி.அ.பெ.

எம்பாட்டுக்கு : என் போக்கில் : வி. அடை. 'எம்பாட்டுக்கு நா இருக்கே'.

எம்பாடு ரெண்டடிக்குது : துன்பப்படுதற் குறிப்பு.

எம்பொளப்பு காஞ்சுட்டுத்தானே இருக்கு : துன்பப்படுதற் குறிப்பு.

எம்பொறப்பு : என்னுடைய உடன்பிறப்பு : பெ.

எம்முட்டு : எவ்வளவு : பெ. (எமுட்டு).

எம்மேலே சொன்னா நாக்கு அழுவிப் போகும் : சாபத்தோடு கூடிய வசை.

எமகாதகன் : பெ. பொல்லாதவன்.

எமடன் : பெ. 1. திருடன், 2. பொல்லாதவன்.

எரங்காடு : பெ. பருத்தி விளைவிற்குரிய புன்செய்.

எரணங்கழித்தல் : தொ.பெ. விளாங்குறிச்சி அங்காளம்மன் கோவில் மகாசிவராத்திரி விழாச்சடங்கு - விழா முடிந்த பின் கம்பு மாவில் குழந்தைபோல் செய்து இறைவனையும் கையில் கொண்டு ஊரை வலம் வந்தபின் நீருள்ள குளுமையான இடத்தில் புதைத்தல்.

எரணி : பெ. திருமணத்திற்கு பயன்படுத்த குயவன் வீட்டிற்குச் சென்று வாங்கும் பானைகள்.

எரணைச் சீரு : பெ. சக்கிலியர் திருமணச் சடங்கு : மண மக்களின் தலைக்குமேல் தட்டை வைத்து அதில் 4 சொம்பு நீரை ஊற்றுதல்.

எரப்பாணி : வசை.

எரணம் : எருமை : பெ. "சோத்துல கெடந்த கல்லெ எடுக்காதவன் சேத்துல கெடக்கும் எருமெயெ தூக்குவானாம்" (வகை : காலேஜி எருமை, கிர், நாட்டு எருமை, முர்ரோ).

எரவல் : இரவல் : பெ. "எரவல் சேலெயுடுத்தி எழவுக்குப் போனாள் விக்கி அழுதாள் விளிம்பு கத்திரிச்சுதாம்".

எரவள்ளர் : பெ. பழங்குடிகள்.

எரவாரம் : பெ. தொட்டிக்கட்டு வீட்டில் கட்டப்படும் திண்ணை.

எரவாரச் சட்டம் : பெ. வீட்டுச் சட்டங்களில் ஒன்று.

எரையாக : வி. அடை. கதியென 'ஏண்டா அவனெ எரையிலு கெடக்கறே'.

எரு : பெ.உரம் "எருப்போட்டவன் பொழெப்பானா? ஏவி ருஞ்சவன் பொழெப்பானா?"

எருஎரைக்கறது : தொ.பெ. குவியல் குவியலாகக் கொட்டப் பட்டுள்ள நாட்டு உரத்தைக் காடு முழுவதும் பரப்புதல்.

எருக்கச்செடி : எருக்கலாஞ் செடி : பெ. இச்செடி உரமாகப் பயன்படுத்தப்படுகிறது.

எருக்கலங்காபூரி : பெ. இனிப்புவகை (காஞ்சிக்கா, சோமாசு).

எருக்குழி : பெ. சாணம் முதலிய கழிவுப் பொருள்களைக் குவிக்கும் உரக்குழி.

எருத்து : எருது : பெ. ஆண்மாடு "நடக்கற எருத்து வாலெ புடிக்கற மாதிரி".

எருமக்கூட்டு நேரம் : பெ. மேய்ந்து கொண்டுள்ள எருமைகள் இளைப்பாற மரத்தடியில் கூடும் நேரம்; சுமார் காலைப் பத்து மணி.

எருமக்கெடா : பெ. 1. ஆணெருமை "ஈ போறது தெரியும் எருமெக்கடா போறது தெரியாது", 2. வசை (எருமெக்கோணா).

எருமக்கெடாரி : பெ. பருவத்திற்கு வந்த பெண் எருமை.

எருமாத்தி போடுதல் : தொ.பெ. பங்காளிகள் நால்வர், நாவிதன், இறந்தவர் மகன் அனைவரும் குளித்தபின் மகன் இவரையும் முன்னால் போக விட்டுச் சாணத்தால் தன் தலையை மூன்றுமுறை சுற்றி வீசிவிட்டுக் குடத்து நீரை மூன்றுமுறை தெளித்து விட்டுத் திரும்பிப் பார்க்காமல் வீட்டிற்கு வருதல்.

எ-டு. வேளாளர், பண்டாரம்.

எருமாமாட்டை : பெ. தட்டிக் காய வைத்த சாணம் (எருமா முட்டை, எருமாமுட்டி, எருவாமுட்டி, எருவாமுட்டை, எருவுமுட்டி, எரு வறட்டி, சாணித்தட்டு, சாணித்தட்டை).

எருவோட்டறது : தொ.பெ. உரக்குழியிலுள்ள உரத்தை வண்டியின் மூலம் காட்டிற்குச் சேர்த்தல் (எரு கொட்டறது, எருவழிக்கறது).

எல்பர்கட்டை : பெ. நெசவுக்கருவி.

எல்லை : பெ.1. கூப்பிடு தூரம், 2. சடுகுடு விளையாட்டில் இரண்டு கட்சிகளுக்கும் மத்தியிலுள்ள கோடு, 3. முடிவு, 4. வரம்பு.

எல்லைக்கல்லு : பெ. எல்லையறிய நிறுத்துங் கல்.

எல்லைக்கருப்பன் : பெ. கிராம தேவதை.

எல்லிஸ்பேட் : பெ. கிறிஸ்தவர்களாக மதம் மாறிய பள்ளர்கள் வாழும் பகுதி.

எலக்கரை : பெ. சீலையின் கரைகளில் ஒருவகை.

எலந்தப்பழம் : இலந்தைப்பழம் : பெ. (எலந்தமரம்).

எலந்தப்பொடி : பெ. இலந்தைப் பழத்தைக் கொட்டை நீக்கி இடித்துக் காயவைத்தது.

எலந்தவடை : பெ. இலந்தைப் பழத்தைக் கொட்டையுடன் இடித்துக் காய வைத்தல்.

எலப்புக்கூடு : பெ. பார். 1. அலகு (எலப்புக்கூட்டு உளி).

எலப்புல்லு : பெ. புல்வகை.

எலப்புழு : இலைப்புழு : பெ. இலைகளில் இருக்கும் புழு.

எலி : பெ. (வகை : கரம்பை எலி, காட்டெலி அல்லது வெள்ளெலி, சுண்டெலி, பெருக்கான், மூஞ்சி எலி, வீட்டெலி).

எலி அம்மணத்தோட போகுது : சகுனம் பார்த்தலைக் கேலியாகக் குறித்தல்.

எலிக்கத்திரி : பெ. எலி பிடிக்கும் கருவி.

எலிகோனியம் : பெ.பெ. ஹெலி கோலியம் : அலங்காரத்திற்குதவும் பூ (ஆங்கிலம்).

எலிப்பாசானம் : பெ. எலி இறக்கவைக்கும் மருந்து (எலிமருந்து).

எலிப்புழுக்கை முட்டாய் : பெ. பொடியாக உள்ள மிட்டாய் வகை (சீரகமுட்டாய்).

எலிப்பொட்டி : பெ. மரத்தல் ஆன எலி பிடிக்கும் கூண்டு.

எலும்பன் : பெ. சதைப்பற்று இல்லாதவன்.

எலும்பு இக்கெட வந்துறுச்சு : எலும்பு வெளியே வந்துவிட்டது.

எலும்புக்குண்டு : பெ. குண்டாக (விளையாடுங் கருவி)ப் பயன்படும் உருண்டை எலும்பு.

எலுமிச்சங்காய்ஓலை : பெ. அணிகலன்.

எலுமிச்ச நீர் : பெ. எலுமிச்சபழ சர்பத்.

எலைக்கருக(ல்) நோவு : பெ. பயிர் நோய்.

எலைக்கருவேல் : பெ. மரவகை.

எலைக்கறது : இளைத்தல் : தொ. பெ. செதுக்கி மென்மை ஆக்குதல்.

எலைகோக்கும் விசிறி : பெ. பொருள் தெரியவில்லை.

எலைச்சுருட்டை நோவு : பெ. பயிர் சிவத்தல் (எலை சுருட்டி நோவு).

எலைசுருட்டுப்புழு : பெ. நீளவாக்கில் சுருட்டப்பட்ட இலைச் சுருளில் இப்புழுக்கள் இருக்கும்.

எலைத்தேள் : பெ. இப்புழு உடம்பில் பட்டால் அரிக்கும்.

எலைப்புளி நுனி கருகல் நோவு : பெ. இலைகளின் செங்கல் வடிவப்புள்ளி விழுதல் (எலைப்புள்ளி நோவு, நுனி கருகல் நோவு).

எலையுறை அழுகல் நோவு : பெ. பயிர்நோய்.

எலையூஞ்சமரொ : பெ. பார். அலங்காரக் கொன்னை.

எவ்எட்டணா : பெ. வியாபாரத்தில் ஒவ்வொரு பொருளும் எட்டு எட்டணா என்று பொருள் ‘கூறு எவ் எட்டணா எடுங்க’.

எழப்பு வாங்குது : வி.மு. மூச்சு வாங்குது.

எழுத்தாணி : பெ. காது குத்துச் சடங்கிற்குப் பயன்படுவது; குழவியுடன் சேர்த்துக் கட்டப்பட்ட எழுதுகோல்.

எழுத்தாணிச்சீரு : பெ. காது குத்துச் சடங்கு ஆண்பிள்ளை, பெண் பிள்ளை இருவருக்கும் ஒரே சமயத்தில் நடத்தப் படும். ஆண்பிள்ளை இல்லையெனில் எழுத்தாணி ஆண் பிள்ளையாகக் கருதப்பட்டுப் பெண்பிள்ளையுடன் அதற்குச் சடங்குகள் நடத்துதல்.

எழுதத்தா செய்வே(ன்) : வி.மு. எழுத மட்டும் செய்வேன்.

எழுதாக் கொறைக்கு அழுதாத் தீருமா : தலையெழுத்து சரியில்லையெனில் வருந்துவதில் பலனில்லை.

எழுதிங்கு சீர் : பெ. உடையார் இனத்தின் காதுகுத்துச் சடங்கிற்குப் பெயர். இச்சடங்கு இருதினங்கள் நடைபெறும்.

எழுதுனவன் : வி.அ.பெ. இறைவன் "எழுதுனவன் செயலா எண்ணுனவன் செயலா?".

எழும்பு : எழுந்திரு : ஏ.வி. (எந்திரி).

எள்ளளவும் : வி.அடை. மிகச் சிறிதளவும்.

எள்ளுக்கா ஈயி : பெ. எள்ளின் உட்பகுதியில் விழும் புழு வெளி வரும்போது ஈயாக வரும்.

எள்ளுசாதம் : பெ. சனி விரதம் இருப்பவர் காகத்திற்கு இடுவது.

எள்ளுந்தண்ணி ஊத்தற சீரு : பெ. பெண்ணின் பெற்றோர் தாரை வார்க்கும் போது மணமக்களின் கையின்மேல் எள், பணம் வைத்து அதன்மேல் பால் ஊற்றுதல்; பெண் இனிமேல் அவர்களுக்கு உரிமையில்லை என்பதைக் குறிக்க.

எ-டு : வேளாளர், உடையார். (எள்ளுந்தண்ணி தாரை வாக்கறது, எள்ளுந் தண்ணி தாரைகுடுக்கறது).

எள்ளுமாவு : பெ. எள்ளும் வெல்லமும் கலந்து இடிக்கப்பட்ட உருண்டை "எள்ளுமாவு வேண்டாது ஒரலெ நக்குன மாதிரி".

எள்ளுருண்டை : பெ. பார். எள்ளுமாவு "ஏழைக்குத் தவுந்த எள்ளுருண்டை".

எள்ளுவுழுக எடமில்லெ : நெருக்கடியான இடம் (எச்சித் துப்ப எடமில்லெ).

எள்ளெண்ணெ : பெ. எள்ளிலிருந்து எடுக்கப்பட்ட எண்ணெய்.

எளச்சவ(ன்) : இளைத்தவன் : வி.அ.பெ. "எளச்சவன் சொல்லு வலுத்தவனுக்குக் கேக்காது".

எளங்கொடி : பெ. ஓர் ஆண்டு நிறையாத திராட்சைக்கொடி.

எளங்குருத்துப்புழு : பெ. இளம் குருத்தைத் தாக்கும் புழு.

எளநி கண் தொறந்து குடு : ஏ.வி. இளநீரைச் செதுக்கித் துளையிட்டுக் கொடு.

எளநேரம் : இளநேரம் : பெ. வெயில் தணிந்த காலை மாலை நேரங்கள்.

எளப்பாரப் போடறது : இளைப்பாறப் போடுதல் : தொ.பெ. ஒரு விளைவு எடுத்தபின் காட்டை உழுது மூன்று மாதம் பயிர் செய்யாமல் விட்டு வைத்தல்.

எளப்பாரி : இளைப்பாறி : வி.எ. களைப்பு நீங்கி.

எளப்பு : பெ. ஆஸ்த்துமா.

எளமதியம் : இளமதியம் : பெ. சுமார் பதினொரு மணி.

எளவு : இழவு : பெ. இறப்பு "எளவுக்குப் போனவ தாலி அறுத்தது போல".

எளையகுடி : இளையகுடி : பெ. இரண்டாம் மனைவி.

எறக்கனும் : வி.மு. இறக்க வேண்டும் 'தெளுவு எறக்கனும்', 'பாக்கு எறக்கனும்'.

எறகு : பெ. 1. ஏற்றம் இறைக்கும் கருவி, 2. சிறகு "மயிலே மயிலே எறகு போடுன்னா போடுமா?".

எறங்கினே : வி.மு.1. செயல்படுதல் 'ரொம்ப தூரம் யோசிச்சுதா எறங்கினே'.

எறங்குநெத்தி : பெ. இறங்கியுள்ள நெற்றி நல்லதல்ல.

எறத்தொட்டிர் : பெ. நாயக்கர் உட்பிரிவு.

எறவு : பெ. கிணற்று நீரைப் பகிர்ந்து கட்டும் முறை (முறைக்கட்டு).

எறும்பு : பெ. "கரும்பு கட்டோட இருந்தா எறும்பு என்ன செய்யும்?".

(வகை : கட்டெறும்பு, சாமி எறும்பு அல்லது புள்ளையார் எறும்பு, சுளுக்கை எறும்பு, செவப்பெறும்பு அல்லது செவ்வெறும்பு).

என் நாக்குலெ சனி : வலிய வம்பில் மாட்டிக் கொண்டவர் அலுப்பினால் கூறுதல்.

என் மனசு வேகுறது ஒனக்கு எங்கெ தெரியும் : குறிப்பு மொழி.

என்ர : என்னுடைய : பெ. அடை. 'என்ர பையே'.

என்னத்துக்கு : எதற்கு : பெ. "வேலியை பயிரெ மேஞ்சா வெள்ளாமெ என்னத்துக்கு ஆவும்".

என்ன பேச்சுப் பேசறா(ள்) : சண்டைக்காரியைக் குறிப்பிடுதல்.

என்னமோ கடந்துட்டு போவுது : எதுவோ இருக்கட்டும் எனும் அலுப்புக் குறிப்பு.

என்ன வாக்கெ போங்க : விரக்திக் குறிப்பு.

என்னன்னா என்ன : அதிக உறவு இன்மையைக் குறிப்பிடுதல். 'பக்கத்து வீட்டோட என்னன்னா என்ன அவ்வளதா'.

என்னிவா : என்னையா : வி. அடை.

என்னுது : என்னுடையது : வி.மு.

என்னேரமும் கண்ணுலெ வெளக்கெண்ணெயெ உட்டுட்டு உக்காந்துடுங்க : 1. ஒன்றிலேயே கூர்ந்த கவனம் செலுத்துதல், 2. வசை.

என்னைக்கு : என்று : பெ.

என்னொ : என்ன? : பெ.

எனக்கா வேத்து வடியுது : தான் பொறுப்பிலிருந்து மீள்தல்.

எனக்காரிச்சீரு : பெ. உடையார் திருமணத்தில் சகோதரியின் சடங்கு.

எனச்சா : இணைத்தால் : வி.எ.

எனச்சீரு : பெ. வேட்டுவர் திருமணச் சடங்குச்சோதரி கட்டிலை வலம்பர மாப்பிள்ளை கட்டில் ஏறுதல்.

எனம் : இனம் : பெ. 'ரெண்டு பேரு ஒரே எனந்தானே நல்ல புத்தி எப்படி வரு' "எனம் எனத்தோடு சேரும்".

எனுக்கு : எனக்கு : பெ.

எனை : இணை : பெ. இரட்டை 'ஒரு எனெசெருப்பு வாங்கிட்டு வா'.

எஸ்.எல்.சி : எஸ்.எஸ்.எல்.சி : பெ. (ஆங்கிலம்).

## ஏ

ஏ : இடை. அழைக்கும் குறிப்பு : ஏ குப்பா அங்கென்ன பண்ணிட்டிருக்கே'.

ஏக்கர் : பெ. ஆங்கிலம்.

ஏக தடபுடலா : வி. அடை. ஆடம்பரமாக.

ஏகப்பட்ட : பெ. அடை. கணக்கிலடங்காத.

ஏகமா : வி.அடை. 1. பரவலாக 'நெல்லை ஏகமா காயப்போடு'.
2. மிகுதியாக 'ஏகமா பொருள் சேந்திடுச்சு'.

ஏகுமுத்திரி : பெ. பச்சாபாளையம் - சிவன் கோவிலிலுள்ள தீர்த்தம் : மக்கள் தங்களுடைய நோய், குறை நீங்க இதனை வாங்கிக் குடிப்பர் (ஏகநீர்).

ஏகாதசி : பெ. அமாவாசையை அடுத்த பதினோராவது நாள் "தரித்திரம் புடிச்சவ(ன்) தலெ முழுகப் போனா ஏகாதசி வந்துதாம்".

ஏகாலி : பெ. சலவை செய்வோன்.

ஏங்க்கா : பெ. ஏனுங்க அக்கா.

ஏங்கல் : பெ. 1. குழந்தைகளுக்கு வரும் காசநோய், 2. பெரியவர் களுக்கு வரும் ஆஸ்த்துமா.

ஏங்கல் கொணம் : பெ. பார். 2. ஏங்கல்.

ஏச்சு : பெ.1. வசை. 'வீட்டுக்குப் போனா ஏச்சு கிடைக்கு(ம்)' (ஏசு).

ஏச்சு : வி.எ. ஏமாற்றி 'ஏச்சுட்டுப் போயிட்டா'.

ஏட்டிக்குப் போட்டி : பெ. வீண் பிடிவாதம் (விதண்டாவாதம்).

ஏட்டுக்கொணம் : ஏட்டுக்குணம் : பெ. ஏடு போட்டபின் குழந்தை நலிவுறுதல்.

தொட்டிலில் கட்டியுள்ள ஏட்டை, குணமாகத் திருப்பிப் போடுபவர்.

ஏட்டை : பெ.1. மீன், 2. கருவாடு.

ஏடாகோடம் : பெ. ஒழுங்கின்மை 'ஏடாகூடமாப் பேசிட்டு இருக்காதே'

ஏடு : பெ. 1. குழந்தை நலிவுற்றால் பண்டிதரிடம் எழுதப்படும் பனை ஓலை, 2. புத்தகம்.

ஏடு தொகுக்கி : பெ இரு மரப்பலகைகளுக்கிடையே ஏடு அடுக்க ஏற்படுத்தப்பட்ட அமைப்பு.

ஏடு போடறது : தொ. பெ. குழந்தை நலிவுற்றால் பண்டிதரிடம் பனை ஓலையில் எழுதி வாங்கிக் குழந்தைக்கு அல்லது தொட்டிலுக்குக் கட்டுதல்.

ஏணி : பெ. ஏறுதற் கருவி : "ஏறவுட்டு ஏணியெ எடுத்த மாதிரி".

ஏணிக்கூச்சம் : பெ. தூண்களுக்குப் பதிலாக வீடுகளில் அமைப்பது. இரு நீண்ட சட்டங்களுக்கிடையே குறுக்குச் சட்டம் வருதல் (ஏணிக்கால்).

ஏத்தம் : பெ. உயரம் 'செவரு ஏத்தமா இருக்கு', 2. ஏற்றம் "ஏத்தம் எறைக்கறதுக்கும் காக்கா குடிக்கறதுக்கும் சரியாப் போச்சு", 3. திமிர் 'உனக்கு ஏத்தொ ரொம்ப ஆயிடுச்சு'.

ஏத்தி : ஏற்றி : வி.எ.

ஏத்து : பெ. வசவு 'வீட்டுக்குப் போனா(ல்) ஏத்து கெடைக்கு'.

ஏத்து செவுறு : பெ. கிணற்றின் உள் இருந்து பொருளை எடுக்க, கிணற்றிற்குள் பொருளை இறக்கப் பயன்படும் கிணற்றின் மேற்பகுதியிலுள்ள இடம்.

ஏத்துமரம் : பெ. ஏற்றம் இறைக்குங் கருவி. படி மரத்திலிருந்து செல்லும் இருதூண்.

ஏத்தோட்டம் : பெ. ஏற்றம் இறைத்தல்.

ஏதாச்சும் : ஏதாவது : வி. அடை.

ஏதுங்கெட்டவன் : வி.அ. பெ. வசை. (பங்கம் கெட்டவன்).

ஏது செய்வே(ன்) : என்ன செய்வேன் : வி.மு.

ஏதோ ஒரு கெரகொ எடுத்த இடுப்பிலெ கட்டினாச் சரி : 1. வறுமைக் குறிப்பு, 2. விரக்திக் குறிப்பு.

ஏதோண்ணு : வி. அடை. 1. என்னவோ என்று 'ஏதோண்ணு பயந்து போயிட்டே'. 2. ஏதாவது ஒன்று 'ஏதோண்ணு குடு'.

ஏந்தி எடுக்கறது : தொ. பெ. கல் விளையாட்டில் கல்லைக் கையின் பின்புறம் நிறுத்துதல்.

ஏப்பம் : பெ. 1. ஏமாற்றுதல், 'உம் பணத்தே ஏப்பம் உட்டுட்டா'.

2. செரிக்காதபோது வருவது புளி ஏப்பம் "உண்டது தான் ஏப்பம் வரும்",

3. பசியினால் வருவது பசி ஏப்பம்.

ஏமாந்தாப்பலெ : வி.அடை. மறதியாக 'ஏமாந்தாப்பலெ எங்கியோ வச்சுட்டே'

ஏய்த்தல் : பெ. வஞ்சித்தல் 'ஏமாந்த ஏய்ச்சிடுவாங்க'.

ஏர் : பெ. உழவுக்கருவி.

ஏர்க்கறதில்லெ : வி.மு. ஏற்பதில்லை. ஏறுவதில்லை 'என்ன சொன்னாலும் ஏர்க்கறதில்லெ'.

ஏர்க்கால் : பெ. வண்டியின் நடுப்பகுதியில் செல்லும் பலகை.

ஏர் பழக்கறது : தொ. பெ. மாட்டை உழவுக்குப் பழக்குதல்.

ஏராக்கப்பல் : பெ. 1. ஆகாய விமானம், 2 . பச்சையின் வடிவம் (ஏராபிளானு, ஏரோப்பிளானு) (ஆங்கிலம்).

ஏராபிளான்காயி : பெ. ஒருவகைச் செடியிலுள்ள விமான வடிவக்காய் (ஆங்கிலம்).

ஏரால் : பெ. 1. கருவாடு, 2. மீன்.

ஏருக்கு ஏர் ஓட்டறது : ஒவ்வொரு ஏர் வைத்துள்ள சிறு விவசாயிகள் ஒருவருக்கொருவர் உதவிக்கொள்ளுதல்.

ஏருபின்னு : பெ. தலைக்குக் குத்தும் அணிகலன் (சைடுஊசி, சைடுபின்னு, தலப்பின்னு, வகை : மீன்சைடுஊசி, ரோஜாப்பூ ஏர் பின்னு) (ஆங்கிலம்).

ஏலங்கூறுதல் : தொ. பெ. கேட்கப்பட்ட ஏலவிலையைப் பலரறியக் கூறுதல்.

ஏலச்சீட்டு : பெ. ஏலங் கேட்டுஎடுக்குங் கூட்டுச் சீட்டு.

ஏலம் : பெ. ஒரு வாசனைப் பண்டம் (ஏலக்காய்).

ஏவாந்தொ : ஏகாந்தம் : பெ. 1. இரகசியம், 2. தனிமை.

ஏவாரம் : வியாபாரம் : பெ (யாவாரம், யாபாரம்).

ஏவுகொணொ : ஏவு குணம் : பெ. மந்திர சக்தியால் பிறரைத் தூங்கும்போது தாக்குகை.

ஏழாம் பொருத்தம் : பெ. ஒற்றுமையின்மைக் குறிப்பு 'ரெண்டு பேருக்கு என்னைக்கு ஏழாம் பொருத்தந்தா'.

ஏழு எருமைப் பள்ளம் : பெ. ஏழு எருமை இப்பள்ளத்தில் அடித்துக் செல்லப்பட்டதால் ஏற்பட்ட பெயர்.

ஏழெலைப்பாலை : பெ. ஒருவகைச் செடி.

ஏறுக்குமாறு : பெ. ஒழுங்கின்மை.

ஏறுகத்தி : பெ. பாளையைச் சீவும் கத்தி (பாளக்கத்தி).

ஏறுநெத்தி : பெ. உயர்ந்துள்ள நெற்றி. இப்படி இருப்பின் வாழ்வில் உயர்வான்.

ஏறுபொழுது : பெ. முற்பகல்.

## ஐ

ஐ. ஆர். அம்பது : பெ. நெல்வகை.

ஐ. ஆர். எட்டு : பெ. நெல்வகை.

ஐ. ஆர். இருவது : பெ. நெல்வகை.

ஐக்கோரா : பெ.1. கடல்மீன், 2. கருவாடு.

ஐதீகம் : பெ. உலகுரை.

ஐந்தாங்கல்லு : பெ. ஒருவகைக் கல்விளையாட்டு.

ஐய்யஞ்சீரு : பெ. திருமணச் சடங்கு, எ-டு. உடையார்.

ஐய்யய்யோ நா என்ன பண்ணுவெ : பதட்டக் குறிப்பு.

ஐய்யன் கோவில் : பெ. விடம் தீண்டியவர்கள் இக்கோவிலிலுள்ள புற்றுமண் மூலம் குணம் அடைகின்றனர்.

ஐய்யனுக்குச் சாமானம் கொடுக்கறது : தொ. பெ. உடையார் திருமணச் சடங்கு.

ஐயன் : பெ. 1. தந்தை, 2. தெய்வம், 3. பெரியோர்.

ஐவரலி : பெ. ஒருவகைப் பழம் (ஐவிரலிமரம்).

ஐஸ்நெம்பர் : பெ. ஒழிந்து இருப்பவர்களைக் கண்டுபிடிக்கும் விளையாட்டு.

## ஒ

ஒக்காரு : உட்கார் : ஏ.வி.

ஒக்கிலியன் : பெ. தமிழ் நாட்டிற் குடியேறிய கன்னடச் சாதியான் "சக்கிலியென நம்புனாலும் ஒக்கிலியனெ நம்பாதே".

ஒக்குட்டி சுக்குட்டி : பெ. விளையாட்டின் பெயர்.

ஒங்கிட்டெ : வி. அடை. உன்னிடத்தில் 'ஒங்கிட்டெ குடுத்தே' (ஓங்கிட்டெ).

ஒச்சம் : பெ. குறை 'ஒச்சஞ் சொல்லாட்டி ஆகாதா'.

ஒசத்தி : வி.எ. உயர்த்தி 'மேலே ஒசத்தி வுடு'

ஒசந்தாடுது : வி. மு. உயரத்தில் ஆடுகிறது.

ஒசம்புக்காடு : பெ. ஒரம்புக் காட்டு நீரை உறிஞ்சும் தன்மையுடைய ஒரம்புக் காட்டுக்கு அருகிலுள்ள பூமி.

ஒசரம் : பெ. "ஒசரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகாது".

ஒட்ட : வி. அடை. அடியோட 'உறுங்குறும்பெ ஒட்ட நறுக்கனும்''.

ஒட்டகை : ஒட்டகம் : பெ.

ஒட்டச்சி : பெ. ஒட்ட சாதிப்பெண்.

ஒட்டடை : பெ. நூலாம்படை (அட்டறை, அட்டடை ஒட்டெ).

ஒட்டன் : பெ. ஒட்ட சாதியான் "ஒட்டனுக்குத் தெரியுமா லட்டுருண்டை".

ஒட்டாங்கரம் : பெ. விளையாட்டு வகை. கட்டத்திற்குள் கல் வீசி நொண்டிச் சென்று கல்லை மிதித்து வெளியே தள்ளி மீண்டும் மிதித்தல்.

ஒட்டாரம் : பெ. அடம் 'ஏண்டா ஒட்டாரம் புடிக்கறே' (தெலுங்கு).

ஒட்டியாணம் : பெ. பார். அட்டிகை.

ஒட்டுக்கலெ : வி. அடை. ஒன்றாக, மொத்தமாக 'ஒட்டுக்கலெ எத்தன துணின்னு எண்ணு'.

ஒட்டுண்ணிக்கொளவி : பெ. குளவிவகை (வகை : 1. ஒட்டுண்ணி - நீண்ட இறக்கையுடன் கூடிய சிறிய எறும்பின் வடிவம், 2. செவப்பொட்டுண்ணி - சிற்றெறும்புபோல்).

ஒட்டுப்பூச்சி : பெ. ஒருவகைப் பூச்சி.

ஒட்டுப்பொட்டு : பெ. ஒட்ட வைக்கும் பொட்டுவகை (பாஞ்சி பொட்டு, பான்ச்சுப் பொட்டு, பிளாஸ்டிக்குப் பொட்டு).

ஒட்டுப்போடுதல் : தொ பெ. சரிகட்டுதல். 'எப்படியோ ஒட்டுப்போட்டுத் தப்புச்சுகிட்டா(ன்)'.

ஒட்டுமொத்தம் : பெ. முழுமொத்தம்.

ஒட்டுலெ : ஒட்டவில்லை : வி.மு. "கீழே வுழுந்தாலும் மீசையிலெ மண் ஒட்டுலேங்கறான்"

ஒட்டுவாரொட்டி : பெ. 1. தொற்றுநோய், 2. வசை 'இவஞ்சரியான ஒட்டுவாரொட்டி'.

ஒடக்காய் : ஓணான் : பெ. "ஒடக்கா மேட்டுக்கிழுக்க தவக்கா தண்ணிக் கிழுந்தாப்பலே".

ஒடச்சகடலை : பெ. பொரியுடன் கலக்கும் கடலைத் தின்பண்டம்.

ஒடச்ச கழி : பெ. சோளம் அல்லது கம்பை இரண்டிரண்டாக உடைத்துப் புழுங்க வைத்தல்.

ஒடச்சு ஓடுபரப்பி போட்டுடுவே : ஒண்ணே உருப்படியா உடமாட்டே : பாத்திரங்களை ஒழுங்கீனமாகப் பயன் படுத்துபவர்களை வைதல்.

ஒடச்சு குடுக்கறது : உடைத்துக் கொடுத்தல் : தொ. பெ. புகையிலைக் குவியலை இடம் மாற்றும்போது புகையிலைக் கட்டுகளை ஒவ்வொன்றாக அடுக்குபவனிடம் கொடுத்தல்.

ஒடச்சு சொன்னா : வி.எ. வெளிப்படையாக மறைக்காமல் கூறினால்.

ஒடசல் : பெ. 1. கிண்டல் 'ஒடசல் புத்திக்காரெ, 2. பழுதுபட்டவை.

ஒடஞ்சு போச்சு : வி.மு. கெடுதல் (திரிதல்) 'பால் ஒடஞ்சு போச்சு'.

ஒடந்தெ : உடந்தை : பெ. துணை 'ரெண்டுபேரு ஒடந்தையா இருந்து செஞ்சிருக்கானுங்க'.

ஒடப்புல போடு : ஏ.வி. பயனின்மைக் குறிப்பு 'உன்ற பணம் யாருக்கு வேணு(ம்) கொண்டுபோய் ஒடப்புலெ போடு'.

ஒடபூமி : பெ. கல்லும் மண்ணும் கலந்த பூமி (ஒடமண்ணு).

ஒடம்பு : பெ. 1. ஆடையின் கரையொழிந்த பகுதி 'ஒடம்புக் கலரே நல்லால்லே', 2. உடல் (ஒடலு).

ஒடியாந்தது : ஓடி வந்தது : வி.மு.

ஒடுகு : பெ. தலையில் வெள்ளைத் துகள்களை உண்டாக்கும் நோய்வகை.

ஒடெச்சா : உடைத்தால் வி.எ. "மாமியார் ஒடெச்சா மண் கொடம் மருமக ஒடெச்சா பொன் கொடம்".

ஒடை : பெ. கால்நடையின் விரை.

ஒடைத்த வெள்ள உளுந்து : பெ. தாளிக்க உதவும் உளுந்து வகை.

ஒடையடிக்கறது : தொ.பெ. காளையை ஆண்மைத்தன்மை இழக்கச் செய்தல்.

ஒண்டாப் பரதேசி சக்கிலி நாயெ, தெல்லவாரி, தேசா போக : 1. பொறுப்பற்றுத் திரிபவனை வைதல், 2. வீடு சேராமல் ஊர் ஊராக அலைபவனை வைதல்.

ஒண்டி : பெ. 1. கதவின் பாகம், 2. கலப்பையிலுள்ள வளைவான ஓர் ஆணி 3. துணியில்லாதவன் -ள்.

ஒண்டிக்கட்டை : பெ. 1. பிரம்மச்சாரி, 2. பார். 3. ஒண்டி.

ஒண்டிக்காரன் : பெ. பார். 3. ஒண்டி "ஒண்டிக்கார(ன்) பட்டியிலே ஓநாய் பூந்தாப்பலே".

ஒண்டி சண்டியா : வி. அடை. தனியாக 'ஒண்டி சண்டியா போகாதே'.

ஒண்டித்தின்னி : பெ. பிறர்க்கு உதவும் மனமில்லாதவன்.

ஒண்டிமினி : பெ. பிறருடன் கலந்து பழகாதவன்.

ஒண்டுகோலு : பெ. பார். ஊணுகொம்பு.

ஒண்ணா : ஒன்றாக : வி. அடை. "மாவும் மாவும் ஒண்ணாப் போச்சு மாவிட்ட சட்டி வேறாப் போச்சு".

ஒண்ணு : ஒன்று : பெ.

ஒண்ணுக்கு : பெ. சிறுநீர் கழிக்க 'ஒண்ணுக்குப் போயிருக்கா, வருவா இருங்க.

ஒண்ணுக்கும் ஆகாத பய : ஒன்றிருக்கும் ஆகாதவன்.

ஒண்ணுக்குள் ஒண்ணு : உதவியாக : வி. அடை. 'ரெண்டு பேரு(ம்) ஒண்ணுக்குள் ஒண்ணா இருந்துக்குங்க' (ஒத்தாசையாக).

ஒண்ணு சேந்து போலா : வி.மு. ஒன்றாகச் சேர்ந்து போகலாம்.

ஒணத்தி : பெ. உணர்வு 'ஒணத்தி கெட்ட பய'.

ஒணத்தி : வி.எ. காய வைத்து 'துணி ஒணத்தியாச்சா'.

ஒணறு : ஏ.வி. உணர்ந்துகொள் 'என்ன சொன்னது ஏறுச்சா இனியாவது ஒணறுவியா'.

ஒத்த : ஏற்ற : பெ. அடை. 'செரசுக்கு ஒத்த பூவாவே'.

ஒத்த அடுப்பு : ஒருவகை அடுப்பு.

ஒத்த கதவு : பெ. கதவுவகை.

ஒத்த கால்லெ நிக்கான் : ஒற்றைக் காலில் நிற்கிறான் : வி.மு. பிடிவாதம் பிடிக்கிறான்.

ஒத்தச் சிப்லி : பெ. பெ. பார். ஒட்டாங்கரம்.

ஒத்தடம் : பெ. உடல்வலி நீங்கக் கொடுத்தல் (வகை : உப்பு ஒத்தடம், சுடுதண்ணி ஒத்தடம்).

ஒத்தப் பின்னல் அட்டி : பெ. கழுத்தணி.

ஒத்தப்பூட்டு : பெ. உழவுக்கு ஒரு மாடு வைத்திருத்தல் : இரவலாக ஒன்றைப் பெற்று உழவர்.

ஒத்த வண்டி : பெ. ஒருமாடு பூட்டிய வண்டி.

ஒத்த வேட்டி : பெ. நான்கு முழ வேட்டி.

ஒத்திப்போடு : ஏ.வி. தள்ளி வை.

ஒத்திருந்தா : வி.எ. சம்மதித்து இருந்தால் 'ஒத்திருந்தா முடிச்சிருக்கலாம்'.

ஒத்து ஊதுறா(ன்) : வி.மு. ஒருவன் பேசும்போது அவனுக்குச் சார்பாகப் பேசுதல் (ஒத்துப் பாடறான்).

ஒத்துக்காது : வி.மு. ஏற்றுக்கொள்ளாது 'பழைய சாரு ஒடம்புக்கு ஒத்துக்காது' (ஒத்துவராது).

ஒத்தை மொக வங்கி : பெ.1. கையணி, 2. பச்சையின் வடிவம்.

ஒத்தையடிபாதை : பெ. ஒருவழிக் காட்டுப்பாதை.

ஒத்தையா ரெட்டையா : பெ. விளையாட்டின் பெயர்.

ஒதகாலு : உதவும் கால் : பெ. ஏற்றம் இறைக்குங் கருவி (ஒதவு காலு).

ஒதச்சு : உதைத்து : வி.எ.

ஒதடு : உதடு : பெ.

ஒதவாக் கட்டெ : உதவாக்கட்டை : பெ. பயனற்றவன்.

ஒதவாம்படா : வி.மு. உதை வாங்குவாய்.

ஒதவி : பெ. 1. உதவி 'நனெஞ்ச ஆட்டுக்கு நரி ஒதனினாப்பலே' 2. மாடு அசைபோடும்போது வாய்க்கு வரும் பொருள்.

ஒதறிக் குடுக்கறது : உதறிக் கொடுத்தல் : தொ. பெ. புகையிலைக் குவியலை இடம் மாற்றும்போது கட்டுகளை உதறி அடுக்குபவனிடம் கொடுத்தல்.

ஒதியமரம் : பெ. மரவகை.

ஒதுக்குதல் : தொ. பெ. புறக்கணித்தல்.

ஒதுக்குப்படல் : பெ. ஓலையால் பின்னப்பட்ட அமைப்பு. (ஓலைப்படல், தடுக்கு, தட்டி).

ஒதுங்கு வை : ஏ.வி. ஓரமாக ஒழுங்காக வை 'சமானத்தெ ஒதுங்கு வை'.

ஒந்து : ஏ.வி. தள்ளு (ஒத்து).

ஒப்பந்தம் : பெ. உடன்படிக்கை செய்தல்.

ஒப்பமா : வி.அடை. ஒரே சீராக 'ஒப்பமா நூல் வரணு(ம்)'.

ஒப்பிட்டுவாயன் : பெ. ஆட்பெயர்.

ஒப்புக்கு : வி. அடை. மனமின்றி 'ஒப்புக்குஞ்செஞ்சு பழகாதே'.

ஒப்புஞ்சப்பா : பெ. யார் முதலில் கண்டுபிடிப்பது என அறிய, அனைவரும் கைகளைக் கோத்துப், பின் இரு கைளையும் ஒன்றாக இணைக்கும்போது அனைவரும் சொல்வது (ஒப்புக்கு சப்பையா).

ஒப்புட்டு : பெ. 1. போளி, 2. ராகிப்புட்டு (ஒப்புட்டு மாவு). ஒப் புட்டு மாஞ்சோறு : பெ. பெண் வீட்டில் புது மாப் பிள்ளைக்குப் போடும் முதல் விருந்து.

ஒப்புதமா : வி. அடை. சம்மதமா.

ஒப்புவார்த்தை : பெ. "ஒப்பு வார்த்தெ உசிருக்குக்கேடு; தீட்டிய கத்தி மசிருக்குக் கேடு'.

ஒப்பேத்து : ஏ.வி. சரிகட்டு 'எப்படியோ ஒப்பெத்து'.

ஒப்பேராது : வி.மு. 1. கை சேராது 'இவங்கிட்டெ போன பணம் ஒப்பேராது', 2. பிழைக்காது 'இது இனி ஒப்பேராது'.

ஒப்பேரி : ஒப்பாரி : பெ.

ஒபாயமா : உபாயமாக : வி. அடை. 'ஒபாயமா கேளுங்கோ'.

ஒம்பொது : ஒன்பது : பெ. அலி.

ஒம்பொது தடவெ கேட்டோ(ம்), தொளாயிரத்து தொண்ணூத் தெட்டு தடவெ சொன்னோ : பலமுறை கேட்டும் பதிலின்மை குறித்து.

ஒமட்டுது : குமட்டுகிறது : வி.மு.

ஒய்யாரமா : வி. அடை. 1. ஆடம்பரமாக, 2. உயரமாக 'ஒய்யாரமா இருக்கு', 3. உல்லாச நடை

ஒயில் : பெ. நடனம் (தெலுங்கு).

ஒரக்கட்டக்கா : பெ. ஒரு கொட்டைக்காய் (நிலக்கடலை).

ஒரச்சு : உரைத்து : வி.எ. 1. உறுதியாக 'ஒரச்சுப்பேசு', 2. தேய்த்து 'சாந்து ஒரச்சு பொட்டுமிட்டு'.

ஒரச்சுதா : உரைத்ததா : வி.மு. 1. 'சொன்னது கொஞ்சமாவது ஒரச்சுதா'.

ஒரஞ்சுட்டிருச்சு : உரைந்துவிட்டது : வி.மு. உரம் அதிகமாகிப் பயிர் அழிந்தால் குறிப்பது 'எல்லா ஒரஞ்சுட்டிருச்சு இனிமே(ல்) ஒண்ணு பண்ணமுடியாது'.

ஒரட்டாங்கை : பெ. இடக்கை (ஒரட்டுக்கை, சொன்னிக்கை, சொன்னாங்கை, பீச்சாங்கை, பீச்சிக்கை).

ஒரணா : பெ. ஆறுபைசா.

ஒரப்பா : வி.அடை. செழுமையாக 'பயிர் ஒரப்பா வந்திருக்கு'.

ஒரப்போடறது : உரைபோடுதல் : தொ. பெ. மாட்டின் கால்கள் ஒன்றுடன் ஒன்று உரையாமல் இருக்க, கால்களுக்குப் போடும் உறை.

ஒரம்புக்காடு : பெ. நீர் அதிகமுள்ள விவசாயத்திற்காகாத பூமி.

ஒரம்புத்தண்ணி : பெ. வாய்க்கால் அல்லது வயல் அருகே தேங்கி இருக்கும் நீர்.

ஒரம் வச்சு உருவிக் கட்டறது : தொ. பெ. பயிர் பாதி விளைவை (அரைப் பட்டம் மாறுதல்) அடைந்ததைக் காட்டுகிறது.

ஒரலு : உரல் : பெ. "அவலெ நெனச்சுகிட்டு ஒரலெ இடிச் சானாம்" (ஒரலைக்கல்லு, ஒல்லு).

ஒரவாளி : பெ. கரும்பு தயாரிக்கப் பயன்படும் கரண்டி, பெரிய தோசைத் திருப்பி போல் உள்ள கரண்டி.

ஒரு எட்டு வந்துட்டுப் போ : ஏ.வி. வீட்டுக்கு வா என அழைத்தல்.

ஒருக்கா : ஒரு தடவை : வி.அடை. 'ஒருக்கா ஊருக்கு வந் துட்டுப் போ'.

ஒரு குட்டை பாயுது : வி.மு. அதிகபட்சம் கால் ஏக்கர் தண்ணி பாய்கிறது.

ஒரு குத்து : பெ. ஒரு கைப்பிடி அளவு 'ஒரு குத்து அள்ளிட்டு வா'.

ஒரு கையி : பெ. எதிர்கட்சிக்குப் பகைமையாய் ஒற்றுமை யோடிருத்தல் 'ரெண்டு பேரும் ஒரு கையி'.

ஒரு கை பாக்கறே : வி.மு. சவால்விடுதல்.

ஒரு கை பார்த்தல் : தொ. பெ. வெல்ல முயலுதல்.

ஒரு கொடம் தண்ணி ஊத்தி ஒரு பூ பூத்துசாம் : விளை யாட்டுவகை.

ஒருசந்தி : விரதம் "நாயறியுமா ஒரு சந்திப் பானெ?"

ஒரு சலகைக் காடு : பெ. ஐந்து ஏக்கர் நிலம்.

ஒரு சா(ய்)ப்பு ஊடு : பெ.வீடுகளில் ஒருவகை.

ஒரு செட்டு : பெ. ஒத்த வயதினர் (செட் - ஆங்கிலம்).

ஒரு செமை : ஒரு சுமை : பெ. ஐம்பது தொட்டி வெல்லம் அடங்கிய கட்டு.

ஒரு சோடு : பெ. ஒத்த வயது.

ஒருத்தரும் : ஒருவரும் : பெ.

ஒரு தம் குடுடா : ஏ.வி. ஒருமுறை புகைக்க அடுத்தவன் பீடி யைக் கேட்டல்.

ஒரு நாம்பு : பெ. உள்ளங்கையில் வைத்து மூடும் உள் அளவு.

ஒரு நாமிச்சோறு : பெ. ஒரு பிடி சோறு (ஒரு நெமைச்சோறு).

ஒரு நிமுசத்திலெ வசூல் பண்ணிடுவெ, எங்காசெ வச்சுட்டுப் போ : மிரட்டுதல் குறிப்பு.

ஒரு பக்கமே சாயாதே : வி.மு. ஒருவர் பக்கமே பரிந்து பேசாதே.

ஒருபடிக்காடு : பெ. ஒரு ஏக்கர் நிலம்.

ஒரு பணம் : பெ. இருபத்தைந்து காசு.

ஒருபவுனு : பெ. ஒரு ராத்தல்.

ஒரு பாரம் : பெ. அளவு (245 முதல் 260 கிலோ).

ஒரு பிட்டு : பெ. அளவு முன்பு ஐந்து ஏக்கரை அல்லது நாலரை முதல் ஆறு ஏக்கரைக் குறித்தது. இப்பொழுது இரண் டரை முதல் மூன்று ஏக்கரைத் குறிக்கிறது.

ஒருபுத்தி : பெ. ஒரே கவனம் 'ஒரு புத்திக்காரன்'.

ஒரு பேச்சிக்கு : வி. அடை. 'ஒரு பேச்சிக்குச் சொன்ன கோபப் படாதே'.

ஒரு மார் : பெ. இருகையை நீட்டிய அளவு.

ஒரு மார்பொழுது : பெ. சூரியன் மறையும் நேரம்.

ஒரு மூட்டை : பெ. முப்பது வள்ளம் அல்லது நூற்றிருவதுபடி கொண்ட அளவு (ஒரு சலகை).

ஒரு மொடா : ஒரு மிடா : பெ பதினாறு வள்ளம் அல்லது அறுபத்து நாலு படி கொண்ட அளவு.

ஒரு மொடா வயிலு : பெ. ஒரு மிடா விதைவிதைத்து அப் பயிரை எடுத்து நடவு செய்யும் பூமியின் அளவு.

ஒரு மொழம் : பெ. கைவிரல் நுனியிலிருந்து முழங்கை வரை உள்ள நீளம்.

ஒரு வள்ளக்காடு : பெ. நான்கு ஏக்கர் பூமி. (ஒரு வள்ளபூமி).

ஒருவா : பெ.1. ஒரு ரூபாய், 2. ஒருவாய் 'ஒருவா சோறுண்டுட்டு போ'.

ஒரு வாக்கிலெ : வி. அடை. ஒரு பக்கம் 'ஒரு வாக்கிலெ போனா சீக்கிரமா வரமாட்டியா?

ஒரு வாரு வாரியிருச்சு : வி.மு. நன்றாக விளைத்தமையைக் குறித்தல்.

ஒருவி : ஒருத்தி : பெ.

ஒரு வெட்டுக்காய் : பெ. நிலக்கடலையின்வகை.

ஒரே குட்டையில் ஊறுன மட்டெ : ஒன்றாக வளர்ந்தவர்கள் அல்லது ஒரு மாதிரி இயல்பு படைத்தவர்கள்.

ஒரே போடா போடறான் : அழுத்தமாக ஒன்றை மறுப்பவ னைக் குறித்தல்.

ஒரே முட்டாப் பேசறியே : மிகுதியாகத் திட்டுபவனுக்கு மறு மொழிவிடுத்தல் 'அப்போப்புடுச்சு பாக்க்றே சும்மாத்தா ஒரே முட்டாப் பேசறியே'.

ஒரே வீச்சில்ல வெட்டிப்பிடுவே(ன்) : வசை.

ஒரே வெட்டா வெட்டித் தள்ளிடுவே : மிரட்டல்.

ஒல்லக்கண்ணெ : ஒல்லைக்கண்ணன் : பெ. 1. மாறுகண் உடையவன் (ஒன்றரைக் கண்ணெ).

ஒல்லி : பெ. மெலிந்தவன்.

ஒலக்கப்பூணு : பெ. அட்டடை.

ஒலக்கை : பெ. உலக்கை "ஒரலுக்குள்ளெ தலையெவச்சப்பறம் ஒலக்கெ வருதுன்னு பயந்தா முடியுமா?" (ரக்கை, லக்கை).

ஒலக்கைச்சீரு : பெ. பள்ளர் திருமணச் சடங்கு 'ஊர்ப்பண்ணாடி பெண்ணின் கையைப் பிடித்து உலக்கையால் உரலில் மூன்றுதரம் குற்ற வைத்தல்.

ஒலமாந்தம் வந்தவளே : வசை.

ஒலவச்சிட்டான் : உலை வைத்துவிட்டான் : வி.மு. பிறர் காரியத்தைக் கெடுத்தல்.

ஒலவம்பஞ்சு : இலவம்பஞ்சு : பெ. "ஆடிக்காத்திலெ அம்மியே பறக்கறப்போ ஒலவம்பஞ்சு எம்மாத்திரம்".

ஒலவாய் : உலைவாய் : பெ. "ஒலவாயெ மூடினாலும் ஊர் வாயெ மூட முடியாது".

ஒலாத்தது : வி.மு. மனம் துடித்தல் 'ஏனோ மனசு ஒலாத்துது'.

ஒலாவி வை : வெளாவி வை : ஏ.வி. அளாவுதல் 'தண்ணியே வெளாவி வையி'.

ஒலெ : உலை : பெ. 'சமைத்ததற்காகக் கொதிக்க வைக்கும் நீர் "ஒலத்தண்ணி கவிந்து வீடா வெந்து போகும்".

ஒலெ கொதிக்கு : வி.மு. உலைநீர் கொதிப்படைதல்.

ஒலெ வக்கறது : உலை வைத்தல் : தொ. பெ. உலைப் பானையை அடுப்பில் வைத்தல்.

ஒலைக்கால் தடி : பெ. மாடு ஓட்டும் வார் இல்லாத குச்சி.

ஒலைக்கால்மீனு : பெ. விடிவெள்ளி (ரட்டிமீனு, விடிமீன், வெள்ளி, வெள்ளிமீனு).

ஒலைக்கும் : குலைக்கும் : வி.மு. செட்டியூட்டு நாய் கணக் காத்தா ஒலைக்கு(ம்)".

ஒவஞ்சு : வி.எ. உராய்ந்து 'சீலெ நெலத்திலெ ஒவஞ்சுட்டே இருக்குது' (ஒரஞ்சு).

ஒவஞ்சொவஞ்சு : வி.எ. அசைத்தசைந்து 'வண்டி ஒவஞ் சொவஞ்சு போகுது'.

ஒவுளி அடுப்பு : பெ. பெரிய அடுப்புவகை.

ஒவையுது : வி.மு. முன்னும் பின்னும் ஆடுதல் 'மாடு கட்டுத் தாரையில் ஒவையுது'.

ஒழிச்சுக்கோ புளுச்சுக்கோ : பெ. மண்ணில் பொருளை ஒழித்து விளையாடுதல் (உப்பு வச்சு வெளையாடறது, உப்பு வெளையாட்டு).

ஒழிந்தவை : பெ. முதலியன.

ஒழுக்கமான : பெ. அடை. 'ஒழுக்கமான பையன்'.

ஒழுங்ஒழுங்கா : வி.அடை. வரிசை வரிசையாய் 'ஒழுங்ஒழுங்கா நட்டுட்டு வா'.

ஒளக்கு : உளக்கு : பெ. "எளக்கி குடிச்சா ஒளக்குப் பணம் சம்பாதிக்கலாம்".

ஒளப்பு : பெ. உழைப்பு "மலெயத்தனெ ஒளப்பிருந்தாலும் கடுத்தக்கனெ அதிர்ஷ்டம் தேவை".

ஒளப்பு : குழப்பு : ஏ.வி. 'ஒளப்பறா(ன்)'.

ஒளமீனு : பெ. ஆற்றுமீன்.

ஒளவு : உழவு : பெ. உழுகை.

ஒளவு எழுப்பியாச்சா : வி.மு. முதல் உழவு உழுதாகிவிட்டதா.

ஒளவு கவுறு : பெ. உழும்போது நுகத்தடியையும் கலப்பை யையும் சேர்த்துக் கட்டும் கயிறு.

ஒளவு சால் : பெ. படைச்சால்.

ஒளவு போடறது : தொ. பெ. உழவு ஓட்டுதல். 'நாளைக்கு ஒளவு போடோனும்'.

ஒளவு மழை : பெ. உழுதற்கு வேண்டிய அளவு பெய்யும் மழை.

ஔறுவாயன் : பெ.1. செய்தியைப் பரப்புபவன், 2. பிதற்றுவோன் (ஓட்டவாயன்).

ஒளிச்சிட்டது : ஒளித்தது : வி.மு. "மோருக்குப் போறவன் சொப்பெ ஒளிச்சிட்டது போல".

ஒளிவா : ஓய்வாக : வி.அடை. 'ஒளி இருக்கறப்போ வா'.

ஒறம்பராயர் : பெ. விருந்தினர் (ஒறம்பரை) "பல ஊட்டு ஒறம்பரெ பட்டினி".

ஒறவாடி : உறவாடி : வி.எ.

ஒறவு : உறவு : பெ. "பத்தூட்டுக்காரர் பகையானாலும் பக்கத் தூட்டுக்காரர் உறவாயிருக்கனும்".

ஒறை : பெ. உறைமோர் (பிரைமோர்).

ஒன்னை : உன்னை : பெ.

ஒன்னையக் கட்டி மாரடிக்கறதுக்குச் சும்மா இருக்கலாம் : வசை.

ஒன்னையுங்கானொ ரண்டையுங் கானொ : ஒருவரும் இல்லை எனும் குறிப்பு.

ஒன்றதா : உன்னுடையதா : வி.மு.

ஒன்றுவுட்ட மச்சுனே : ஒன்றுவிட்ட மைத்துனன் : பெ.

ஒனக்கு : உனக்கு : பெ. (நினக்கு).

## ஓ

ஓகல் : பெ. அடுப்பின் பக்கங்களிலுள்ள சிறிய உருண்டை வடிவ அடுப்பு (ஓவு).

ஓங்கரிக்குது : ஓங்கரித்தல் : வி.மு. வாந்தி குணம் (ஓமட்டுது).

ஓங்காரம் : பெ. சத்தம்.

ஓங்கிக் கொடுக்கறது : தொ. பெ. 1. நெல் ஓங்கிக் கொடுத்தல் - நெற் கூடையைப் பெண்ணிற்கும் சூரியனுக்கும் சுற்றும் பண்டாரச் சாதியின் திருமணச் சடங்கு, 2. போளமுடி ஓங்கிக் கொடுத்தல் - திருமணச் சடங்கு எ-டு. வேளாளர், பண்டாரம், 3. தாய்மனை ஓங்கிக் கொடுத்தல் - பூப்புச் சடங்கு.

ஓசனை : யோசனை : பெ. (ஓசினி).

ஓசி : பெ. "ஓசியிலெ கெடைக்குதுன்னு ஒடெக்காயடிச்சு தின்னானாம்".

ஓசித்திண்ணி : பெ. பிறர் பொருளைப் பொருள் கொடுக்காமல் வாங்கி அனுபவிப்பவன்.

ஓசு : பெ. குழாய்.

ஓஞ்சா(ன்) : பெ. ஒல்லியானவன் நோஞ்சா(ன்).

ஓஞ்சுபோச்சு : ஓய்ந்துவிட்டது : வி.மு. முடிந்துவிட்டது 'கெழங்கு சீசன் ஓஞ்சு போச்சு'.

ஓட்ட அதிரசம் : பெ. நடுவில் துளையுள்ள அதிரசம்.

ஓட்டக்காதெ : ஓட்டைக்காதன் : பெ. செய்திகளை மனத்தில் ஒற்றிக் கொள்ளாதவன் (பொத்தக்காதெ).

ஓட்டம் : பெ. 1. மனஞ்செல்லுகை, 2. வருவாய் 'பண ஓட்டமே இல்லெ', 3. வேகம் 'வாழ்க்கையிலெ ஓட்டமே இல்லே'.

ஓட்டம்புடுச்சா(ன்) : வி.மு. ஓடினான்.

ஓட்டலு : பெ. உணவகம்.

ஓட்டாண்டி : ஓட்டையாண்டி : பெ. பிச்சைக்காரன்.

ஓட்டு ஆச்சு : வி.மு. உழவு ஆயிற்று 'ரெண்டு ஓட்டு ஆச்சு'.

ஓட்டுத்திண்ணை : பெ. ஓட்டு வீட்டிலுள்ள திண்ணை "ஒக்காந்திருக்கறது ஓட்டுத் திண்ணெ கெனா காணறது மச்சு மேலே".

ஓட்டுப்பட்டி : பெ. வீடுகளில் ஓடுகளை நழுவாமல் பிடிக்கும் தப்பை.

ஓட்டெ ஓடசல் : பெ. சிதைந்த பண்டங்கள்.

ஓட்டெக்கை : பெ. 1. பெருஞ்செலவாளி, 2. பொருள் தங்காதவன்.

ஓட்டை : பெ. 1. துவாரம், 2. சரியற்றது ஓட்ட லைட்டு'.

ஓடக்கரை மண்ணு : பெ. குளத்துக் களிமண்.

ஓடம் : பெ. 1. தோணி 2. நெசவு நாடா.

ஓடமண்ணு : பெ. மண்வகை.

ஓடயிலெ : ஓடும்பொழுது : வி.எ.

ஓடிப்போய் தொடறது : தொ.பெ. பிடிக்கும் விளையாட்டு.

ஓடியாடிப் பாத்தல் : ஓடியாடிப் பார்த்தல் : தொ.பெ. பெரு முயற்சி எடுத்தல் 'ஓடியாடிப் பார்த்தே ஒண்ணு முடியலே'.

ஓடியாந்தவொ : ஓடி வந்தவள் : வி.அ.பெ. திருமணமின்றி ஒருவனுடன் வாழ்க்கை நடத்துபவள்.

ஓடு எடுக்கறது : தொ. பெ. பிச்சை எடுத்தல்.

ஓடுகாலி : பெ. 1. பெண்களைத் திட்டும் சொல் 'ஒரு நிமிசங் கூட வீட்லெ இருக்கமாட்டா சரியான ஓடுகாலி', 2. விபச்சாரி.

ஓடு தண்ணி : பெ. 1. ஓடும் தண்ணி, 2. கெட்ட தண்ணீர்.

ஓடுதாங்கி : பெ. ஓடு கீழே சரியாமல் தாங்கும் தப்பை.

ஓடுபயிர் : பெ. கம்பின் இளங்கதிரில் மணிகள் பிடிக்காமல் சிறுசிறு பயிர் முளைத்தல்.

ஓடு போட்டாச்சு : வி.மு. வீடு வேய்தாகிவிட்டது.

ஓடும்புள்ளை : பெ. பள்ளருக்குப் பணி செய்வோன்; பள்ளர் திருமணத்திற்கு ஊர் மக்களை அழைப்பவன்.

ஓடுவிப்புருதி : பெ. புரையோடும் புண்வகை.

ஓடை : பெ. 1. சிற்றாறு, 2. பல பாத்திகள் சேர்ந்த பகுதி (2. செரகு).

ஓடையடிச்சிருச்சு : வி.மு. பார், ஈத்து எடுத்திடுது.

ஓணான் : பெ. "உள்ளூர்லே ஓணாம் புடிக்காதவன் ஒடெயாம் பாளையம் போய் உடும்பு புடிக்கறானாம்".

ஓதாளன் கூட்டம் : பெ. ஓர் இனம்.

ஓதுதல் : தொ.பெ. இரகசியத்தைப் போதித்தல் 'புருசங்கிட்டெ தெனமு(ம்) ஓதறா(ள்)' (போதனை).

ஓந்தி : பெ. சம்பா விளையாடும்போது நான்கு புளியமுத்தில் மூன்று கறுப்பாகவும் ஒன்று வெள்ளையாகவும் விழுதல்.

ஓப்பிடியா : பெ. கணவனுடைய சகோதரன் மனைவி (ஓரகத்தி).

ஓம்சத்தி ஓம்சத்தி : இடை : ஆதிபராசக்தி கோவில் வார வழிபாட்டு மன்றத்தினர் எழுப்பும் குரலொலி.

ஓமகுண்டம் : பெ. வேள்விக்குழி (ஓமத்தீ).

ஓமங்கொட்டையாடுதல் : தொ. பெ. ஊன்றப்பட்ட பனங் கொட்டையின் மேல் கல்லெறியும் விளையாட்டு.

ஓமந்திரம் : பெ. ஓம உப்பு கரைந்த நீர். வயிற்றுவலி, அஜீரணம் ஆகியவற்றிக்குப் பயன்படுவது (ஓமத்தண்ணி).

ஓமப்பொடி : பெ. பலகாரவகை.

ஓமம் : பெ. மருந்துப்பொருள்.

ஓமம் சொல்றது : தொ.பெ. மந்திரம் ஓதுதல்.

ஓமல் : பெ. கண்ணேறு.

ஓய் : இடை. ஒரு விளியுருபு ‘கூப்புட்டனெ ‘ஓய்’ யினு குரல் குடுக்கறதுக்கு என்ன?

ஓய்ஞ்சி போனான் : வி.மு. வசதியில் தாழ்ந்து போனான்.

ஓய்வு ஒழிச்சலில்லே : வி.மு. ஓய்வின்மைக் குறிப்பு.

ஓர்சு : பெ. 1. ஒழுங்கு ‘சாமானத்தே ஓர்சா அடுக்கு’, 2. முடித்தல் ‘அவங்கணக்கே இன்னைக்கு ஓர்சு பண்ணிரு’.

ஓர்சு கட்டறது : தொ. பெ. புகையிலையின் இலைகளை ஐந்து அல்லது ஆறு என வைத்துக் கட்டுதல்.

ஓரக்கால் : -பெ. 1. ஆற்றின் ஓரப்பகுதி, 2. பொழியின் இரு பக்கங்கள்.

ஓரக்கால் வெட்டறது : தொ. பெ. பொழியிலுள்ள புற்களைச் செதுக்கிச் சுத்தம் செய்தல்.

ஓரங்கட்டி : ஒதுங்கி : வி.எ.‘ஓரங்கட்டி நில்லு’.

ஓரம் கட்டறது : தொ.பெ. மனைவியை வேண்டாம் என ஒதுக் குதல் (தள்ளி வைத்தல்).

ஓர வஞ்சனை நாயம் : பெ. ஒரு தலையாக வஞ்சித்துக் கூறுதல்.

ஓரி : பெ. நீரில் ஓடிப்பிடித்து விளையாடும் விளையாட்டு.

ஓரி : இடை. விளையாட்டில் கண்டுபிடிக்க வா எனும் ஒலிக் குறிப்பு.

ஓரி முண்டை : பெ. வசை. ஒருவருடனும் பிறக்காதவள்.

ஓரியா இருக்கிறான் : பார். ஒண்டிமினி.

ஓரியாடி : வி.எ. 1. சண்டையிட்டு "ஓரியாடற ஊடு தூரியாடிப் போகும்", 2. வாதாடி 'ஓரியாடி வாங்குனே'.

ஓலக்கொட்டாவி : ஓலைக்கொட்டகை : பெ. ஓலையால் வேயப்பட்ட திரையரங்கம் (டூரிங், டெண்ட்).

ஓலச்சாலை : ஓலைச்சாலை : பெ. ஓர் ஆண்டு நிலைக்கக்கூடிய பனை ஓலையால் வேயப்பட்ட கூரை.

ஓலப்புள்ளைச் சீரு : பெ. காதுகுத்துச் சடங்கு இரண்டிற்கு மேற்பட்ட குழந்தைகட்கு நடத்தப்படும். பெற்றோருக்கு ஒரே ஆண் குழந்தை எனில் ஓலையால் செய்யப்பட்ட சேலை சுற்றிய பொம்மை பெண்ணாகப் பாவிக்கப்பட்டு அதற்குச் சடங்குகள் நடத்தப்படும். எ-டு. உடையார்.

ஓலப்பொட்டி : பெ. பனை ஓலையில் பின்னிய பெரிய பெட்டி.

ஓலம் : பெ. சத்தம் 'சித்த நேர(ம்) ஓலம் போடாமெ இருங்க'.

ஓலவட்டல் : பெ. வெண்கலத்தட்டு.

ஓலவட்டை : பெ. மூங்கில் பிரிமனை.

ஓலெ எழுதறது : தொ. பெ. இன்னார் இறந்துவிட்டார் என உறவினருக்குத் தெரியப்படுத்துதல், 'எனக்கென்ன ஓலையா எழுதி இருந்தீங்க'.

ஓலை : பெ : 1. காதில் அணியும் பனை ஓ்லைச்சுருள், 2. தங்கக் கம்மல்.

ஓவுஅடுப்பு : பெ. கரும்பு ஆலையில் அடுப்பிலிருந்து வரும் புகை, குழாய் வழியாகச் சென்று இதன்மூலம் வெளி யேறும்.

## க

கக்கம் : பெ. அக்குள் "சொர்க்கத்துக்குப் போகும்போது கக்கத்துலெ கழுதெக் குட்டி".

கக்காளன் : கைக்கோளன் : பெ. ஓர் இனம் "சேடன் தயிரெக் குடிச்சிட்டு கக்கான் வாயிலெ இழுத்தானாம்".

கக்கு : ஏ.வி. சொல்லு "அவ வாயிலெயெ கக்க வைக்கறே".

கக்குதல் : தொ.பெ. வாந்தி எடுத்தல் 'ஏனோ கக்கிட்டு கெடக் கிறா(ன்)'.

கக்குவாய் : பெ. ஒருவகை இருமல் (கக்குவான்).

கங்கணநேரம் : பெ. திருமணம் நடக்கும் நேரம் 'கங்கண நேரம் வந்தா யாரையும் கேக்காது'

கங்கணம் : பெ.1. அதே முனைப்பாய் முனைந்து காரியம் செய்தல் 'அவனெத்தீத்துக் கட்டறதா கங்கணம் கட்டிட்டா', 2. சடங்கிற்குப் பயன்படும் காப்புநாண் -வெற்றிலையும் மஞ்சளும் சேர்த்துக் கட்டப்பட்டது.

கங்கணம் அவுக்கறது : கங்கணம் அவிழ்த்தல் : தொ.பெ. அங்காளம்மன் சிவராத்திரி விழாச் சடங்கு. பூசாரிகள் கையிலுள்ள கங்கணத்தை அவிழ்த்து கிணற்றில் போடுதல்.

கங்கணம் கட்டறது : கங்கணம் கட்டுதல் : தொ.பெ. விழாச் சடங்கு. ஏழு பூசாரிகளின் கையில் கங்கணம் கட்டப் பட்டு, சிவராத்திரி விழா தொடங்கும்.

கங்கணப் பச்சை : பெ. மணிக்கட்டில் குத்தப்படும் பச்சையின் வடிவம்.

கங்கண ரேகை : பெ. கையை மடக்கும்போது முழங்கை அருகில் விழும் மடிப்பு.

கங்கல் : பெ. பார். உசுப்புத்தண்ணி.

கங்கு : பெ.1. கரை - கரைகட்டுதல்; கரையில் உடைசல் ஏற்பட்ட இடத்தில் மண்ணைப் பூசுதல், 2. தீப்பொறி, 3. மூலை.

கங்கு அடிச்சுட்டாச்சு : வி.மு. உழவுச்சொல்.

கங்கு கரையில்லாமல் : வி. அடை. அளவற்று.

கங்குல்லி : பெ. மரவகை.

கங்கைநீர் : ஆற்றுநீர்.

கங்கைமேழி : பெ. ஒரே கோலால் ஆன மேழியிலேயே உள்ள கைப்பிடி.

கங்கையிலே போடறது : தொ.பெ. மாரியம்மன் விழாச் சடங்கு; கம்பம் வெட்டி, குளத்தில் போட்டு வைத்தல்.

கச்சடா : பெ.1. இழிவு, 2. மோசமானவன்.

கச்சாயச் சட்டி : பெ. வாணலி.

கச்சாயம் : பெ. 1. அதிரசம், 2. கோதுமையை ஆட்டி கருப்பட்டி சேர்த்துப் சுடுதல் "நெனெச்சாப் பணியாரம் நியமிச்சா கச்சாயம்". (மராத்தி).

கச்சாலை : பெ. தறி நெய்யும்போது துண்டுஆகும் நூல்கள்.

கச்சி : பெ. 1. கட்சி, 2. நாடாப்பட்டை.

கச்சிக்கட்டில் : பெ. துணிநாடாவால் பின்னப்பட்ட கட்டில்.

கச்சி கட்டறது : கட்சி கட்டுதல் : தொ.பெ. ஒன்றன் பொருட்டு முரணி நிற்றல் (கச்சைகட்டறது).

கச்சிதம் : பெ. பொருத்தம் 'துணி கச்சிதமா இருக்கு'.

கச்சிப்போச்சு : வி.மு. களிம்பு ஏறுதல்.

கச்சி பிரிக்கறது : தொ.பெ. குழு விளையாட்டில் இரண்டு கட்சியாகப் பிரித்தல்.

கச்சுப்பட்டை : பெ. நாடாப்பட்டை.

கச்சேரி : பெ. 1. காவல் நிலையம், நீதிமன்றம் ஆகியன. 2. பாட்டு, ஆட்டம் இவற்றிற்காகக் கூடுமிடம் 'சீட்டுக்கச்சேரி, பாட்டுக்கச்சேரி (இந்துஸ்தானி).

கச்சை கட்டுதல் : தொ. பெ. 1. பார். கச்சிகட்டறது, 2. வேட்டி கட்டுவதில் ஒருவகை; வேட்டியை இறுகக் கட்டுதல்.

கசக்கித்தின்னு : ஏ.வி பிசைந்து சாப்பிடு.

கசக்கு : ஏ.வி. 1. கசங்கச் செய்தல் 'பூவே கசக்காதே', 2. துவைத்தல் 'துணி கசக்கிப்போடு'.

கசகசனு இருக்கு : வி.மு. வியர்த்தல் (கசகசங்குது).

கசடர் : பெ. மோசமானவர் "கசடருக்கு யோகம் வந்தால் கண்ணுந் தெரியாது காதும் கேக்காது".

கசப்பு : பெ.1. உயிரினங்களுக்கு ஈரலின் மேலுள்ள பகுதி. மனிதனுக்கு இது உடையின் இறந்துவிடுவான். கோழியை அறுக்கும்போது இது உடையின் கறி முழுதும் கசப்பு ஆகிவிடும், 2. கைப்பு, 3. வெறுப்பு.

கசபுசல் : பெ. இரகசியம் ஒன்றைப் பற்றிய ஊர்ப்பேச்சு 'திடீர்னு கலியாண ஊட்டுலெ கசபுசல் ஆயிடுச்சு'.

கசறு : பெ. அளவுக்குமேல் இனாமாகப் பெறுவது 'கசறு ஊத்தமாட்டே கேக்காதிங்கோ (கொசுறு).

கசாப்பு : பெ. 1. ஆடுமாடு அடிக்கை (அரபு).

கசாப்புக்கடை : பெ. மாமிசம் விற்கும் இடம் (கறிக்கடெ).

கசாப்புக்காரன் : பெ. மாமிசம் விற்போன்.

கசாமுசான்னு : வி.அடை. ஒழுங்கற்று.

கசாயம் : பெ. மருந்துப் பொருளைப் போட்டுக் காய்ச்சி வடித்த நீர் (வகை : சுக்குக்கசாயம் , மௌகுக் கசாயம்).

கசிவு : பெ. ஊறுகை.

கஞ்சனக்கட்டை : பெ. இசைக்கருவி. சுற்றிலும் மணியுள்ள மரக்கட்டை (இந்துஸ்தானி, கஞ்சிரா).

கஞ்சா : பெ. போதைப்பொருள் (இந்துஸ்தானி. கஞ்சாச்செடி).

கஞ்சி : பெ.1. காய்ச்சி நீராய்க் கரைத்த உணவு 'ராகிக் கஞ்சி கோதுமக் கஞ்சி', 2. சோற்றின் வடி தண்ணீர், 3. சோறு.

கஞ்சிக்கலையம் : பெ. சாப்பாடு எடுத்துச் செல்லும் மண்சட்டி.

கஞ்சிக் கொளாப்புட்டு : பெ. பலகாரம்.

கஞ்சி குடுச்சியா : வி.மு. சோறு சாப்பிட்டாகிவிட்டதா?

கஞ்சி போடறது : தொ.பெ. துணிக்குக் கஞ்சிப் பசையூட்டுதல்.

கஞ்சூர் : பெ. வெல்லம், வெண்ணெய் கலந்த மைதாவை டைமன் வடிவில் சுடுதல்.

கட்டக்கயிறு : பெ. கயிற்றுக்கட்டிலில் பின்னப்பட்டுள்ள கயிறு.

கட்டக்காப்பி : பெ. பால் இல்லாத காப்பி (கட்டக்கசாயம்).

கட்டக்குத்துக்கால் : பெ. கட்டிலிலுள்ள நான்கு கால்கள்.

கட்டக்கொம்பு : பெ. உயரம் குறைந்து கட்டையாய் உள்ள மாட்டின் கொம்பு. இது நல்ல கொம்புவகை அல்ல.

கட்டசட்டம் : பெ.கட்டிலில் நீளவாக்கில் வரும் இரு சட்டம்.

கட்டத்தார் : பெ. காய் சிறுத்த அல்லது சீப்புக்கள் குறைவாக உள்ள வாழைக்குலை.

கட்டப்பயிர் : பெ. கதிர் அறுத்தபின் கட்டை மீண்டும் தழைத்தல். இப்பயிர் தீவனத்திற்கு ஆகும், 2. பருத்திச் செடி காய்ந்தபின் வெட்டிய கட்டை மீண்டும் தழைத்தல்.

கட்டப்பருத்தி : பெ. கட்டைப்பயிரில் கிடைக்கும் பருத்தி.

கட்டபீடித்துண்டு : பெ. துண்டுபீடி :

கட்டம் : பெ.1 சிரமம், 2 . விளையாட்டில் வரையப்படும் கோடுகள்.

கட்டமாட்டா : வி.மு. திருமணம் செய்துகொள்ள மாட்டான் 'அவளெ கட்ட மாட்டா(ன்)'.

கட்டமாறு : பெ. தேய்ந்துபோன துடைப்பம்.

கட்டமுட்டி : பெ. பெரிய விறகுக்கட்டை.

கட்டமுட்டி அடுக்கறது : தொ. பெ. சவத்தை மேலே வைக்க விறகுகளை அடுக்குதல்.

கட்டல் ஏத்து சீரு : பெ. திருமணச் சடங்கு. எ-டு. உடையார், வேளாளர்.

கட்டல் கச்சை : பெ. பார். 2. கச்சி (கட்டல் நாடா ) (வகை : கலர் நாடா? நூல் நாடா, லைலான் நாடா).

கட்ட லுங்கி : பெ. கட்டங்களுள்ள லுங்கி.

கட்ட வண்டி : பெ. மேற்கூடு இல்லாத மாட்டுவண்டி.

கட்டளைதாரர்கள் : பெ. அமாவாசையன்று இரவு மாரியம்மன் கோவிலில் இம்மாதப் பூசையை நான் செய்கிறேன் என ஏற்றுக்கொள்பவர்கள்.

கட்டளைப் பூசை : பெ. கட்டளைதாரர்களால் நடத்தப்படும் பூசை.

கட்டறா : பெ. நீளமான பாத்திரவகை (சோடுதவளெ, பால் கறக்கற போசி).

கட்டறா(ள்) : கட்டுகின்றாள் : வி.மு. 1. 'சீலை கட்றா இப்ப வந்துடுவா'.

கட்டாது : வி.மு. கட்டுப்படியாகாது.

கட்டாந்தரை : பெ. கெட்டியான தரை.

கட்டாந்தரையாட்ட இருக்கான் : வலிமையானவன்.

கட்டாப்பு : பெ. முறை 'இந்தக் கட்டாப்பு பணத்தெ குடுதர்ரெ'.

கட்டாரம் : பெ. நுனியிற் கூருடைய கத்தி (பிச்சுவா, வளாவு).

கட்டி அழகறது : கட்டி அழுதல் : தொ. பெ. சவத்திற்குப் பூசை யிட்டு முறைப்படி மூவர் 'அய்யய்யோ அப்பப்போ' எனச் சொல்லிய பின் பெண்கள் ஒருவரையொருவர் கட்டிப் பிடித்து அழுதல். எ-டு. பள்ளர், செந்தலைக் கவுண்டர்.

கட்டி அளக்கறது : தொ.பெ. படியால் அளக்கும்போது மேலே கையால் கட்டி அளந்துபோடுதல்.

கட்டிச்சோறு கட்டறது : தொ. பெ. வளைகாப்பு.

கட்டித்தயிரு : பெ. கெட்டியாக உள்ள தயிர் (கெட்டித்தயிரு)

கட்டித்தின்னி : பய மவனே : வசை.

கட்டி நாத்து : பெ. நடவின்போது நெருக்கமாக நட்ட நாற்று கள் உள்ள பகுதி.

கட்டி வழியுடுதல் : கட்டி வழிவிடுதல் : தொ.பெ. ஒரு காரிய மாகச் செல்லும் போது குறுக்கிட்டுச் சகுனத்தடை ஏற்படுத்திய காகம், வந்த திசையிலேயே திரும்பினால், காரியம் நடக்கும் எனும் குறிப்பு :

கட்டிவுடுதல் : தொ.பெ. பொய்ச்செய்தி உண்டாக்குதல்.

கட்டு : பெ. வீட்டின் ஒருகூடம்.

கட்டு : ஏ.வி. பூட்டு 'வண்டிகட்டு, ஏர் கட்டு'.

கட்டுக்கதை : பெ. பொய்க்கதை.

கட்டக்கழத்தி : பெ. சுமங்கலி.

கட்டுக்கொளக்காரர் : பெ. பறையன், பள்ளர், சக்கிலியர், வண் ணார், நாவிதன் முதலிய கீழ் இனத்தைச் சேர்ந்த வர்கள்.

கட்டுங்கட்டுஞ் சேந்ததா : பெ. விளையாட்டின் பெயர்.

கட்டுச்சோறு : பெ. புளிச்சாதம் (புளிச்சோறு).

கட்டுத்தாரி : பெ. 1. மாடு முதலியன கட்டுங்கம்பம் "கன்னே புடின்னா கட்டுத்தாரியெ புடிக்கிறான்". 2. மாடு, எருமை ஆகியன கட்டக்கூடிய இடம், "கட்டுத்தாரி வலுவா இருந்தா கன்னுக்குட்டி குதிக்கும்" (கட்டுத்தாரை, கட்டுத்தறி).

கட்டுதிட்டு : பெ. கண்டிப்பு, பொறுப்பு "கட்டுதிட்டா வளத் திருந்தா ஏ இப்புடி ஆகறாங்கோ".

கட்டுப்படி : பெ. நஷ்டமின்றிச் சிறிது இலாபகரமாக அமைதல் (கட்டுவழி).

கட்டுமகரு : பெ. பெண்களின் தலையணி (கட்டுமுடி, கட்டு கன்னி, சவுரி, சவுரிமுடி).

கட்டுமரம் : பெ. 1. ஏறுகருவி. கோவில் கம்பஞ் சாட்ட இதன் மூலம் ஏறிக் கம்பத்தின் உச்சியில் பூவோடு வைப்பர், 2. கூத்தாண்டை என்ற பாரதக்கதை பற்றிய விழாக் கொண்டாடப்படும்போது பலிகொடுக்க அரவானைக் கொண்டு வந்து கட்டும் மரம் (களமரம்).

கட்டுமஸ்தான் : பெ. அடை. பலமான.

கட்டுமானம் : பெ. பார். கட்டுதிட்டு.

கட்டுமுடி : பெ. 1. பார். கட்டுமசுறு, 2. நெல்லை அடிப்பதற்கு வசதியாக நெல்தாளில் கயிறுபோல் திரித்துக் கொள் ளுதல் (பிரி).

கட்டுவளைச் சட்டம் : பெ. வீட்டின் ஒரு சட்டம்.

கட்டுவிரியன் : பெ. பாம்புவகை.

கட்டுனது : கட்டியது : வி.மு.

கட்டெ(டை) மனை செட்டிகாரு : பெ. தேவாங்கச் செட்டியார் இனத்தில் பல செட்டிகாருவிற்குத் தலைவர்.

கட்டெமனை பெந்தர் : பெ. கட்டைமனை செட்டிகாருவிற் குத் துணைபுரிபவர்.

கட்டெ வெல்லு : கட்டை விரல் : பெ. (பெருவெல்லு).

கட்டை : பெ. 1. ஈமவிறகு, 2. உடல், 3. பாடை, 4. மறுதாம்பு, 5. வீடுகளில் விட்டத்தைத் தாங்கும் பகுதி, 6. வீடுகளில் செங்கல் அல்லது சிமெண்ட்டால் செய்து நிறுத்தப் பட்ட தூண்.

கட்டையடி : பெ. துடைப்பம் அல்லது விறகால் அடிக்கும் அடி 'கட்டையடிதிங்க நம்மாலாகாது'.

கட்டைய வெட்டிவுடுதல் : கட்டையை வெட்டிவிடுதல் : தொ.பெ. வரலட்சுமிவகை பருத்திச்செடி காய்ந்தபின் செடியை வெட்டி, கட்டைக்கு ஊட்டம் கொடுத்துத் தழைக்க விடுதல்; இச்செடி மீண்டும் காய்பிடிக்கும்.

கட்டையிலெ போக : வியங். வி. வசை.

கட்ன : கட்டிய : பெ.எ. 'கட்னப்பிருந்து சீரழிவுதா'.

கட : பெ. இடம் 'வளந்த கட தண்ணி (கெடை).

கடக்காலெ : விலகி : வி.எ. 'கடக்காலெ போ'.

கடக்குட்டி : பெ. பெற்றோரின் கடைசிப் பிள்ளை (கடச் சங் குட்டி).

கடகஞ்சரிகை : பெ. நகை.

கடகடன்னு : வி.அடை. விரைவுக்குறிப்பு. 'கடகடன்னு எறங் கிட்டா' (மடமடன்னு).

கடகம் : பெ. கையணி "வெறுங்கையெ வீசறவனுக்கு ஈயக் கடகம் போட்டாப்பலே".

கடங்களிக்கறது : கடன் கழித்தல் : தொ.பெ. மனமின்றிச் செய்கை.

கடச்சல் பட்டறை : பெ. வார்ப்படத் தொழிற்சாலை.

கடசிப்பூசெ : கடைசிப் பூசை : பெ. இறந்தவருக்கு முப்ப தாவது நாள் செய்யும் சடங்கு.

கடஞ்ச மோரு : பெ. வெண்ணெய் எடுக்கப்பட்ட தயிர் 'கடஞ்ச மோரிலேயும் வெண்ணெய் எடுப்பான்".

கடண்ணன் : பெ. பெரிய அண்ணன்.

கடத்தண்ணி வாத்தல் : தொ.பெ. சவம் அடக்கம் செய்யப் பட்டபின் இறந்தவர் மகன், நாவிதன், பாடை சுமந்த பங்காளி நால்வர் அனைவரையும் பண்டாரம் குளிப் பிக்கச் செய்தல்; பின் மகன் ஒரு குடம் நீரை வீட்டிற்கு எடுத்து வருதல். எ-டு. வேளாளர்.

கடைத்தேறுமா : கடைத்தேறுதல் : வி.மு. ஈடேறுதல்.

கடப்பல்லு : கடைவாய்ப் பல் : பெ. உள்வாயோரத்துள்ள பற் கள்; மாட்டிற்கு முளைக்கும் ஏழாவது எட்டாவது பற்கள்.

கடப்பா : பெ. பெரியப்பா.

கடப்பாரை : பெ. 1. உழவுக்கருவி, 2. நெசவுக்கருவி (தெலுங்கு).

கடப்பை : பெ. சிறு மூங்கில்வகை.

கடம் : கடன் : பெ. "கடம்னா கம்மாளன் ஆனெ அஞ்சும்பான்".

கடம்மா : பெ. பெரியம்மா.

கடமொளை : பெ. வண்டியில் மாடு விலகிப்போகாமல் இருக்க உதவும் குச்சி (கடமொளக்குச்சி).

கடல்நொரே : கடல் நுரை : பெ. மருந்துப்பொருள்.

கடலெ உருண்டை : பெ. வேர்க்கடலை அல்லது பொட்டுக் கடலையில் பாகு ஊற்றிப்பிடித்தது.

கடலெ புண்ணாக்குச் செடி : பெ. செடிவகை.

கடலெ பொரிச்சீலை : பெ. பூப்புச் சடங்கின்போது தாய்மாமன் கொடுக்கும் இச்சீலைகளில் ஒரு சீலை உள்ள மனை.

கடலெ போண்டா : பெ. கடலை மாவில் செய்த பலகாரம்.

கடலெ மாவு : பெ. 1. காரபூந்தி செய்யப்படும் மாவு. 2. பொட்டுக் கடலையை இடித்துப் பாகு காய்ச்சிப் பிடித்தது (கல்லமாவு).

கடலெ முட்டாய் : பெ. பொடி செய்த வேர்க்கடலையில் செய்த மிட்டாய்வகை (கடலைச்சிக்கி, கல்லபர்பி, டாப்பிக்கட்டு).

கடவா : பெ. கன்னம் 'கடவா மேலே அறஞ்சி போடுவே'.

கடவு : பெ. 1. சந்து, 2. வழி 'வேலியிலெ கடவெ சுத்தமா அடச்சுப் போடு'.

கடன் எழவுக்கு மாரடித்தல் : தொ. பெ. மனமின்றிச் செய்கை.

கடாசி : வி.எ. 1. அடித்து 'கடாசிப் போடுவெ'. 2. எறிந்து 'தூக்கி கடாசிட்டான்'.

கடாமுடான்னு : வி. அடை. 'எலிகடாமுடான்னு உருட்டுது'.

கடாய் : 1. ஆண் ஆட்டுக்குட்டி (கெடாய்), 2. வாணலி.

கடாய்த்துணி : பெ. சூடான பாத்திரங்களைப் பிடிக்க உதவும் துணி (கரித்துணி).

கடிச்சு : கடித்து : வி.எ. 'கடிச்சுட்டான்'.

கடிவாளக் கவுரு : பெ. குதிரையின் கடிவாளத்திற்குப் போடும் கயிறு (லகான்).

கடிவாளம் : பெ. குதிரையின் வாயில் மாட்டப்படும் இரும்புக் கருவி "கள்ளிக்கு முள்வேலியும் கழுதெக்கி கடிவாளமும் வீண்".

கடுக்காய் : பெ. 1. மருந்துப்பொருள், 2. முற்றிய நுங்கு.

கடுக்கா குடுக்கறது : கடுக்காய் கொடுத்தல் : தொ. பெ. ஏமாற்றுதல்,

கடுக்கு : பெ. 1. ஆடவர் காதணி; வளையம் அல்லது ஒருகல் வைத்த கம்மல்; கம்மலுக்கும் திருகாணிக்கும் இணைப்பு இருக்கும், 2. பெண்கள் காதணி 'காதுலெ புதுக்கடுக்கு (கம்மல்) போட்டிருக்கா'.

கடுகடுங்குது : வி.மு. குளிர் அடிக்கின்றது (குளிருது, கூதலடிக் குது, கொறைக்குது, சில்லுங்குது, நடுங்குது, விறுவிறுங் குது, வெடவெடங்குது, வெரைக்குது).

கடுகடுத்தல் : தொ.பெ. 1. சினக்குறிப்பு காட்டுதல் 'கடுகடுன்னு பேசறான்', 2. விறுவிறுப்போடு வலித்தல்.

கடுகத்தனை : வி.அடை. கடுகின் அளவு.

கடுகு : வி.எ. விலகி, ஓடி 'கடுகிப் போ'.

கடுகு சம்பா : பெ. அரிசிவகை.

கடுகுச் செடி : ப. செடிவகை "கடுகு சிறுத்தாலும் காரம் கொறையுமா?"

கடுகு மொளகுப் பொட்டி : பெ. பார் 1. அஞ்சரப்பொட்டி.

கடுங்கோவ(ப)ம் : பெ. மிகுசினம்.

கடுச்சுக்க : வி.எ. கஞ்சி அல்லது உணவு உட்கொள்ளும்போது சுவைக்காகக் கடித்துக் கொள்ளக் கேட்கும் மிளகாய் அல்லது வெங்காயம் 'கடுச்சுக்க குடுக்காமெ போயிட் டியா' (தொட்டுக்க).

கடுச்சுப்புடும் : கடித்துவிடும் : வி.மு.

கடுசலா : வி.அடை. 1. எரிச்சலாக 'கடுசலா பேசாதே', 2. காரமாக 'கொழம்பு கடுசலா இருக்கு', 3. மிகுதியாக 'காரங் கடுசலா இருக்கு', 'உப்பு கடுசலா இருக்கு' (கடுசா).

கடுசு : பெ. 1. அதிகம் 'வாய் கொஞ்சம் கடுசு', 2. கடினம் 'வேலெ கடுசு'.

கடுசு வக்கறது : கடுசு வைத்தல் : தொ. பெ. ஏரின் கருவைத் தடியை மேலே தூக்கி வைத்தல்.

கடுதாச்சி : கடிதம் : பெ. (கடுதாசு) (போர்ச்சுக்கீசியம்).

கடுந்தஉறவு : பெ. மிகு நட்பு "கடுங்காத்து மழையாகும் கடுந்த உறவும் பகையாகும்".

கடுப்பான் : பெ. துவையல் (சட்னி, பஜ்ஜி).

கடுப்பு : பெ. 1. நோய்வகை 'நீர்க்கடுப்பு', 'வயித்துக் கடுப்பு', 2. பொறாமையோடு கூடிய சினம்.

கடும்பு : பெ. வயிறு பெருத்தல்.

கடுவங்குட்டி : பெ. நாய்க்குட்டி.

கடுவாளத்தவசம் அளக்கறது : தொ. பெ.சாவுச்சடங்கு வண்ணானுக்கும், கொள்ளி முட்டிக்காரனுக்கும் ஏழு வள்ள தானியத்தை அளந்து கொடுத்தல்.

கடெ விரிச்சுட்டியா : கடை விரித்துவிட்டாயா : வி.மு. 'ஒழுங்கற்றுச் சிதறிக் கிடத்தல்' 'துணியெ கடெவிரிச்சுட்டு உக்காந்துட்டியா'.

கடை கட்டறது : கரை கட்டுதல் : தொ.பெ.

கடைகெடுதல் : தொ. பெ. மிக இழிவடைதல் 'கடங்கெட்ட பய'.

கடையப் பண்ணாடி : பெ. பள்ளர் உட்பிரிவு.

கடையறது : கடைதல் : தொ.பெ. மத்தாற் கடைதல்.

கடைசி ஒழவு : பெ. மூன்றாவது உழவு.

கடை சேந்திடுது : வி.மு. மாட்டுக்கு எட்டுப் பற்களும் முளைத்து விட்டதைக் குறித்தல் (பல்லு சேந்திடுது, மொளப்பல்லு வந்திடுது, வாய் சேந்திடுது).

கடை சேந்துட்டா(ன்); வி.மு. நோய் அல்லது வயது காரணமாய் நடமாட முடியாமற் போதல் (மூலெ சேந்துட்டா(ன்)).

கடை நடக்குதா : வி.மு. வியாபாரம் பரவாயில்லையா எனும் குறிப்பு.

கடையாணி : பெ. பார். அச்சாணி.

கடையாணி போல்ட்டு : பெ. குதிரை வண்டியின் பாகம்.

கடைரொட்டி : பெ. கடையில் விற்கப்படும் ரொட்டி.

கடைவீதி : பெ. பிரதான வீதியிலுள்ள கடைகளின் வரிசை (கடெ, கடத்தெரு).

கடோர்கசன் : பெ. பலசாலி.

கண்அசந்தா(ன்) : வி.மு. இறந்தான் (போய்ச்சேந்தா(ன்).

கண்கட்டி : பெ. 1. கண்ணில் வரும்கட்டி, 2. கண்ணைக் கட்டி விளையாடும் விளையாட்டு.

கண்கட்டி வித்தை : பெ. தந்திரவித்தை.

கண்கலங்காமெ வெச்சுக்கறெ : கண் கலங்காமல் வைத்துக் கொள்கின்றேன் : நல்லமுறையில் வைத்துக் காப்பாற்று கின்றேன்.

கண்கொத்திப் பாம்பு : பெ. பாம்பு வகை (பச்சப்பாம்பு).

கண்சட்டுவம் : பெ. பார். அரிகரண்டி (கண்ணுச்சட்டுவம், சாரணி, சால்ரி).

கண்சாடை : பெ. கண் அசைவின்மூலம் புரிய வைத்தல் (கண்ணடித்தல்).

கண்சூடு : பெ. கண்ணின் மேற்பகுதி.

கண்டங்கத்திரி : பெ. ஒருவகை முட்செடி.

கண்டங்கரேல்னு : வி.அடை. (கன்னங்கரேல்னு, காக்காகக் கறுப்பு).

கண்டது கடி : பெ. வேண்டாதவை 'கண்டது கடி தின்னு ஒடம்பே கெடுத்துக்காதே, 'கண்டது கடி பேசாதே'.

கண்ட துண்டமா : வி.அடை. பல துண்டுகளாக 'கண்ட துண்டமா வெட்டிப் போடுவே(ன்)

கண்டபடி : வி.அடை. 1. முறையின்றி 'கண்டபடி அலையாதே', 2. விருப்பப்படி.

கண்டம் : பெ. ஆபத்து 'இவனுக்குத் தண்ணிலெ கண்டம்'.

கண்ட மட்டும் : வி.அடை. தெரிந்தவரை 'நாங்கண்ட மட்டும் அவெ அப்படிச் செய்யமாட்டா'.

கண்ட மண்டலமா பேசறா(ன்) : முறையற்றுப் பேசுதல்.

கண்டமா : வி.மு. தெரியுமா 'மொதலே கண்டமா இப்புடி ஆகுமினு' (கண்டாங்கலா).

கண்டவங்கிட்டெ போனவதானே : ஒழுங்கீனமான பெண்ணை வைதல்.

கண்டவனுக்கு முந்தாணி விரித்தவதானே : ஒழுக்கமற்ற பெண்ணை வைதல்.

கண்டா : வி.எ. பார்த்தல் "ஆத்தெக் கண்டா சூத்தெக் கழுவறது, அம்மியெ கண்டா மொளகறெக்கறது".

கண்டா(ல்) ஒண்ணு காணாட்டி ஒண்ணு : நேரில் புகழ்வதும் பின்னால் இகழ்வதும் ஆன தன்மையுடையவரைக் குறித்தல்.

கண்டாங்கிச் சீலெ : பெ. ஒருவகைக் கலர்சீலை.

கண்டாமாலை : பெ. புற்றுநோய்.

கண்டி : பெ. இடைவெளி 'கண்டியுட்டு வெட்டுங்க'.

கண்டிக்கும் : வி.மு. குணப்படுத்தும் 'இந்த மருந்து ஊத்துனா கண்டிக்கு(ம்)'.

கண்டு : பெ. பந்து 'நூல்கண்டு'.

கண்டுக்க மாட்டா(ன்) : வி.மு. மதிக்கமாட்டான் 'இப்பல்லா நம்பலெ கண்டுக்க மாட்டா(ன்)'.

கண்டுக்குவாங்களெ : வி.மு. தெரிந்துகொள்வார்களே.

கண்டுங்காணாமெ : வி.அடை. 1. அலட்சியமாயிருத்தல் 'கண்டுங் காணாமெ போறா(ன்)', 2. பார்த்தும் பாராதது போலிருத்தல்.

கண்டுசனா : கண்டிப்பாக : வி.அடை. (ஆங்கிலம்).

கண்டு புடிக்கற வெளையாட்டு : 1. ஒரு பொருளை மறைத்து அதனைக் கண்டுபிடித்தல் 2. பலர் மறைய ஒருவர் கண்டுபிடித்தல்.

கண்டு போங்க : வி.மு. தெரிந்தபின் செல்லுங்கள் 'அவசரப் படாதீங்க கண்டு போங்க'.

கண்ண இருட்டிருச்சு : வி.மு. 1. சோர்வு காரணமாய், கண் சுழற்சியால் ஏற்படும் தடுமாற்றம், 2. மயக்கம் ஏற்படுதலும் கண் சுழல்தலும்.

கண்ணைக் கட்டிகிட்டு வருது : வி.மு. பசி மயக்கம்.

கண்ண கூட்டம் : பெ. ஓர் இனம்.

கண்ணசரோ : வி.எ. இறந்துவிட்டதால் 'அவுரு கண்ணசரோ நாங்க இப்பிடி பாடாப்படறோம்'.

கண்ணடக்கம் : பெ. 1. அம்மனை அலங்கரிக்கும்போது கண் களுக்குப் பொருத்தும் கண் உருவம், 2. வேண்டுதலின் பேரில் பக்தர்கள் செலுத்தும் கண் உருவம்.

கண்ணடைப்பான் : பெ. தூக்கக் கலக்கத்தால் இமைகள் மூடி மூடித் திறத்தல் 'காலைய்யிலேந்து ஒரே கண்ணடைப் பானா இருக்கு'.

கண்ணத் தொறன்னா வாயெத் தொறக்கான் : கண்ணைத் திற என்றால் வாயைத் திறக்கிறான் : அப்பாவியைக் குறித்தல்.

கண்ணந்தை கூட்டம் : பெ. ஓர் இனம்.

கண்ண மூடிட்டு கத்தாதே : எ.ம.வி. புரிந்து கொள்ளாமல் சத்தம் போடாதே.

கண்ணவிஞ்சு போக : கண் கெடுக : வியங்.வி.வசை.

கண்ணாடி ஓடு : பெ. வெளிச்சத்திற்காகப் போடும் கண்ணாடி யால் ஆன ஓடு.

கண்ணாடி கிளாசு : பெ. கண்ணாடிக் குவளை (ஆங்கிலம்).

கண்ணாடிக்குப்பி : பெ. பாட்டில்.

கண்ணாடி சீலெ : பெ. மெல்லியசீலெ (கண்ணாடிப் பொடவை, சருகு சீலெ).

கண்ணாடி செவுறு : பெ. தானியம் கொட்டுவதற்கு என வீட்டி னுள் வைக்கப்படும் தடுப்புச் சுவர் (கண்ணாரைச் செவுறு).

கண்ணாடி மயிலை : பெ. பளபளப்பான வெள்ளை நிறமுள்ள மாடு.

கண்ணாடி விரியன் : பெ. விரியன் பாம்புவகை.

கண்ணாடி வெல்லம் : பெ. மஞ்சள் நிறமுடைய அச்சு வெல்லம்.

கண்ணாம்பூச்சி : பெ. கண்ணைக் கட்டியவனின் கையிலுள்ள மண்ணை ஓரிடத்தில் போட வைத்துக் கண் அவிழ்க்கப் பட்டபின் கண்டுபிடிக்கச் செய்தல் (கண்ணாமூய்ச்சி).

கண்ணா முழி : கண்விழி : பெ.

கண்ணாமுழி பிதுங்குது : வி.மு. வேலை மிகுதியால் வருந்துதல்.

கண்ணாரை : பெ. 1. வீட்டினுள் தானியம் கொட்ட ஏற்படுத்தப் பட்ட சுவர்த்தடுப்புள்ள அமைப்பு, 2. வீட்டைப் பூசும் போதும் மெழுதும்போதும் பகுதி பகுதியாக மெழுகு தல். 'இந்த ஆசாரத்துக்கு மூணு கண்ணாரை வச்சு வழிச்சுடு'.

கண்ணாலம் : கல்யாணம் : பெ. 'கண்ணாலம் காச்சிக்குப் போறதுதானே',

"கண்ணால ஊட்லியே கட்டிட்டு அழகறவள் எழவூட்லே கேக்கணுமா?".

கண்ணி : பெ. 1. கண்ணீர் 'இந்தக் கண்ணி வடிக்கின்ற வேலையெல்லா வேண்டா', 2. வெற்றிலைத் தோட்டத்தில் ஒரு குறிப்பிட்ட அளவு; இரு கிடங்குகள் சேர்ந்த இடம்.

கண்ணு : பெ. 1. துவாரம், 2. பள்ளம், அணை போன்றவற்றில் நீர் வெளியேற வைக்கப்பட்டுள்ள வழி 'கண்ணுத் தொறந்துவுடு' 3. புண்ணின் கண்.

கண்ணுக்கு எட்டுன முட்டு : கண்ணால் பார்க்கக் கூடிய அளவு.

கண்ணுக்குள்ளே உசிரா முழிக்கறா(ன்) : பசியால் வருந்துபவனைக் குறித்தல்.

கண்ணுக்குள்ளேயே இருக்கு : ஒருவரைப் பார்க்க வேண்டும் போல் இருத்தற் குறிப்பு (கண்ணுலயே கட்டுன மாதிரி இருக்கு).

கண்ணுக்கு கண்ணா காப்பாத்தினே(ன்) : வளர்ப்பின் அருமை (கண்ணுக்குள்ளெ வச்சு வளத்தே(ன்)).

கண்ணுக்கெட்டாமே போயிட்டியே : காணாமல் போனவரை இறந்தவரைக் குறிக்கும் குறிப்பு.

கண்ணுங் கருத்துமா(ய்) : வி. அடை. முழு கவனத்துடன்.

கண்ணுத்தட்டு : பெ. சாதம் வடிக்கும் தட்டு (ஓட்டத்தட்டு, அன்னத்தட்டு, சோத்துத்தட்டு).

கண்ணு நெலக்குத்தி இருக்கு : வி.மு. கருவிழி மறைந்து வெள்ளை விழி படர்ந்திருத்தல்.

கண்ணுமை : பெ. கண்மையுள்ள பெட்டி 'கண்ணுமை ஒன்னு குடு' (மை டப்பா).

கண் பூத்துப் போச்சு : வி.மு. எதிர்பார்தத அலுப்பின் குறிப்பு.

கண்மாய் : பெ. ஏரி.

கண்மூடித்தனம் : பெ. கவனமின்மை.

கண்ரெப்பை : பெ. கண் இதழ்.

கண்றாவி : பெ. 1. அசிங்கம், 2. கஷ்டநிலை 'அந்தக் கண்றா வியெ பாக்க முடியலே' 3. துக்கம் (தெலுங்கு).

கண : பெ. அடை. மிகுதியான 'கண தூரம்'.

கணக்கன் கூட்டம் : பெ. ஓர் இனம்.

கணக்கா : வி. அடை 1. போல "எச்சிலெயெக் கண்ட நாய் கணக்கா".

2. சாரியாக 'கணக்கா பத்து மணிக்கு வந்துடு'

கணக்கை : பெ. மரவகை.

கணகண : இடை. மிகுதியான சூடுகாரணமாய் ஏற்பட்ட ஒலிக் குறிப்பும் 'தண்ணி கணகணன்னு காஞ்சு போச்சு', 'ஒடம்பு கணகணங்குது'.

கணப்பொருத்தம் : பெ. 1. திருமணப் பொருத்தங்களுள் ஒன்று, 2. மிகு பொருத்தம்.

கணப்பொழுது : பெ. நொடிப்பொழுது.

கணவன் : பெ. பெண்ணை மணம் புரிந்து கொண்டவன்.

கணிசம் : பெ. சிறிதளவு, மதிப்பு, 'கணிசமா கொண்டா'.

கணித்தல் : தொ. பெ. அளவிடுகை : (கணிப்பு).

கணியன் : பெ. பழங்குடிச் சாதியான்.

கணுவு : பெ. 1. கரும்பு, மூங்கில் முதலியவற்றின் கண், 2. மரம் முதலியவற்றின் கணு.

கணுவு வுடுதல் : தொ. பெ. கிளைப்பயிர் வருதல் (அள்ளப்பயிர் வுடுதல்).

கத்தரிப்பூக் கலர் : பெ. நிறவகை (வகை : லைட் கத்திரிப்பூக் கலர்).

கத்தலைப்பில்லி : பெ. நெற்பயிருடன் வளரும் நெற்பயிர் போலுள்ள புல்வகை (நெல்லு சக்காளத்தி).

கத்தாரி : பெ. எலி பிடிக்குங் கருவி.

கத்தாளெ : கற்றாழை : பெ. "பிலுக்கறா(ள்) பிலுக்கறா(ள்) பித்தளெக் காசுக்கு ரண்டாம் கத்தாளெ". (வகை. ஆனைக்கத்தாளெ, உரிமஞ்சி, சோத்துக் கத்தாளெ).

கத்தாளெக் கெழங்கு : பெ. கிழங்குவகை.

காத்தாளெ மஞ்சி : பெ. கற்றாழை நார்.

கத்திகட்டுச் சேவல் : பெ. சண்டைக்குவிடப்படும் சேவல்.

கத்திப்பொட்டல் : பெ. பனை ஏறுபவர் கத்தி போட்டு வைக்கும் பெட்டி.

கத்திபோட்டு அழைக்கறது : தோ. பெ. சதுர்முகை அங்காளம்மன் விழாச் சடங்கு. ஆற்றிலிருந்து தீர்த்தக்குடம் கொண்டு வருபவர்களைப் பலர் கத்தியால் வயிற்றில் குத்தியும், கத்திச் சண்டை செய்தும் எதிர்கொண்டு அழைத்தல் (கத்திபோடுதல்).

கத்திரி : பெ.1. எலிப்பொறி, 2. கத்திரிக்குங் கருவி, 3. செடிவகை.

கத்திரி மஞ்செ : பெ. கஸ்தூரி மஞ்சள்.

கத்திரி மூளை : பெ. "பத்தும் படிச்ச கத்தரி மூளெ".

கத்தி வீசுதல் : தொ.பெ. விழாவின்போது கத்தியால் வயிற்றில் குத்திக் கொள்ளுதலும் சண்டை இடுதலும்.

கத்துக்குட்டி : பெ. ஒன்றைப் பற்றி முழுமையாகத் தெரியாத நிலை 'நீயே ஒரு கத்துக்குட்டி எனக்குச் சொல்ல வந்துட்டியா'.

கதக்குது : வி.மு. கலக்குகின்றது 'கொளந்தே பாலெ கதக்குது'.

கதகதன்னு : வி. அடை. குறிப்பு 'ஒடம்பு ஏனோ கதகதன்னு இருக்கு'.

கதம்பக் கவுறு : பெ. தேங்காய் மட்டையின் நாரால் ஆன கயிறு.

கதம்பப் புரோட்டா : பெ. புரோட்டா வகை.

கதம்பம் : பெ. 1. கலந்து கட்டிய பூ 'ஒரு ரூவாக்கு கதம்பம் வாங்கிட்டு வா' 2. கலப்பு.

கதர்க்கொடி : பெ. கொடி.

கதலி : பெ. வாழைவகை.

கதவுக்குமிழ் : பெ. கதவில் பொருத்தப்படும் பித்தளைக் குமிழ்.

கதாகாலட்சேவி : பெ. கதாகாலட்சேபம் செய்பவர்.

கதிர் தொளைப்பான் : பெ. பயிர்நோய்.

கதிர் நாவா(ய்)ப் பூச்சி : பெ. நெல்மணியின் பாலை உறிஞ்சுவது.

கதிவேலி : பெ. ஒருவகைக் குருவி; காடையில் பெரியது (கதுவேறி).

கதுக்கு : பெ. தறியில் தார் ஊசி மாட்டுவது.

கதை அளத்தல் : தொ.பெ. பேச்சை விளித்தல்.

கதைவுடுதல் : தொ. பெ. பொய் வதந்தி எழுப்புதல்.

கதை கட்டுறது : தொ.பெ. பொய்ச்செய்தி கிளப்புதல்.

கதை கெடுத்தல் : தொ. பெ. காரியத்தைக் குலைத்தல் 'ஊருச் சக்கிலியர் எல்லாஞ் சேந்து தோலெ பதங்கெடுத்த மாதிரி கதெ கெடுத்துப்பிட்டிங்க'.

கந்தக மண்ணு : பெ. மண்வகை.

கந்தரகோளம் : பெ. அலங்கோலம்.

கந்தல் பொந்தலாயிடுச்சு : வி.மு. இற்றுப்போய்க் கிழிதல்.

கந்தாயம் : பெ. தவணைப்படி செலுத்தும் வரி.

கந்துவட்டி : பெ. பிடிப்பு வட்டி.

கந்தை : பெ. மிகக் கிழந்த உடை "கூழானாலும் குளிச்சு குடி கந்தெயானாலும் கசக்கிக் கட்டு".

கப்சா : பெ. புரளி.

கபக்கட்டறது : தொ.பெ. கல்லிற்குக் கூறும் நிறம் கட்டுதல்.

கப்பலு : கப்பல் : பெ. மரக்கலம் "கப்பல் கவுந்தாலும் கன்னத் துலே கை வைக்காதே".

கப்பாத்து : பெ. செடிகளை, முட்களை வெட்டிவிடுதல் (கவாத்து).

கப்பி : பெ. 1. அழுக்கு, 2. சுண்ணாம்பை நீரில் வேகவைத்து நீரை இறுத்தபின் அடியில் நிற்கும் கற்கள், 3. மண்ணணைச் சலிக்கும்போது நிற்கும் சிறு கற்கள், 4. வண்டல் (உருது).

கப்பி சலிக்கிறது : பெ. மண்ணணைச் சலிக்கும் கருவி.

கப்புக் கமுர் : பெ. கிளைகள்.

கப்புச் சுப்புனு : கப்புச் சிப்பென : வி.அடை. பேச்சின்றி அடங்குதல் குறிப்பு.

கப்புனு : வி. அடை. வேகமாக 'கப்புனு புடி'.

கப்பூரம் : கர்ப்பூரம் : பெ. "அறியறது அறியுமா ஆமணக்கு வாசனெ கழுதெ அறியுமா கப்பூர வாசனெ?".

கப்பூரம் அவிக்கறது : கர்ப்பூரம் அணைத்தல் : தொ.பெ. சொன்னது உண்மையன நிருபித்தல்.

கப்பூரவள்ளி : பெ.1 . செடிவகை, 2. வாழைவகை (2. சாம்பிராணி வாழை).

கப்பூர வெத்திலெ : பெ. பார். அந்தியூர் வெத்திலெ (வகை : நாட்டுக் கப்பூர வெத்திலெ).

கப்ளிங்கு : பெ. இணைப்பு (ஆங்கிலம்).

கபகப : இடை. குறிப்பு 'வயிறு கபகபன்னு எரியுது'.

கபடு : கபடம் : பெ. நயவஞ்சகம்.

கபம் : பெ. சிலேட்டுமம் - கோழை 'கபங்கட்டிருக்கு'.

கபோதி : பெ. 1. கண்ணற்றவன் 'கண்ணில்லாத கபோதி, பிச்சைபோடு தாயே',

2. வசை -மோசமானவன் (தெலுங்கு).

கம்சு : கமிசு : பெ. பார். அங்கராக்கு (அரபு).

கம்பஆட்டம் : பெ. கம்பம் நட்டபின் பறையன் மூன்று இரவு கம்பத்தைச் சுற்றி ஆடுதல் (கம்பு ஆடறது).

கம்பங்கட்டை : பெ. கம்புப் பயிரின் வேர்ப்பகுதி.

கம்பங்கழி : பெ. கம்புமாவால் செய்து உருண்டை பிடிக்கப் பட்டது.

கம்பங்காடு : பெ. கம்பு விளையும் நிலம் .

கம்பஞ்சோறு : பெ. கம்பை இடித்து உடைத்துச் சமைக்கப்பட்ட உணவு.

கம்ப நீராட்டு : பெ. விழாச் சடங்கு. கம்பம் வெட்டி அதனை ஆற்று நீரில் குளிப்பாட்டிப் பூசையிட்டுக் கோவிலுக்குக் கொண்டு வருதல்.

கம்பம் எடுத்தல் : தொ.பெ. மாமன், மச்சான்முறையுள்ளவர்கள் கம்பத்தை ஒழித்து வைக்க, முறைகாரர் எடுத்து வரும் விழாச் சடங்கு.

கம்பம் சாட்டுதல் : தொ. பெ. மாரியம்மன் விழாத் தொடங்கப் பூசையிடுதல்.

கம்பம் நடுதல் : தொ.பெ. விழாச் சடங்கு. கம்பம் நட்டு, கம்பத்தின் மேல் பானையில் தீப்பந்தம் எரியும்.

கம்பம் புடுங்கறது : தொ. பெ. கம்பம் சாட்டிய பதினைந்தாம் நாள் கம்பத்தைப் பிடுங்கிவிட்டு, அக்குழியில் ஆட்டின் தலையை இட்டுப் புதைத்தல்.

கம்பம் வெட்டறது : தொ.பெ. குறிப்பிட்ட இடத்திற்குச் சென்று பால் உள்ள மரத்தை ஊர்ப் பெரியவர் தொட்டுக் கொடுக்க தச்சன் வெட்டுதல்.

கம்பரக் கட்டு : பெ. மிட்டாய்வகை.

கம்பரக்கத்தி : பெ. கதிர் அறுக்குங்கத்தி.

கம்பரிக்கொப்'பு : பெ. காதணி.

கம்பவுண்டு : காம்பவுண்டு : பெ. மதிற்சுவர் (ஆங்கிலம்).

கம்பளித்த நாயக்கர் : பெ. நாயக்கர் உட்பிரிவு.

கம்பளிப்புழு : பெ. கருஞ்சிவப்பு நிறமுள்ள புழு. உடம்பில் பட்டால் அரிப்பை ஏற்படுத்தும்.

கம்பளிப் பிசின் : பெ. மரவகை. இம்மரத்திலுள்ள பிசின் தலை வலிக்கு மருந்தாகப் பயன்படுகிறது (கம்பளி பிவுன்).

கம்பி : பெ. 1. ஆடையின் ஓரச் சிறுகரை, 2. தறியின் அனைத்துச் சக்கைகளும் ஓட்டையில் கோத்து வர உதவுவது, 3. பொன், இரும்பு முதலியவற்றின் கம்பி.

கம்பி எண்ணிட்டு இருக்கறான் : வி.மு. சிறைச்சாலைக் கைதி யாக உள்ளான் எனுங் குறிப்பு (உள்ளே இருக்கறா(ன்)).

கம்பிச் சேலெ : பெ. கம்பிக் கரையிடப்பட்ட சேலை .

கம்பி நீட்டிட்டா : வி.மு. ஓடிவிட்டான்.

கம்பிளி : பெ. உரோமப்படலம் - போர்வையில் ஒருவகை "கரடிகிட்ட ஒதெ பட்டவனுக்குக் கம்பளிக்காரனெ கண்டா பயம்".

கம்பிளி கயிறு : பெ. குறும்பை ஆட்டின் முடியில் தயாரித்தது. ஆடு மாடுகளுக்குக் கண்ணேறு கழிக்க உதவும்.

கம்பு : பெ. கரிசல்பகுதி உணவுப்பயிர் (வகை : அரிசிக்கம்பு, அறு பதாங்கம்பு, காலேஜிக்கம்பு, குள்ளங்கம்பு, நாட்டுக் கம்பு, பொட்டுக்கம்பு).

கம்பு உமி : பெ. கம்பின்மேல் ஒட்டியுள்ள துகள்கள் (கம்பம் பொட்டு).

கம்புக்காரர் : பெ. கம்பு விளையாடுபவர்.

கம்புக்கொளக்கட்டெ : பெ. இனிப்புவகை.

கம்புமாவுதோசை : பெ. சிற்றுண்டி.

கம்மம் மாவு : கம்பு மாவு : பெ. கம்பை இடித்துப் பாகு ஊற்றிப்பிடித்த உருண்டை.

கம்மலு : பெ. மகளிர்காதணிவகை (தெலுங்கு).

கம்மலு மாட்டலு : பெ. கம்மலிலிருந்து முடிக்குக் குத்தப்படும் அணிகலன்.

கம்மவார் : பெ. தெலுங்கர் உட்பிரிவு.

கம்மனாட்டி : பெ. வசை.

கம்மாளன் : பெ. பார்.1. ஆசாரி (கெம்மாளன்) "கெடந்தா கெம்மாளம் பட்டினி சாப்பிட்டா ஐயஞ்சாப்பாடு."

கம்மியா : வி.அடை. குறைவாக 'காசு கம்மியா இருக்கு' (உருது).

கம்முனு : கம்மெனல் : வி.அடை. 1. ஓசையடங்கற் குறிப்பு 'கம்முனு இரு', 2. மணங்கமழுங் குறிப்பு.

கமகமன்னு : வி. அடை. பார். 2. கம்முனு.

கமலா ஆரஞ்சி : பெ. ஆரஞ்சிவகை (லூசு சாக்கிட் ஆரஞ்சி).

கமறல் : கமறுதல் : பெ. காரல் 'தொண்டெ கமறிகிட்டே இருக்கு'.

கமுகப்பூ : பெ. மலர்வகை (கமுகமரம்).

கமுத்தி : வி.எ. கவிழ்த்து 'கமுத்திப் போடு'.

கமுத்திடு : ஏ.வி. கவிழ்த்துவிடு.

கமுந்த : கவிழ்ந்த : வி.எ. "கமுந்தபால் கலய மேறாது".

கய்யா மிய்யானு ஒளர்றா(ன்) : பதில் கூற முடியாமல் உளறுதல்.

கயிறு திரித்தல் : தொ.பெ. பொய்ச்செய்தி உண்டாக்குதல்.

கயிறு திருப்பி மிசினு : பெ. நாரைக் கயிராகத் திரிக்கும் இயந்திரம்.

கயிறு முட்டாய். பெ. மிட்டாய்வகை (விசிறி மிட்டாய்).

கயிறுவுடுற கூடை : பெ. கூடைவகை.

கர்ணபத்தரம் : பெ. காதணி.

கர்ணம் : பெ. கிராமக் கணக்கன் (கணக்குப் பிள்ளை).

கர்ப்பகிரகம் : பெ. ஆலயத்திலுள்ள மூலஸ்தானம்.

கர்ரு புர்ரு : இடை : சினக்குறிப்பு 'கர்ரு புர்ருங்கான்'.

கர்வம் : பெ. செருக்கு.

கர்ஜிக்காய் : பெ. பார். எருக்கலங்காபூரி.

கரகப்பானை : பெ. திருமணச் சடங்கிற்கு உதவும் பானை.

கரகம் : பெ. பிரார்த்தனையாக எடுக்கும் பூங்குடம்.

கரகர : இடை. 1. உறுத்துதல் குறிப்பு, 2. சீதளம் முதலியவற்றால் தொண்டையில் அரிப்பு உண்டாதல்.

கரகரங்குது : வி.மு. குரல் கனத்திருத்தல் (கரகரப்பு).

கரங்கண்டவன் : வி.அ.பெ. திறமைசாலி.

கரங்கன்னு : பெ. மாடுபோடும் இறந்த கன்று.

கரட்டுமேடு : பெ. குன்றுபோல் உயர்ந்த இடம்.

கரடிவுடுதல் : தொ.பெ. பொய்ச்செய்தி உண்டாக்குதல் (புருடா விடுதல், புளுகுதல்).

கரடு : பெ.குன்று.

கரடுக : பெ. லிங்காயத்தார் பூசைக்குரியது.

கரடுமுரடா : வி.அடை. ஒழுங்கற்றதாய் ‘கரடுமுரடாப் பேசாதே’.

கரண்டு : பெ. மின்சாரம் (ஆங்கிலம்).

கரண்டுக்காரரு : பெ. லைன்மேன்.

கரண்டுப்பொட்டி : பெ. துணிகளைத் தேய்க்கும் மின்சாரப் பெட்டி (இஸ்திரி பொட்டி, தேக்கர பொட்டி).

கரணை : பெ. 1. கரும்பு முதலியவற்றின் துண்டு; கரும்பின் நுனிப்பகுதி, 2. புண்வடு.

கரணைத்தட்டை : பெ. படப்பு மேய உதவும் தட்டை (சூர் தட்டை).

கரத்தட்டை : பெ. மாட்டு வியாபாரத்தின் ஐம்பத்தைந்து ரூபாயைக் குறிக்கும் சொல்

கரப்பான் : பெ.1. சொறி - புண்வகை, 2. பூச்சிவகை.

கரம்பா : பெ. கறுப்பு வெள்ளை கலந்த நிறத்தையுடைய மாட்டுவகை (கரம்பை).

கரம்பை ஓட்டறது : தொ.பெ. தூற்றும்போது நெற்குவியலில் விழும் மண்கட்டி,. புழுக்கை ஆகியவற்றைத் தட்டி நீக்குதல்.

கரலி : பெ. ஒரு குளத்தின் பெயர்.

கரவளி : கரைவழி : பெ. "கரவெளியெ அண்டுனா காகமும் பொன் நெறம்".

கரன் : பெ. மாட்டு வியாபாரத்தில் ஐம்பது ரூபாயைக் குறிக்கும் சொல் (ரக்கிரி).

கரார் : பெ.உறுதி (அரபு).

கரி : பெ. அடுப்புக்கரி "கரிவித்த பணம் கருப்பாவா இருக்கும்".

கரி ஈசல் : பெ. மரவகை.

கரிக்கட்டான் : பெ. மரவகை (கருக்கட்டான்).

கரிக்கி : பெ. கறுப்பானவள்.

கரிக்கி : வி.எ. கருக வைத்து.

கரிக்குருவி : பெ. குருவிவகை (கருங்குருவி).

கரிக்கோல் : பெ. ராகித் தாம்பு ஓட்டியபின் ராகிக்கு மேலுள்ள சிறுசிறு குச்சிகள்.

கரிகலாங்கண்ணி : கரிசலாங்கண்ணி : பெ. கீரவகை.

கரிசல் : பெ. கறுப்பு நிறமுடைய மானாவாரிப் புஞ்சைப் பிர தேசம் (கரிசல் மண்ணு).

கரிசனம் : பெ. அன்பு, சிரத்தை "கரிசனம்கட்டிட்டு அழுகுது கண்ணாடிச் செவுர் முட்டீட்டு அழுகுது".

கரிநாக்கன் : பெ. 1. ஒருவன் எதேச்சையாக ஒன்றைக் கூறு அதன்படி நடப்பின் அவனைக் குறித்தல்.

கரிநாக்கு : பெ. 1. கரி நாக்கனின் நா, 2. கரும்புள்ளி உள்ள நா, இந்நா உள்ளவர்கள் கூறுவது பலிக்கும் என்பது நம்பிக்கை.

கரிப்பூட்டை : பெ. சோளப்பயிருக்கு வரும் ஒருநோய். கதிர் கறுப்பாய் கருகி இருக்கும்.

கரிபூசுதல் : தொ.பெ. அவமதித்தல்.

கரிய காளிகோயில் : பெ. இக்கோவிலின் மாரியம்மன் விழா நடக்கும்போது குண்டத்தில் பெண்கள் இறங்குவதில்லை.

கருஇண்டு : பெ. மரவகை.

கருக்கடி : பெ. திடீர்பயம் 'கருக்குனு ஆயிடுச்சு'.

கருக்கடை : பெ. பொறுப்பு 'கொஞ்சமாவது கருக்கடை இருக்கா',

*கருக்கல் :* பெ. 1. வைகறை, 2. மேகம் மூடியிருத்தல் "கருக்கல் பொழுதெ நம்பாதே கல்யாண சோத்தையும் நம்பாதே".

*கருக்கல் ஏறிடுது :* வி.மு. மழை பெய்யும் அறிகுறி (மூடிடுது, கருக்கல் கட்டிருக்கு), மோடம் போட்டிருக்கு, கருக்கல் மேலே நிக்குது).

*கருக்கழிதல் :* தொ. பெ. கூர் மழுங்குதல்.

*கருக்காய் :* பெ. 1. பாதி விளைந்தது, 2. பிஞ்சு, 3. முற்றிய கதிர், 4. விளையாதநெல்.

*கருக்காய் கருது :* பெ. கறுக்காமல் பச்சை நிறத்திலுள்ள முற்றிய ராக்கிக்கதிர். இதனைத் தீயில் வாட்டிச் சாப்பிடுவர்.

*கருக்கு :* பெ. 1. ஆயுதப்பற்கூர், 2. பனைக்கருக்கு.

*கருக்குத்தடி :* பெ. உழவுக்கருவி; நுகத்தின்மேல் வைக்கும் தடி (கருவத்தடி).

*கருக்குத்தாள் உளுந்திட்டுது :* வி.மு. பயிர்நோய்; குருத்தில் புழு விழுவதால், கதிர்வராமல் போதல் (குருத்துக்கடி உளுந் திட்டுது).

*கருகல் :* பெ. 1. சோறு கறிகளின் காந்தல், 2. பயிர்நோய்.

*கருகல் நாத்தம் :* பெ. ஒரு பொருள் எரியும்போது வீசும் வாடை.

*கருங்கண்ணுமாடு :* பெ. கண்ணைச் சுற்றிக் கறுப்பாக உள்ள மாடு; நல்லது.

*கருங்கல் :* பெ. கல்வகை.

*கருங்கல்லுச் செவுறு :* பெ. கருங்கல்லால் கட்டப்பட்ட சுவர்.

*கருங்கற்பொடி ஜல்லி :* பெ. பொடிக்கற்கள்.

*கருங்கற் ஜல்லி :* பெ. சிறு கற்கள்.

*கருங்காட்டேறி :* பெ. சம்பா விளையாட்டில் ஆடும்காய் நான்கும் கறுப்பாய் விழுதல் (கரும்பாறை, காட்டேறி).

*கருங்காய் :* பெ. சிறிதும் பழுக்காத காய்.

*கருங்காலி :* பெ. மரவகை.

*கருங்கிளை நோவு :* பெ. பருத்தியில் விழும் நோய்.

*கருங்குமினி :* பெ. குன்றிமணிச் செடியின் சிவப்புவிதை.

கருங்குறிஞ்சி : பெ. மரவகை.

கருசீப்புத்துணி : பெ. கைக்கு உதவும் சிறுதுணி (குட்டத்துணி, கைக்குட்டை).

கருஞ்சிட்டு : பெ. தேன்சிட்டுவகை.

கருஞ்சுக்கிட்டி : பெ. கீரைவகை. (சுக்குட்டிக் கீரை).

கருஞ்சுக்குட்டிக் கொழம்பு : பெ. மணத்தக்காளிக் கீரையை அரைத்துச் செய்த குழம்பு.

கருஞ்சூரிப் பாம்பு : பெ. கத்திவகை "கல்லுக்குள் இருக்கும் கருஞ் சூரிப்பாம்பு கண்டவருக்கெல்லாம் புத்தி சொல்லிப் போட்டுத் தன்னிடமே போய்ச் சேந்ததாம்".

கருஞ்செவலை : பெ. கறுப்பும் சிவப்பும் கலந்த மாட்டுவகை.

கருடதோசம் : பெ. தீட்டுத் துணியின்மீது கருடனின் நிழல் படுதல். வண்ணாத்தி வந்து எடுக்கும்வரை தீட்டுத்துணி வெளி யில்இருக்கும்.

கருடவாகனம் : பெ. காரமடை ரங்கநாதரின் வாகனம்.

கருணைக்கெழங்கு : பெ. கிழங்குவகை (சேனை).

கருணை மூங்கில் : பெ. மூங்கில் வகை (கருணமூங்க).

கருணை அளகல் நோவு : பெ. கருணை அழுகல் நோவு : பார். அன்னாசிப்பழ நோவு.

கருத்தர் : கர்த்தர் : பெ.

கருத்தாடு : பெ. கறுப்பு நிறமுடைய வெள்ளாடு.

கருதங்கிரிச்சு : கரு நிலைத்தல் : தொ. பெ. கர்ப்பிணிக்கு மூன்று மாதம் நிறைந்த பின் கூறுதல்.

கருதடித்தல் : தொ. பெ. தானியத்தைப் பிரித்தெடுத்தல்.

கருது : பெ. 1. கதிர், 2. முறுக்கு அதிரசம் போன்றவற்றின் துளையில் விட்டு எடுக்க உதவும் நீளக்கம்பி.

கருது அறுக்கறது : தொ. பெ. கதிரைமட்டும் அறுவடை செய்தல்.

கருது அடிக்கற மெசினு : பெ. தானியங்களைக் கதிரிலிருந்து பிரிப்பது.

கருது அறுக்கறது : தொ. பெ. கதிரை மட்டும் அறுவடை செய்தல்.

*கருதூசி : பெ. நெசவுக்கருவி.*

*கருந்தலைப்புழு : பெ. தென்னையில் விழும் புழு.*

*கருந்தொட்டிர் : பெ. நாயக்கர் உட்பிரிவு.*

*கருநாகன் : பெ. பாம்புவகை (கிருஷ்ண சர்ப்பம்).*

*கருநொச்சி : பெ. நொச்சிவகை.*

*கருப்பட்டி : பெ. 1. தென்னையின் வெல்லம், 2. பனைவெல்லம் (வகை : தென்னங்கருப்பட்டி, பனங்கருப்பட்டி).*

*கருப்பட்டி நோவு : பெ. பார் கரிப்பூட்டை. எ-டு. கம்பு.*

*கருப்பட்டிப் பொயிலை : பெ. பனை வெல்லத்து நீரில் ஊற வைத்த புகையிலை.*

*கருப்பண்ணசாமி : பெ. காவல் தெய்வம்.*

*கருப்பாளை : பெ. பாளை மரவகை.*

*கருப்பு : பெ.1 . இறந்தவர்க்குச் செய்யும் ஈமக்கிரியை, 2.கறுப்பாடை மங்கிவிட்டால் கட்டும் சாயம், 3. சவுரி முடிக்குப் போடும் பவுடர், 4. விளையாட்டுச்சொல், 5.வேதனை 'கேட்டா மனசு கருப்பு ஆயிடும்'.*

*கருப்பு உப்பு : கடல் நுரை பாசம் ஆகிக் கிடைக்கும் உப்பு. பலகாரத்திற்குச் சுவை கொடுப்பது.*

*கருப்பு கத்தரிக்கா(ய்) : பெ. நீளக்கத்தரிக்காய்வகை.*

*கருப்புக்கயிறு : பெ. கறுப்புநிற நூல் கயிறு.*

*கருப்புக்கல் : பெ. கருங்கல்லில் ஒருவகை. ஆட்டுக்கல், உரல் முதலியன செய்யப்படுவது.*

*கருப்புக்கழித்தல் : தொ. பெ. இறந்தவரைப் புதைத்தபின் அவரது கால்பக்கத்தில் குடத்திலுள்ள மஞ்சள் நீரை ஊற்றி விட்டுக் குடத்தை உடைத்தல்.*

*கருப்புச்சட்டை சவுக்கு : பெ. மரவகை.*

*கருப்புச் சொட்டை ஆடு : பெ. இடையிடையே கறுப்பு நிற முள்ள வெள்ளை ஆடு.*

*கருப்பு செகாப்பு : பெ. செகாப்பில் ஒருவகை.*

*கருப்புட்டி குழி : பெ. காய்ச்சிய பாகை ஊற்றும் அச்சு.*

கருப்புத்தெய்வம் : பெ. இருளர்தெய்வம்.

கருப்புத்தேவம் : பெ. தேமல்வகை.

கருப்புப்பொட்டு : பெ. பொட்டுவகை.

கருப்புமணி : பெ. கழுத்தணி.

கருப்புவெல்லம் : பெ. வெல்லத்தில் ஒருவகை "காணாத நாயிக்கு கருவெல்லம் போட்டாப்பலே" (காப்பி வெல்லம், கரு வெல்லம், கடலூரர் வெல்லம்).

கருப்புளுந்து : பெ. உடைத்த கறுப்புத் தோலுடன் உள்ள உளுந்து.

கருபலா : பெ. மரவகை (சிலோன் கருபலா).

கரும்பாசி : பெ. இருளர் தாலி.

கரும்புகட்டை : பெ. கரும்பின் வேர்ப்பகுதி.

கரும்புச் சக்கரை : பெ. பழுப்புச் சர்க்கரை.

கரும்பு வெட்டப் போறது : தொ. பெ. விழாச் சடங்கு குண்டம் போட அரப்பு மரம் வெட்டச் செல்லுதல்.

கரும்பு வெட்டிக் கோடாலி : பெ.உழவுக்கருவி.

கரும்புள்ளி செம்புள்ளி : பெ. திருஷ்டிப் பானைக்குக் கரி யாலும் செம்மண்ணாலும் வைக்கும் பொட்டு.

கரும்போத்து : பெ. பறவை வகை.

கருமண்ணு : பெ. மண்வகை.

கருமணி : பெ. 1. கண்மணி, 2. தாலிவகை.

கருமத்திலெ : இடை. 1. அறுவறுப்புக் குறிப்பு, 2. சங்கடக் குறிப்பு (தூக் கருமத்திலெ).

கருமந்தி : பெ. குரங்கில் ஒருவகை.

கருமந்தீர்த்தல் : தொ.பெ. காசியில் இறந்தவர் சாம்பலைக் கரைத்தல்.

கருமயிலை : பெ. கறுப்பும் வெள்ளையும் கலந்த மாட்டுவதை (கருக்காமயிலை).

கருமருது : பெ. மரவகை.

கருமன் : பெ. பன்றி.

கருமாரிதேவி : பெ. தெய்வம்.

கருமாந்தரம் : பெ. பார். 1. கரும்பு.

கருமானக்காரி : பெ. சிக்கனக்காரி.

கருவண்டு : பெ. வண்டுவகை.

கருவப்பிலெ : கரிவேப்பிலை : பெ. (கருவாப்புளந்தழை).

கருவலூர் மாரியம்மன் : பெ. தெய்வம்.

கருவளம் : பெ. கருவாடு "காணாத நாய் கருவளத்தைக் கண்டாப்பிடி".

கருவளையல் : 1. சிறிய கறுப்பு வளையல்; கன்னிமார் சாமி கும்பிட வைப்பர்; ஒரு மாதக் குழந்தையின் கையில் போட்டுக் குளிப்பாட்டும்போது ஒவ்வொன்றாக உடைப்பர்.

கருவாட்டுச் சோறு தள்ளறது : தொ.பெ. குடும்பத்தலைவியின் குழந்தைகளில் முதற் குழந்தை இறப்பின், ஞாயிற்றுக் கிழமை செய்யும் ஈமக்கிரியைச் சடங்கு. கறுப்புசாதம், வெள்ளைசாதம் மஞ்சள் சாதம் செய்து உள்ளே கருவாட்டினை வைத்து உருண்டைபிடித்து நிலவின்மேல் வைப்பர். நிலவின் உட்பக்கம் தாய் போளை மூடியில் மண்டியிட்டுக் கைகளைப் பின்னால் கட்டிக்கொண்டு மூன்று உருண்டைகளையும் கதவிற்கு வெளியே தள்ள வேண்டும். பின், அதனைக் காகத்திற்கு இடுவர். எ-டு, பண்டாரம், செந்தலைக் கவுண்டர்.

கருவாடு : பெ. (போர்ச்சுக்கீசியம்).

கருவாப்பில்லு : பெ. புல்வகை.

கருவாகை : பெ. வாகை மரவகை.

கருவாளெ : பெ. வாழைவகை (குள்ள வாழை).

கருவிரியம்பழம் : பெ. பழவகை (வழவழத்தாம்பழம்).

கருவி விழா : பெ. ஆயுதபூஜை.

கருவுதல் : தொ.பெ. அடுத்தவனைப் பார்த்து மனம் குமுறுதல்.

கருவேம்பு : பெ. வேம்பு மரவகை.

கருவேலா : பெ. மரவகை (கருவேல்).

கரை : பெ. 1. ஓரம், 2. குடும்பம், 3. சீலை விளிம்பு.

கரைஏறுதல் : தொ.பெ. ஈடேறுதல் "ஆனெ வாலெ நம்பினா கரையேறலாம். பூனெ வாலெ நம்பினா கரையேறலாமா".

கரைச்சல் : பெ. கலக்கம் 'வயித்துலெ புளி கரைச்ச மாதிரி இருக்கு'.

கரைசலா : வி.அடை. தொல்லையாக 'உன்னோட ரொம்ப கரைசலா இருக்கு'.

கரைக்குழி : பெ. குண்டாட்டத்தில் ஒருவகை.

கரையாட்டம் : பெ. பார். ஒட்டாங்கரம்.

கரையா தின்னு போச்சு : வி.மு. செல்லரித்துவிட்டது.

கரையான் : பெ. புழுவகை "கரையான் புத்தெடுக்க கருநாகம் குடியிருக்கும்".

கரையான் எண்ணெய் : பெ. தாரிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய், கரையானை ஒழிக்கப் பயன்படுகிறது.

கரையான் விழுதல் : தொ.பெ. பயிர்நோய் (நரை விழுதல்).

கல் : பெ. 1. பாறை "எறும்பு ஊறக் கல்லும் தேயும்", 2. மைல் கல்.

கல்அடுப்பு : பெ. மூன்று பெரிய கற்களால் தற்காலிகமாக ஏற்படுத்தும் அடுப்பு.

கல்கட்டிச் சோழியர் : பெ. பள்ளர் உட்பிரிவு.

கல்கண்டு சோறு : பெ. உணவுவகை.

கல்ட்டா : பெ. வெள்ளையும் சிவப்பும் கலந்த குதிரைவகை.

கல் தட்டிருச்சி : கல் தடுக்கிவிட்டது; வி.மு.

கல்தூண் : பெ. கல்லால் ஆன தம்பம்.

கல் தேக்கு : பெ. மரவகை.

கல்நாரு : பெ. மருந்துப்பொருள்.

கல்பாசு : பெ. பிரியாணிக்குப் போடும் வாசனைப் பண்டம்.

கல்மிசம் : பெ. 1. மீன், 2. விகற்பம் 'கல்மிசமில்லாமெ பழகுவான்'.

கல்மிதி : பெ. குதிங்காலில் ஏற்படும் கெட்டியான கட்டி.

கல்மூங்க : பெ. முள்ளில்லாத சிறு மூங்கில்வகை.

கல்லக்கா : பெ. நிலக்கடலை (வகை : செம்பருப்பு அல்லது பொள்ளாச்சிப் பருப்பு, பட்டாணிப் பருப்பு).

கல்ல தூக்கிப் போட்டுட்டியே : வி.மு. காரியத்தைக் கெடுத்து விட்டாயே.

கல்லபொரி : பெ. உணவுப்பொருள் (பொரிகடலை).

கல்லரக்காடு : பெ. பாழ்நிலம்.

கல்லா : பெ. காசுப்பெட்டி.

கல்லாசப்பொட்டி : பெ. பணம் வைக்கும் இரும்புப் பெட்டி.

கல்லாட்டம் : பெ. விளையாட்டின் பெயர் (வகை : மூணாங்கல் : அஞ்சாங்கல், பத்தாங்கல்).

கல்லாசு கொடி : பெ. வெற்றிலைவகை (நாட்டு வெத்திலெ).

கல்லிச்சி : பெ. மரவகை.

கல்லீடு : பெ. கல்லடி "பூத்த மரத்துக்குத்தான் வண்டு காச்ச மரத்துக்குத்தான் கல்லீடு".

கல்லுக்கண்டு : கற்கண்டு : பெ.

கல்லுக்காலு : பெ. நீளமான கனமான ஒரே கல்.

கல்லுக்குழி : பெ. வண்ணார் துணி துவைக்கும் அறை (குட்டை).

கல்லு கணக்கா இருக்கியே செய்யறதுக்கு என்னொ : வசை.

கல்லுச்செவுறு : பெ.கற்சுவர்.

கல்லுமனசு : பெ. ஈவு இரக்கமற்ற தன்மை.

கல்லுலெ நாரு உரிக்கறு கதை : முடியாததற்கு முயற்சித்தல்.

கல்லுளி : பெ. கல்லைப் பிளக்கும் உளி.

கல்லுளி சித்தன் : பெ. சிற்பி "கல்லுளி சித்தன் போன வழி காடு மேடெல்லாம் தவிடுபொடி".

கல்லுளி மங்கன் : பெ. முட்டாள்.

கல்லேகட்டர் : பெ. கலெக்டர் (ஆங்கிலம்).

கல்வாழை : பெ.அலங்கார வாழை (காட்டு வாளெ).

கல்விரேகை : பெ. கைரேகை.

கலக்கம் : பெ. கவலை 'மனசு கலக்கமா இருக்குது'.

கலகம் : பெ. சண்டை "கலகம் பொறந்தா நியாயம் பொறக்கும்".

கலகலா : பெ. சீடை வடிவில் மைதாவில் செய்யப்பட்ட இனிப்பு.

கலங்கல் : 1. கலங்குகை 'கண்ணு கலங்கா தெரியுதே', 2. தெளி வற்ற நிலை 'தண்ணி கலங்கலா இருக்கு'.

கலச்சுக் கட்டுதல் : தொ.பெ. பந்தலில் காய்ந்த புகையிலையை இறக்கி உதறிக் கட்டுதல் (ஒதறிக்கட்டறது).

கலசக்கா(ய்)ப்பூ : பெ. மலர்வகை.

கலப்பை : பெ. ஓர் உழுவுக்கருவி (வகை : நாட்டுக்கலப்பை, இரும்புக்கலப்பை).

கலப்பைக்குச்சி : பெ.நூல் ஒன்றோடொன்று ஒட்டாமல் இருக்க உதவும் தறிக்கருவி.

கலப்பை முட்டி : பெ. கலப்பை செதுக்குவதற்குரிய மரக்கட்டை.

கலப்பை மூட்டுதல் : தொ.பெ. கலப்பை செய்தல்.

கலயம் : பெ. பார். 1. கஞ்சிக்கலையம், 2. தென்னை மரத்தில் பதநீர் இறங்க கட்டப்படும் வாய் குறுகலான பானை, 3. மாட்டுக்கு நீர் வைக்கும் தொட்டி "ஆயிரருவா குடுத்து மாடு வாங்குவா ஆறு காசு குடுத்துக் கலயம் வாங்க மாட்டான்".

கலர்த்துண்டு : பெ. ஆடைவகை.

கலாட்டா : பெ. கலகம் (அரபு).

கலாமுலான்னு : வி.அடை. ஒலிக்குறிப்பு 'கலாமுலான்னு பேசறான்',

கலாய் : பெ. ஈயம் (அரபு).

கலாய் அடுக்கு : பெ. பார். அடுக்கு செட்டு.

கலாயம் பூசறது : தொ.பெ. பாத்திரத்தின் உட்பகுதியில் ஈயம் பூசுதல்.

கல்யாண நாளு : பெ. முகூர்த்தத்திற்கு முன்தினம்.

கலுங்கு : பெ. பார். கண்மாய்.

கவக்குனு : வி. அடை. சீக்கிரமாக 'கலக்குனு வா'.

கவக்கோலு : பெ. 1. கழி திருவும்போது பானையைத் தாங்கும் ஙலஙு வடிவத் தாங்கி "கவெயால் அடிப்பட்டவனுக்கு ரண்டடி" (கவுட்டி, கவை).

கவண் : பெ. கல்லெறியுங் கருவி.

கவண்கல் : பெ. கவணில் வைத்து எறியுங் கல்.

கவண்டமுட்டாளு : பெ.கவுண்டர் வீட்டைச் சேர்ந்தவர்கள்.

கவண்டன் : பெ. ஒரு சாதி "காட்டெ வித்து கள் குடிச்சாலும் கவுடண்டன் கவுண்டனெ".

கவணைக்கவுறு : பெ. பார். கவண்.

கவலை : பெ. 1.ஏற்றம், 2. கிளைகிளையாகப் பிரிதல்.

கவலை ஓட்டுது : வி.மு. 1. ஏற்றம் இரைத்தல், 2. சளி வரும் போது உறிஞ்சுதல். அதாவது சளி உள்ளும் வெளியும் செல்வதால் கேலியாகச் சொல்வது.

கவலைப்பட்டுக்காதே : எ.ம.வி. கவலைப்படாதே.

கவலைவண்டி : பெ. பார்.1. கவலை.

கவனர் : கவர்னர் : பெ. ஆளுநர் (ஆங்கிலம்).

கவாடி : பெ. இருளர் யானை.

கவாத்துக்கத்தி : பெ. பாக்கு சீவும் கத்தி;

கவாளம் : பெ. பந்தம் தூக்கி வருபவர் வாயில் வாழைப்பழம் கொடுக்கப்படுதல் "அஞ்சுபடிசோறு ஒரு கவாளம் பத்து வீட்டுச்சண்டைன்னா ஒரே கும்மாளம்".

கவிச்சி : பெ. புலால் நாற்றம்.

கவுச்சா : பெ. பார். ஆப்பாரம்.

கவுடு : பெ. கிளை.

கவுதாரி : பெ. பறவை வகை.

கவுதாரிக்கூடு : பெ. கவுதாரி பதித்ததுபோல் நிலத்தில் கட்டிய கூடு.

கவுந்தப்பாடி உருண்டை : பெ. பழுப்பு நிறமுள்ள உருண்டை வெல்லம்.

கவுந்தப்பாடி சக்கரை : பெ. பழுப்பு நிறமுள்ள சர்க்கரை.

கவுளி : பெ. 1. தென்னை மரத்தில் ஒருவகை, 2. பல்லி, 3. வெற்றிலைக் கட்டு.

கவுளி பாத்திரம் : பெ. 1. சங்கு, 2. பார். 1 கவுளி.

கவுன் : பெ. சிறுமிகள் உடை (ஆங்கிலம்).

கவுறு : கயிற் : பெ.

கவைய காளியம்மன் : பெ. தெய்வம்.

கழட்டறா(ன்) : இடை. அவனால் என்னை ஒன்றும் செய்ய முடியாது எனுங் குறிப்பு 'ஆமா அவந்தா கழட்டறா போ'.

கழட்டி : இடை. பார். உஸ்க்கி.

கழணி : கழுநீர் : பெ. "கழனியிலே பொரண்டா கழுதெக்கி அதுவே கைலாயம்".

கழப்பக் கெழங்கு : பெ. கிழங்குவகை.

கழலை : பெ. 1. கால், இடுப்பு, கழுத்து முதலியவற்றிலுள்ள ம்ாமிச கிரந்தி பெருத்துத் தோன்றும் நோய், 2. பெண்களின் மார்பில் ஏற்படும் கட்டி (கடலை, சிலந்தி).

கழிக்கோலு : பெ.1. பார். கடமொளை, 2. கழிதிருவ உதவும் கோல்.

கழிச்சுக் கட்டுதல் : கழித்துக்கட்டுதல் : தொ. பெ. 1. இகழ்ந்து ஒதுக்குதல் 'உன்னெ கழிச்சுக் கட்டுனாத்தா எனக்கு நிம்மதி' 2. போக்குச் சொல்லி நெகிழவிடுதல்.

கழிசடை : பெ. இழிந்த-வன்-வள்-து.

கழிஞ்சு போச்சு : வி.மு. கருச்சிதைவு.

கழிப்பாக்கு : பெ. பாக்குவகை.

கழிமடை : பெ. தலைமடையிலுள்ள அதிகப்படி நீரைப் பொது வாய்க்காலுக்குச் செலுத்துவது.

கழுக்கு மொழுக்குனு : வி.அடை. செழுமைக் குறிப்பு 'கொழந்தே கழுக்கு மொழுக்குனு இருக்கு'.

கழுத்தறுப்பு : பெ. துரோகம் 'கழத்தறுத்துட்டியே', 2. பெருந்துன்பம். கழுத்திலெ துண்டப்போட்டு வாங்கிடுவே : கடன் வசூலிக்க மிரட்டும் வார்த்தை.

கழுத்துக்கட்டி : பெ. மாட்டின் கழுத்தில் கட்டும் கயிர்.

கழுத்துச் சொட்டை ஆடு : பெ. உடல் முழுவதும் ஒரு நிறமும் கழுத்து ஒரு நிறமும் உள்ள ஆடு.

கழுத்துப்பட்டி : பெ. டை - ஆடைவகை.

கழுத்துப் பதக்கம் : பெ. கழுத்தணி.

கழுத்துப் பிடிக்குக் கேட்டே(ன்) : அதிகபட்சமான விலைக்குக் கேட்டேன்.

கழுத்து மேலே நின்னு வாங்கிடுவே ஜாக்கிரதை : வசை.

கழுத்துலெ கட்டிட்டாங்க : கழுத்தில் கட்டிவிட்டார்கள் : வி.மு. வற்புறுத்திப் பொறுப்பாளியாக்குதல்.

கழுதெ முண்டெ : பெ. வசை.

கழுதைஆட்டம் : பெ. 1. ஒருவகைச் சீட்டாட்டம், 2. ஒருவகை விளையாட்டு.

கழுதைக்காரன் : பெ. சுமை தூக்குபவன்.

கழுதை சத்தம் : பெ. குண்டி திருகிக் கதவைத் திறந்து மூடும் போது வரும் சத்தம் ; 'ஹேற ஹேற' இச் சத்தம் வந்தால் குடும்பத்திற்கு ஆகுாது என்பது நம்பிக்கை.

கழுதை நரி : பெ. நரிவகை.

கழுதை பிரதேசம் போனது போல் : நினைத்தபடி ஊர் சுற்று பவனைக் குறிக்கும் குறிப்பு.

கழுவற மீன்லெ நழுவற மீனு : பெ. சுலபமாக எதிலும் தப்பித் துக் கொள்பவன்.

கழுவாடிட்டு : கழுகு ஆடிக்கொண்டு : வி.எ.

கழுவாடு : பெ. பயனற்றவை.

கழுவு : பெ. கழுகு.

கழுவு : வி.எ. கழிய 'நாலு நாள் கழுவு ஆகணும்'.

கழை : பெ. தடி, "கழைக்கு மேல ஆடினாலும் எறங்கித்தான் பிச்செ கேக்கணும்".

கழைக்கூத்தாடி : பெ. கழையில் நின்றுகூத்து ஆடுவோன்.

கள்ளச் சாராயம் : பெ.முறைகேடான முறையில் தயாரிக்கும் சாராயம்.

கள்ளச் சிரிப்பு : பெ. நயவஞ்சக் சிரிப்பு (நமட்டுச் சிரிப்பு).

கள்ளி : பெ. 1 திருடி "தன்ற ஊட்டுக்கள்ளி அசலூட்டுக் காரியெ நம்பமாட்டாள்", 2. செடிவகை.

கள்ளிப்பழம் : பெ. கள்ளிச்செடியின் பழம்.

கள்ளிப்பூச்சி : பெ. பட்டைக்கள்ளியில் நோய் ஏற்படுத்தும் பூச்சி.

கள்ளிப்பூச்சி நோவு : பெ. பயிர் நோய். எ-டு. நெல்.

கள்ளி வேலி : வேலிவகை.

கள்ளுமொடா : பெ. இறக்கிய கள்ளை ஊற்றி வைக்கும் பானை.

களகொத்து : களைக்கொத்து : பெ.

களத்துப் பிச்சை : பெ. களத்திற் கொடுக்கும் தானிய தருமம்.

களத்துமேடு : பெ. அறுவடை செய்த தானியங்களைக் குவிக்கும் இடம் (களம்).

களப்பலி : பெ. அங்கத்தில் சிறிது அறுத்துப் போர்க்களத்தில் கொடுப்பது

களப்பு : களைப்பு : பெ.

களபுடுங்கறெ : களை பிடுங்குகின்றேன் : வி.மு. (களவெட்டறெ, களஎடுக்கறெ, களெபண்ணறெ).

களம் தொளித்தல் : தொ. பெ. களத்தின் தரையைக் கெட்டியான சாணிப்பால் கொண்டு துடைப்பத்தால் மெழுகுதல்.

களரி : பெ. 1. நாடகம், கூத்து முதலியவன நடைபேறும் இடம், 2. நாடகம், கூத்து முதலியன, ‘களறி நடக்குதுன்னு கால்நடையாஓடி வந்தோ’

களரு : களர் : பெ.1. உவர் நிலம், 2. சீட்டாட்டச் சீட்டிலுள்ள நான்கு குறிகளுள் ஒன்று, 3. குதிரையின்வகை.

களார் பண்ணுதல் : தொ. பெ. கூட்டாக உள்ள சொத்தைப் பிரித்துப் கொள்ளுதல்.

களி மண்ணு : பெ. மண்வகை.

களுந்து : பெ. பூண்.

களுக்கிட்டா : கரெக்டா : வி. அடை. சரியாக (ஆங்கிலம்).

களும்பு : பெ. கருப்பு மசி ‘வண்டிக் களும்பு’

களை : பெ. 1.பயிர் வளர்வதற்குத் தடையாக முளைக்கும் பூடு “களெ புடுங்காத பயிர் கால் பயிர்”, 2. ‘பொண்ணு களையா இருக்கு’,

களைகுத்தி : பெ. களை எடுத்தபின் பூமியைக் கிளரிவிடப் பயன்படும் மண்வெட்டிவகை.

களைப்புல்லு : பெ. பயிருக்குக் களையாக முளைக்கும் புல் வகைகள்.

களைவெட்டுத் தண்ணி : பெ. இரண்டாம் களை வெட்டிய பின்விடும் தண்ணீர்.

கற்பூரம் கொளுத்தரது : தொ. பெ. தீபக்கரண்டி.

கற்பூரமரம் : பெ. (தைல மரம், ஆர். எஸ். பதிமரம்).

கறங்கு : பெ. காற்றாடி.

கறங்கு ஆடறது : தொ.பெ. ஓலை நறுக்குகளைக் காற்றில் சுற்றச் செய்யும் விளையாட்டு.

கறவை : பெ. பாற்பசு.

கறவை வாகனங்கள் : பெ. ஆடு, மாடு ஆகியன.

கறி : பெ. மாமிசம் (கறிவகை : இரத்தக்குழல், ஈரலு, எலும்புக் கறி, கழுத்துக்கறி, கிட்னி, கைம்மா, கொடல்கறி, கொத்துக்கறி, கொழுப்பு, சுத்தக் கொழுப்பு, சுவரொட்டி, தலக்கறி, தொடைக்கறி, நெஞ்சுக்கறி, நுரையீரல், பொடிக் கறி, இரத்தம், லைன்கறி, விட்டம் (முதுகுப் பாகம்)).

கறிக்கோழி : பெ. சாப்பிடுவதற்கான மட்டும் பண்ணையில் வளர்க்கப்படும் கோழி.

கறிநோம்பி : தைமாதம் முதல்தேதி நாயக்கரால் கொண்டா டப்படும் பொங்கல் பண்டிகை அன்று பொம்மக்கா விற்குக் கறி படைப்பர்.

கறிப்பலா : பெ. மரவகை.

கறிபீன்சு : பெ. பீன்ஸில் ஒருவகை.

கறிமசால் : பெ. மிளகாய், கொத்தமல்லி, வாசனைப் பொருள் கள் முதலியன கலந்த கலவை.

கறுக்காவா(ள்) : பெ. தட்டு, தாள் முதலியன அறுக்குங் கருவி.

கறுப்புச் சட்டை : பெ. கறுப்பு நிறமுள்ள குதிரைவகை.

கறால் : பெ. கண்டிப்பு.

கன்சுவேட்டர் : பெ. வனஅதிகாரி (ஆங்கிலம்).

கன்மாதிரி : வி. அடை. 1. சரியாக, 2. விரைவாக 'கன் மாதிரி செய்வான்' (கன் - ஆங்கிலம்).

கன்னங்கறேலுனு : வி. அடை. மிகக் கறுப்பாய் 'கன்னங் கறேலுனு இருக்கா',

கன்னுத்தோலு : பெ. கன்றுக்குட்டியின் தோல்.

கன்னிக்கயிறு : பெ. உழும்போது நுகத்தடியோடு மாட்டைப் பிணைக்கும் கயிறு (கன்னித்தும்பு).

கன்னிக்காப்பு : பெ. முதன்முறை பறிக்கும் திராட்சைப் பழம் ; ஆண்டிற் மூன்று முறை பறிப்பர்.

கன்னிகவுத்து முடுச்சு : பெ. ஒருவகை முடிப்பு.

கன்னி கழிதல் : தொ. பெ. மணம்புரியப்பெறுதல் 'கன்னி கழியாமெ போயிட்டா'

கன்னி சாமான் : பெ. பூ. நோன்பின்போது பெண்கள் ஆற்றுக்கு எடுத்துச் செல்லும் பொரி,. கரும்பு , முறுக்கு முதலியன அடங்கிய கூடை.

கன்னித்தீட்டு : பெ. பூப்பிற்குரிய முதல் தீட்டு.

கன்னிமார்கோயில் : பெ. ஓர் ஆலயம்.

கன்னிமூலை : பெ. தென்மேற்கு மூலை.

கன்னி வைக்கறது : தொ. பெ. 1. ஓணான், குருவி முதலியவைகளுக்குச் சிறுவர்கள் கழுத்தில் முடிச்சு இடுதல் (சுருக்குப் போடறது), 2. பறவைக்குக் குறி வைத்தல்.

கன்னான் : பெ. பார். 1. ஆசாரி, 2. திருடன் "கன்னாவந்து மூணு நாள் ஆச்சு கதவு முக்கரணம் பாயுது" (2-கள்ளன், களவாளிப்பய).

கன்னாபின்னமா : வி.அடை. ஒழுங்கின்மை 'துணி கன்னாபின்னமாயிடுச்சு'.

கன்னாபின்னா : வி.அடை. பொருளின்றிக் குழறுதற் குறிப்பு.

கன்னு : கன்று : பெ. "எனங்கன்னு பயமறியாது "

கன்னுக்குட்டி : பெட் மாட்டு வியாபாரத்தில் ஐந்து ரூபாயைக் குறிக்கும் புதிதாக உருவாகிய சொல்; பழைய சொல்.

கன்னு வீசிருச்சு : வி.மு. மாட்டின் கருச்சிதைவு (கன்னுக்குட்டியே தள்ளிருச்சு).

கனகாம்பரக் கலர் : பெ. நிறவகை.

கனகாம்பரம் : பெ. மலர்வகை.

கனதனவான் : பெ. வசதிபடைத்த பெரியோர்.

கனங்கால் : பெ. முழங்காலிற்குக் கீழும் பாதத்திற்கு மேலும் உள்ள காற்பகுதி.

கன திமிறு : பெ. வசை.

கனம்பில் : பெ. இளம் பயிரை மாடு தின்னும்; காய்ந்தபின் கூரை வேய்வர்.

கனம் : பெ. பாரம்.

கனவானர் கூட்டம் : பெ. ஓர். இனம்.

கனவுலெகூட நெனச்சிராதீங்க. நடக்க முடியாத காரியம்.

கனிக்கெழங்கு : பெ. காடர் கிழங்குவகை.

கஜானா : பெ. பார். கல்லாசுப் பெட்டி.(உருது).

கஜீரா : பெ. அரிசி மாவில் செய்யும் இனிப்புவகை.

கஷ்டகாலம் : பெ. 1. துரதிருஷ்ட காலம், 2. பஞ்சகாலம்.

## கா

காக்கா : பெ. காகம் (காக்காயி) "ஓநாய்கிட்டேயிருந்து ஓதறிப் புடுங்கி காக்கா கிட்டே கடிச்சுப் புடுங்கிச் சேத்தறது".

காக்கா உளுகுது : வி.மு. கதிர்களிலுள்ள மணிகளைக் சாப்பிடக்காகம் கதிரின் மேல் உட்காருதல்.

காக்காக்கடி : பெ. எச்சில் ஆகாமல் துணியில் பொருளை வைத்துக் கடித்துக் குழந்தைகள் பங்கிட்டுக் கொள் ளுதல்.

காக்காக் கூடு : பெ. காகம் குஞ்சு பொரிக்கக் கட்டிய முட்கூடு.

காக்காக் குருவிஅடங்கற நேரம் : பெ. மாலை ஆறுமணி அளவு.

காக்காக் குருவி விளையாட்டு : பெ. விளையாட்டின் பெயர்.

காக்காக் குளிப்பு : பெ. அரைகுறைக் குளியல்.

காக்காசுக்கு ஆகமாட்டான் : பொறுப்பற்றவன்.

காக்கா தூக்கிட்டுப் போயிடுச்சு : 1. கோழிக்குஞ்சைக் காகம் எடுத்துச் செல்லுதல், 2. சிறு குழந்தைகளை ஏமாற்றப் பயன்படுத்தும் வார்த்தை.

காக்கா(ய்). பொன் : பெ. பொன் போன்ற ஒருவகை வர் ணத்தகடு (மைக்கா).

காக்கா முள்ளுச்செடி : பெ. காகம் கூடு கட்ட பயன்படுத்தும் தடித்த முள்.

காக்கா மூக்காச் சீமை : பெ. அப்பாவிகள் இருக்கும் இடம் எனும் பொருளைக் குறிக்கும் கேலிச்சொல். 'இவ என்னடா சுத்த காக்கா மூக்காச் சீமையிலிருந்து வந்தவனாட்ட ஆடறா(ன்)'.

காக்காய்க்கு குள்ளநரிக்குக் கலியாணம் : வெயிலும் மழையும் ஒரே சமயம் இருக்கும் போது கூறுதல். இந்நிலை நீடிக்காது எனும் பொருள்.

காக்காய்க்குச் சோறு வைக்கறது : தொ.பெ. 1. ஈமக்கிரியை அன்று நாவிதன் புதுப்பானையில் உணவு சமைத்துக் காகத்திற்கு வைத்தல்.

எ-டு : கவுண்டர், பண்டாரம், உடையார், 2. விரதம் இருப்பவர்கள் முதலில் காகத்திற்கு உணவு வைத்தல்.

காக்கி : பெ. பழுப்புநிறக் கெட்டித்துணி (பெர்சியன்).

காகங்கட்டுது : வி.மு. காரியமாகச் செல்லும்போது காகம் குறிக்கிடுதல்.

காகம் எடுத்தல் : தொ. பெ. சவங்குழிக்குப் படைக்கப்பட்ட உணவைக்காகம் உடனே எடுத்தால் இறந்தவர் நிறைவாக உயிர்விட்டுள்ளார் என்று பொருள்.

காகிதக்கூடை : பெ. காகிதத்தை இடித்துச் செய்யப்பட்ட கூடைகள்.

காகித ரோசா : பெ. அலங்காரச் செடி.

காங்க : காண : வி.எ 'காங்க வருவதின்னா நேரமே இல்லே'.

காங்கலெ : வி.மு. பார்க்கவில்லை 'நாங் காங்கலெ'.

காங்காட்டி : காணாவிட்டால் : வி.எ. 'பையி காங்காட்டி தேடாதே வுட்டுடு'.

காங்கு : பெ. உஷ்ணம்.

காச்சி : காட்சி : பெ. 'மொதக்காச்சி போலாமா'.

காச்சி : வி.ஏ. காய வைத்து.

காச்சு : காய வை : ஏ.வி. 'காப்பி காச்சு'.

காச்சு காச்சுனு காச்சறான் : வி.மு. துன்புறுத்துதற் குறிப்பு (வாட்டு வாட்டுனு வாட்டுறா).

காச்சு மூச்சுனு : காச்சு மூச்செனல் : வி. அடை. ஓர் ஒலிக்குறிப்பு 'காச்சு மூச்சுனு கத்தாததீங்கோ'.

காச்சுருச்சு : வி.மு. கொப்பளித்தல் 'கை காச்சுருக்கு'.

காசித்தும்பை : பெ. தும்பைவகை (அடுக்குத் தும்பை).

காசியாத்திரை பயிரா கள் : பெ. ஊர் ஊராகச் சென்று கதைப் பாடல்களைப் பாடி மக்களிடம் பொருள் பெறு பவர்கள்.

காசியாத்திரை போறது : தொ. பெ. நாயக்கர் திருமணச் சடங்கு.

காசு : பெ. 1.பைசா "ஒருகாசு பேணின் இருகாசு தேறும்", 2. நாணயம்.

காசு கட்டறது (கட்டுதல்) : தொ. பெ. பணம் வைத்துச் சூதா டுதல்.

காசுப்பொட்டி : பெ. காசிடும் சிறிய பெட்டி.

காசுமாலை : பெ. 1. தங்கக் காசுகளால் ஆன கழுத்தணி, 2. பழைய நாணயங்களால் ஆன மல்லிகார்சுன சாமிக்குக் கழுத்திலிடும் மாலை.

காசு வளையம் : பெ. ஒருவகைச் சூதாட்டத்தின் பெயர்.

காஞ்ச மட்டை : பெ. 1. காய்ந்த தென்னை மட்டை, 2. தேங்காயின் காய்ந்த மேற்பகுதி.

காஞ்சுட்டு : காய்ந்து கொண்டு : வி.எ. 'சோறில்லாமெ காஞ்சுட்டு கெடக்கறா(ன்)

காட்டம் : பெ. 1. உள்சினம், சூது 'சுத்தக் காட்டம் புடுச்சவன்'',

2. உறைப்பு 'சாறு காட்டமா இருக்கு' (தெலுங்கு).

காட்டாடு : பெ. காட்டில் இருக்கும் ஆட்டுவகை.

காட்டாமணக்கு : பெ. விஷச் செடிவகை.

காட்டாறு : பெ. அடை மழை பெய்வதால் பெருகி ஓடும் நீர்.

காட்டான் : பெ. 1. அப்பாவி, 2. நாகரிகமற்றவன்.

காட்டானெ : காட்டு யானை : பெ.

காட்டிக் குடுக்கறது : காட்டிக் கொடுத்தல் : தொ. பெ. தன் பக்கத்து ஆளை எதிரியின் வயமாக்குதல்.

காட்டு : ஏ.வி. குடிக்க வை 'மாட்டுக்குத் தண்ணி காட்டு'.

காட்டு அவரெ : பெ. அவரைவகை (காட்டு மொச்சை, வகை : கருமொச்சை, வெள்ள மொச்சே).

காட்டு எலந்தை : பெ. புதர்போல் உள்ள செடிவகை.

காட்டு எலுமிச்சை : பெ. விறகாகப் பயன்படும் மரம்.

காட்டுக் கம்பு : பெ. ஒருவகைக் கம்பு.

காட்டுக் கருவேலா : பெ. மரவகை

காட்டுக்காரர் : பெ. கிராமத்தலைவர் அல்லது நிலச் சொந்தக் காரர்.

காட்டுக்கிளுவை : பெ. மரவகை.

காட்டுக்கொட்டை : பெ. காட்டாமணக்கின் கொட்டை.

காட்டுக்கொம்பு : பெ. முதுகர் பழங்குடிகள் கூரை கட்ட உதவுவது.

காட்டுக்கொய்யா : பெ. விறகாகப் பயன்படும் மரம்.

காட்டுக்கொள்ளு : பெ. காட்டில் பயிர் செய்யப்படும் கொள்ளு.

காட்டுக்கோழி : பெ. காட்டில் வாழும் கோழிவகை.

காட்டுக் கருவேப்பிலெ : பெ. விறகிற்கான மரம்.

காட்டுக்கொலுமிச்சை : பெ. விறகிற்கான மரம்.

காட்டுச் செண்பகம் : பெ. மலர்வகை.

காட்டுத்தொவரை : பெ. துவரை வகை.

காட்டுப்பீ : பெ. குழந்தை பிறந்தவுடன் கழிக்கும் மலம்.

காட்டுப் பொகையிலை : பெ. காடுகளில் முளைக்கும் பயனற்ற புகையிலை.

காட்டுப்பின்னை : பெ. பின்னை மரவகை.

காட்டுப்பெரம்பு : பெ. மரவகை (ரிட்ஸ் மரம்).

காட்டுமல்லி (கைச்) செடி : பெ. மல்லிகை வகை.

காட்டுமாங்க : பெ. மாம்பழ வகை.

காட்டு வேட்டுவர் : பெ. வேட்டுவர் உட்பிரிவு.

காட்டெருமை : பெ. எருமை இனம்.

காட்டேரி : பெ. 1. ஒரு துர்தேவதை, இது அடித்தால் அந்த இடத்திலேயே இறந்துவிடுவர் என நம்புகின்றனர், 2. இருளர் தெய்வம்.

காட்டை பொளந்து வுட்டு காடு ஒரு ஓரமா மேடா இருக்குது : சரியாக உழவு ஓட்டப்படாத இடத்தைச் சொல்வது.

காட(டை) கூட்டம் : பெ. ஓர் இனம்.

காடர் : பெ. பழங்குடியினர்.

காடா : பெ. ஒரு ரகத்துணி.

காடாட்ட செதறிக் கெடக்கு : வி.மு. காடுபோல் சிதறிக் கிடக்கிறது; ஒழுங்கற்று இருத்தல்.

காடாம்பாடி செல்லாண்டி : பெ. தெய்வம்.

காடி : பெ. 1. ஊறுகாய் கெடாமல் இருக்க ஊற்றுவது, 2. கட்டுத்தறியில் தீனி வெளியே வராமல் இருக்க, கல்லால் ஏற்படுத்தப்பட்ட அமைப்பு. 3. கலயம் "காடிக் கஞ்சியை மூடிக் குடி, கந்தத் துணியை பொறஞ்சுகட்டு".

காடி எழப்புளி : பெ. தச்சுக்கருவி.

காடித்தண்ணீ(ர்) : பெ. ஊர வைத்தத் தண்ணீர்.

காடு : பெ. புன்செய் நிலம். "காட்டு வெள்ளாமயெயும் வவுத்துப் புள்ளெயெயும் எப்படி மறெக்கறது?"

காடு கண்ணிக்குப் போறது தானே? : கூட்டுச் சொல்.

காடு சொட்டையாப் போச்சு : வி.மு. பயிர் முளைத்து வரும் போது பயிர்கள் பட்டுப்போய் இடைவெளி மிகு மாயின் கூறுதல்.

காடு பாத்த கொம்பு : பெ. மாட்டுக் கொம்பில் ஒருவகை (விரிகொம்பு).

காடு வெதைத்தல் : தொ. பெ. சக்கிலியர் திருமணச் சடங்கு. மாப்பிள்ளை காட்டிற்குச் சென்று சதுரமாகக் கோடிட்டு உழவு ஓட்டிக் (அறிவாளால் கோடு கிழித்து) கம்பு விதைத்துப் பூசையிட்டுப் பின் கூடையை வீட்டிலுள்ள மனைவியிடம் கொடுக்க, அவள் நீரை அவனுக்குக் கொடுத்தல்.

காடெ குருவி : காடை : பெ.

காடைசல்லை : பெ. சமுக்காளம் நெய்யும் கருவி.

காண்டாமிருக வண்டு : பெ. வண்டுவகை.

காண்டாவிருகம் : காண்டாமிருகம் : பெ.

காணலெ : காணவில்லை : வி.மு. பற்றவில்லை 'சோறு எல்லாருக்கு காணலெ'.

காணாக்கடி : பெ. இன்னது கடித்தது என்று அறிய முடியாத விஷக்கடி.

காணாக்கடித்தடிப்பு : பெ. சிறுபாம்பு என்ற பாம்புவகையைச் சேர்ந்த புழு கடித்ததால் ஏற்படும் தடிப்பு.

காணாட்டி : காணாவிட்டால் : வி.எ.

காணி : பெ. 1. நிலம் "காணிச் சோம்பல் கோணிக்கேடு", 2. பரம்பரை உரிமை.

காணிக்கல் : பெ. பார். எல்லைக்கல் "காணிக்கல்லா அசையாம இருக்க".

காணிக்கை : பெ. இறைவனுக்குச் சமர்ப்பிக்கும் பொருள்.

காணியாழ்வார் : பெ. ஓர் இனம்.

காணோம் : வி.மு. 1. காணவில்லை, 2. தெரியவில்லை 'செய்யற மாதிரி காணோம்'.

காத்தாடி : பெ. 1. காற்றில் பறக்கவிடும் பட்டம், 2. மின்விசிறி.

காத்தாடிச் செவுறு : பெ. திண்ணைக்கு வைக்கப்படும் தடுப்புச் சுவர்.

காத்தாடிப் பயிறு : பெ. காற்றினால் அசையுமளவு வளர்ந்த பயிர்.

காத்தாடுது : வி.மு. தொழில் தேக்கம்.

காத்தாப் பறக்கறான் : காற்றாய்ப் பறக்கிறான் : வி.மு. 1. சுறுசுறுப்பாய் தொழில் செய்தல், 2. விரைந்தோடுதல்.

காத்தாப்புடுச்சு : காலையில் இருந்து : வி.எ.

காத்திகே : கார்த்திகை : பெ.

காத்து : பெ. 1. பேய் 'காத்து அண்டியிருக்கும்', 2. வாயு "எனம் எனத்தோட எச்சக்கலெ காத்தோட".

காத்து : வி.எ. பொறுத்து "இலவு காத்த கிளிபோல".

காத்து எடுக்கலெ : வி.மு. தானியம் தூற்றும்போது காற்று குறைவாக இருப்பின் கூறுதல் 'காத்து எடுக்கலெ நின்னு போடு'.

காத்துகிட்டு : காத்துக் கொண்டு : வி.எ. 'எங்கியும் போகாமெ வீட்டெ காத்துகிட்டு கெட', 'எத்தன நேரமா உனக் காகக் காத்துகிட்டு இருக்கறது'.

காத்து அவம் பக்கம் அடிக்குது : செயல் எதிராளிக்குச் சாதக மாதல்.

காத்து நம்ம பக்கம் அடிக்குது : செயல் தமக்கே சாதகமாக அமைதல்.

காத்துவிடறது : தொ. பெ. தூற்றுதல்.

காத்தோட்டம் : பெ. காற்றோட்டம்.

காதம் : பெ. சுமார் பத்து மைல் அளவு; ஏழரை நாழிகை வழி போனானாம்

"காக்காய்க்குச் சோறு வக்க காதவழி போனானாம்", 2. தூரம் 'காதத்துக்குப் பெண் கொடுத்தேன்'.

காதர் : பெ. மாம்பழவகை.

காது அத்து வுடறது : காது அற்று விடுதல் : தொ. பெ. பாத்திக்குப் பாத்தி தண்ணீர் செல்லப் பாரில் வழி செய்தல்.

காது அறுத்த ஆடு : பெ. 1. நீளமாகக் காது இருப்பின் அறுக்கப்பட்ட ஆடு, 2. பாம்பு கடித்திருக்குமா எனச் சந்தேகப்பட்டு இரத்தத்தைச் சோதிக்க, காது அறுக்கப் பட்ட ஆடு.

காதுகாதுன்னவேது வேதுங்கறா(ன்) : தவறாகப் புரிந்து கொள் பவனைக் குறித்தல்.

காதுநோண்டி : பெ. காதில் அழுக்கெடுக்கும் கருவி.

காது நோவு : பெ. கதிரைத் தாக்கும் நோய்.

காதுப்பலகை : பெ. ஏற்றம் இறைக்குங் கருவி.

காதுப்பொன் : பெ. மூன்று வளையங்கள் உள்ள காதணி.

காதுலே பூ வச்சவனா : ஏமாளியா எனுங் குறிப்பு.

காதோட காது வச்ச மாதிரி : வி. அடை. இரகசியமாக.

காதோலை : பெ. காதணி "காதோலைக்கு கதியெக் காணோ(ம்) காலு கொலுசுக்கு அழுகுது", 2. பெரிய கம்மல் வகை. ஓட்டைப் பெரிதாக உள்ள கம்பி போன்ற இணைப்பு இருக்கும்.

காதோலை கருகுமணி : பெ. வட்டமான சிறிய பனை ஓலையும் சிறிய கறுப்பு வளையலும்; கன்னிமார் வழிபாட்டிற் குரியது (காதோலை கரும்பாசி, காதோலை கருப்பு வளையல்).

காந்திக்கணக்கு : பெ. கொடுத்த பொருள் திரும்ப வராது எனும் குறிப்பு. 1. 'அவனுக்கா குடுத்தே அது காந்தி கணக்குத்தா' (கோவிந்தா, நாமம்).

காந்திட்டு : வி.எ. பொறாமையுடன் வயிறெறிந்து கூறுதல் 'அவனுக்குனா பணம் எப்புடி சேருது'.

காந்துது : வி.மு. 1. உடம்பில் உஷ்ணத்தால் எரிச்சலுண்டாதல், 2. மனங்கொதித்தல் 'அவ(ள்) மேலே காந்திட்டு கெடக் கறா(ள்)'.

காப்பணம் : பெ. இருபத்தி ஐந்து பைசா "செத்தாடு காப்பணம் செமந்த கூலி முக்காப் பணம்".

காப்பறா : பெ. வீண் பயம், பதட்டம் 'காப்பறாப் படுத்தாதே'. (இந்துஸ்தானி).

காப்பி : பெ. பாணப் பயிர் (ஆங்கிலம்).

காப்பித் தவளை : பெ. பாத்திரவகை.

காப்பி வடி : பெ. தேநீர் வடிக்கும் சல்லடை.

காப்பி வெக்கறது : காப்பி வைப்பது தானே : வி.மு. 'மணி நாலாச்சே காப்பி வெக்கறது'.

காப்பு : பெ. 1. கடகம், 2. கையிலும் காலிலும் குத்தப்படும் பச்சையின் வடிவம்.

காப்புக்கு வந்துருச்சு : வி.மு. பூ காய்க்க ஆரம்பித்துவிட்டது.

காப்புகட்டுதல் : தொ.பெ. 1. கோவிலில் திருவிழாத் தொடங்குதல்.

2. புது வீடுகளுக்குச் சொருகுதல் "வெடியக் குடி யெழுப்பி வேப்பிலெயெ காப்பு கட்(டி)னாங்களாம்",

3. வேப்பம் இலை, பூலப்பூ, ஆவாரம்பூ இவற்றை மார்கழி கடைசி நாள் வீடுகளில் சொருகுதல்.

காப்பு காச்சிருச்சு : காப்பு காய்த்துவிட்டது. வி.மு. கொப்பளித்த இடம் மரத்துப் போதல் "தகப்பன் குதிரைலே சவாரி செஞ்சா மகன் தொடே காப்பு காக்காது".

காப்புத்தடை : பெ. உற்சவக் காப்பு கட்டுதலால் நிகழும் பிர யாணத்தடை வேறு ஊர்களுக்குப் போனாலும் தங்காமல் திரும்பிவிட வேண்டும்.

காப்பெறக்கி தண்ணி வாத்தல் : காப்பு இறக்கித் தண்ணீர் குளித்தல் : தொ. பெ. திருமணச் சடங்கு. எ-டு. கவுண் டர், பண்டாரம்.

காபித்தூள்கலர் : காப்பித்தூள் கலர் : பெ. நிறவகை (காபிக்கலர்).

காம்பதுண்டா : காண முடியுமா : வி.மு.

காம்பமின்னு : வி.எ. 1. காண்பேன் என்று 'நாங் காம்பமின்னு கண்டனா'.

2. காண்போம் என்று 'நாம்ப காம்பமின்னு நெனக் கவே இல்லெ'.

காம்பு : பெ. 1. மாட்டின் மடியிலுள்ள பால் வெளியேறும் பகுதி, 2. மிளகாய், கத்தரி முதலியவற்றின் பின்பகுதி.

காம்பு சொரந்திருக்கு : வி.மு. மாடு கன்று ஈனுவதற்கு, இரண்டு அல்லது மூன்று நாளுக்கு முன்னுள்ள நிலை (மடி செரந்திருக்கு).

காமன் பண்டிகை : பெ. திருவிழா.

காமாட்சி வெளக்கு : பெ. விளக்குவகை.

காமாட்டி : பெ. 1. மூடன், 2. வசை 'காமாட்டிப் பய' (மராத்தி).

காமாட்டித் தாலி அறுத்தல் : தொ. பெ. பண்டாரச்சாதியின் சாவுச்சடங்கு. கணவன் இறந்த அன்று விடியலில் உள் கழுத்துச் சரடை அறுத்தல்.

காமா சோமா : இடை : மனமின்றி ஒப்பேத்துதல் 'காமா சோமான்னு பண்ணாதே'.

காமிக்கறே : காட்டுகின்றேன் : வி.மு. புத்தி புகட்டுகின்றேன் 'அவ்வளவு தூரத்துக்கு வந்துட்டியா உனக்கு காமிக் கிறே இரு'.

காய் : பெ. 1. ஆடுதற்குரிய காய், 2. பொரியல் 'என்ன காய் பண்ணியிருக்கே', 3. முதிர்ந்த பழுக்காத மரஞ்செடிகளின் பலன்.

காய் அடிக்கறது : காய் அடித்தல் : தொ.பெ. பார். ஓடையடிக்கறது.

காய் அறிகத்தி : பெ.பார். அரிவாமனை.

காய் ஊறும் : வி.மு. காய் பிடிக்கும் (காய் எறங்கும்).

காய் ஓலை : பெ. பார். 2. காதோலை (செகப்புக்கம்மல், தோடு).

காய்க்காரை : பெ. கழுத்தணி.

காய்கறி : பெ. உணவுக்குரிய மரக்கறிகள் (தற்காரி).

காய்ச்சுவம் : காய வைப்போம் : வி.மு.

காய்சல் : காய்ந்தது : தொ.பெ. உலர்ந்தது 'நெல்லு காய்சல் எப்படி இருக்கு'.

காய் செறுவி : பெ. காய்கறிகளைத் துருவும் கருவி.

காய் சொரண்டி : பெ. தேங்காய் துருவும் கருவி.

காய்ந்து தீஞ்சு போச்சு : வி.மு. வாடிக் கருகுதல், 'பயிரு காய்ந்து தீஞ்சு போச்சு'.

காய்ப்புழு : பெ. நிலக்கடலை, கத்தரி முதலியவற்றில் விழும்புழு.

காய்வெட்டு : பெ. முற்றிய பழுக்கும் நிலையிலுள்ள காய்.

காய் வெடித்தல் : தொ. பெ. பருத்திப் பூ உதிர்ந்த பதினைந்தாம் நாள் பருத்திக்காய் வெடித்தல்.

காயதம் : காகிதம் : பெ. கடிதம்.

காயப்போடுதல் : தொ.பெ. உலர்த்துதல்.

காயம் : பெ. 1. புண், 2. பெருங்காயம் "கடல்லே கரெச்ச காயம்" (அரபு).

காயலா : காய்ச்சலாக : பெ. 'காயலா படுத்துட்டான்' (அரபு).

காய வை : ஏ.வி. 1. உலர்த்து 'துணியெ காய வை', 2. தயார் பண்ணு 'கொளம்பு காய வை'.

காயா பழமா : பெ. 1. சிறுவர்கள் சேர்த்தியா சண்டையா என்பதற்குக் கேட்டல் 'என்னோட காயா பழமா', 2. பெரியவர்கள் ஒரு காரியமாகச் சென்று திரும்பிய போது கேட்டல் 'போன காரியம் காயா பழமா'.

காயி ஆயிட்டுது : வி.மு. பருத்திச் செடி காய் பிடித்தல்.

காயி கசம்பு : பெ. பார். காய்கறி.

காயில் கட்டுதல் : தொ.பெ. இயந்திரத்திலுள்ள கம்பிகள் கருகிவிட்டால் புதிய செம்புக்கம்பி இடுதல்.

காயிலாங்கடை : பெ. பழைய இரும்புக்கடை.

காயுது : வி.மு. 1. பார். 2. காந்துது, 2. வெயில் அடிப்பதால் ஏற்படும் அனல் தகிப்பைக் குறித்தல் (1-2. புழுங்குது, வேகுது : 2 - உப்புசம், கருக்குது, கொளுத்துது, புழுக்கம்).

கார் : பெ. முதல் போகம்.

கார் ஒழவு : பெ. கோடைக்காலத்தில் மழை பெய்தபின் ஓட்டும் உழவு.

கார்காத்த வேளாளர் : பெ. வேளாளர் உட்பிரிவு.

கார்டரு : பெ. வனத்துறை அதிகாரி (ஆங்கிலம்).

கார்த்திகை வெளக்கு : பெ. 1. கைப்பிடியுள்ள மண் விளக்கு, 2. மண் விளக்கு.

கார்போகம் : பெ. 1. கோடைப் பருவம், 2. மருந்துப்பொருள்.

காரக்கரண்டி : பெ. ஒட்டர், காரச் சட்டியிலுள்ள காரையை எடுக்கப் பயன்படுத்தும் கரண்டி.

காரக் கொழம்பு : பெ. குழம்புவகை.

காரெங்கெட்ட சிண்ணாம்பு : பெ. காரத்தன்மை குறைந்த சுண்ணாம்பு.

காரச்செடி : பெ. செடிவகை.

காராசாமானம் : பெ. பலகாரத்தில் காரவகை (இந்துஸ்தானி. வகை : காராசேவ், காரமுறுக்கு, காராப்பூந்தி).

காராசாரமா : வி. அடை. அளவோடு அமைந்த காரச்சுவை 'காரசாரமாப் பேசறான்'.

காரட்டு : பெ. 1. அளவு, 2. காய்கறிவகை (ஆங்கிலம்).

காரமடைத் தேர்த்திருவிழா : பெ. மார்ச் மாதம் பௌர்ணமி நாளில் தேர் ஓடும்.

காரமடைப் பெரம்பு : பெ. காரமடை எனும் ஊரில் விற்கும் மூங்கில் குச்சிகள். விழாவின்போது பலரும் வாங்கிச் செல்வர்.

காரமுள்ளு குத்துதல் : தொ. பெ. காது குத்தப்படாமல் குழந்தை இறப்பின் காரமுள்ளால் காது குத்திப் புதைத்தல்.

காரமுறுக்கு : பெ. பலகாரம்.

கார வாய்க்கா : பெ. சிறிய சிமெண்ட் வாய்க்கால்.

காரா(ய்)ச்சி : பெ. 1. மரவகை, 2. மாட்டுவகை.

காராம்பசு : பெ. மடிப்பாகம் முழுவதும், நாக்கும் கறுப்பாக உள்ளபசு. ஆயித்தில் ஒன்றுதான் இங்ஙனம் அமையும்.

காராமணி : பெ. பருப்பு வகை (தட்டப்பயிர்).

காராமணி அவரை : பெ. குத்துச்செடியாகப் படரும் அவரை வகை.

காரி எருது : பெ. கறுப்பு நிறமுள்ள மாடு

காரிக்கண் : பெ. சலவை செய்யாத ஒருவகைத்துணி 'காரிக்கண வேட்டி'.

காரிகூட்டம் : பெ. ஓர் இனம்.

காரித் துப்பினா நெஞ்சு ஓட்டையாயிடும் : வசை.

காரித்துப்பு : ஏ.வி. அழுத்தம் கொடுத்துத் துப்புதல் :

காரிமறையான் : பெ. கறுப்பும் சிவப்பும் கலந்த மாட்டுவகை.

காரியம் : பெ. 1. விசேஷம், ஈமக்கிரியை முதலியன. 'அவுங்க வூட்லெ காரியம் நடக்குது, 2. வேலை "ஆடாத கூத்து ஆடினாலும் காரியத்துலே கண்ணே வை".

காரியவாதி : பெ. தன் செயல்களைச் சாதித்துக் கொள்பவன்.

காரி வேட்டுவர் : பெ. வேட்டுவர் உட்பிரிவு.

காரை : பெ. அட்டியை அதிகத் தங்கத்தில் (பத்துப் பவுன் - பதினான்கு பவுன்) செய்த கழுத்தணி, 2. காரை பூசிய சிமெண்ட் தரை 'காரையூடா மண்வூடா', 3. செடி வகை, 4. மணலும் சிமெண்ட்டும் கலந்த கலவை.

காரைச்சட்டி : பெ. காரை வைக்கப்படும் இரும்புச் சட்டி.

காரையடுப்பு : பெ. காரையால் போடப்பட்ட அடுப்பு.

காரைவாசல் : பெ. காரையால் போடப்பட்ட வாசல்.

கால் : பெ. 1. பார். ஆரக்கால், 2. தாங்கியாகக் கொடுக்கப்படும் குச்சி 'வாழைக்குக் கால் குடுத்தாச்சா', 3. மூங்கில் குச்சி 'பந்தக்கால்'.

கால் ஆணி : பெ. பார். ஆணிக்காலு.

கால் ஊறின நாத்து : பெ. விதைத்தபின் முளைத்த நாற்றில் செழுமையாக உள்ள நாற்று.

கால் எறங்கிடுச்சு : வி.மு. பார். கருக்கல் ஏறிடுது.

கால்கட்டு : பெ. திருமணம்.

கால்கவுறு : பெ. தென்னை, பனை முதலிய மரம் ஏறும்போது காலில் கட்டும் கயிறு.

கால்கானை : பெ. மாடுகளுக்குக் குளம்பின் மேற்பகுதியில் வரும்புண்.

கால்காப்பு : பெ. காலுக்குப் போடும் அணிகலன்.

கால்சராய் : பெ. ஆடைவகை (குழாய், முழு பேண்ட்).

கால்தடம் : பெ. முன்பு பாதை இல்லாத இடத்தில் நடப்பதால் ஏற்படும் சிறுவழி.

கால் தலையரது : தொ.பெ. அணைகயிற்றால் மாட்டின் கால் களைக் கட்டுதல்.

கால் தாங்குது : வி.மு. மாட்டின் சதையில் ஆணி ஏறுதல்; காலை ஊன்றி ஊன்றி நடக்கும்.

கால்பரப்பி : பெ. குதிரையின் முழங்கால்கள் இடித்தல்; ஆகாது (முட்டிக்காலு).

கால் மாத்தறது : தொ.பெ. களைவெட்டியபின் மண்ணைக் கால்களால் உதைத்தல்.

கால்மோதரம் : பெ.மிஞ்சி விரலில் போடும் மோதிரம்.

கால்ராட்டை : பெ. நெசவுக்கருவி; குச்சியிலிருந்து வரும் நூலைச் சுற்றிக் கொள்வது (பூட்டுத்தலை).

கால்வா(ய்) : பெ. வாய்க்கால் (காவா).

கால்வெசாதி : பெ. மாட்டின் கால்களில் வரும் புண் (காலுப் புண்ணு).

காலக்கிரகம் : பெ. தலைவிதி.

காலங்காத்தாலே : பெ. இளங்காலை.

காலங்காத்தாலே சுத்தித் தொலக்கிறியா : வசை.

காலச் சுத்தின பாம்பு கடியாமே போவாது : பகைவனிடம் உறவு வைப்பின் துன்பத்தை ஏற்க வேண்டிவரும்.

காலடியம் : பெ. அலங்காரத் தாவரம்.

காலந்தள்ளறது : காலம் கழிப்பது : தொ.பெ.

காலம் கெட்டுப் போச்சி (போயிற்று) : வி.மு. முறை கேடு களைச் சுட்டுதல்.

காலம் வந்துட்டுது : காலம் வந்துவிட்டது : வி.மு. இறந்த வனைக் குறித்தல் 'காலம் வந்துட்டு போயிட்டா(ன்)'.

காலமுட்டும் : காலம் உள்ளளவும் : வி.அடை.

காலமே : காலையில் : பெ.

காலர் : பெ. சட்டையின் கழுத்து மடிப்பு (ஆங்கிலம்).

காலரா : பெ. நோய்வகை.

காலாசு : கிளாசு : பெ.

காலாட்னா : காலை ஆட்டினால் : வி.எ. 'காலாட்னா தூணாட்ட பொண்டாட்டி வருவா' என்பது நம்பிக்கை. காலை ஆட்டுதல் கூடாது என்பர்.

காலாண்டே : கால்அருகில் : வி.அடை.

காலாணி : பெ. பார். எச்சக்காளாணி (காலாங்கி, காலாஞ்சி).

காலாவதி : பெ. ஒப்பந்தத் தேதி முடிதல், 'பத்திரம் காலாவதி ஆயிருச்சு' (செத்துப் போச்சு).

காலாற நடத்தல் : தொ.பெ. பொழுதுபோக்கிற்காக, உடல் நலத்திற்காக நடத்தல்.

காலி : பெ. வெறுமை (அரபு).

காலெ(லை) வாரித் தப்பிப் போடுவெ : வசை.

காலேஜி மாடு : பெ. கலப்பின மாடு.

காலேஜி எருமை : பெ. கலப்பின எருமைவகை.

காவடி : பெ. பிரார்த்தனைக்கு எடுக்கும் காவடி, "காவடிக் கனம் செமக்கறவனுக்குத் தெரியும்" (வகை : அன்னக் காவடி, தண்ணீர் காவடி (காரமடை ரங்கநாதர் கோவிலில் எடுக்கப்படுவது), பன்னீர்காவடி, பால் காவடி, மச்சக்காவடி (மீன் காவடி)).

காவடிதொண்ணை : பெ. பாவை இறுக்குங் கருவி.

காவடி மணி : பெ. மணிவகை (சோடிமணி).

காவாசி : பெ. கால்பாகம்.

காவாலி : பெ. அயோக்கியன் (அரபு).

காவிக்கல்லு : பெ. 1. அக்கி எழுதப் பயன்படுவது, 2. ஈரல் நோய்க்குச் சாப்பிடுவது.

காவிகலரு : பெ. நிறவகை (ஆரஞ்சு கலரு).

காவிப்பல்லு : பெ. சிவப்பேறிய பற்கள்.

காவு : பெ. சிறு தெய்வங்கட்கு இடும்பலி.

காவு எடுக்கறது : தொ.பெ. காவு கொடுத்தவுடன் ஆட்டின் வலக்காலை ஆட்டின் வாயில் குறுக்காக வைத்து நீர் விடத் தலை அந்நீரை எடுத்துக் கொள்ளுதல்; எடுக்கா விட்டால் இப்பூசையை இறைவன் ஏற்க வில்லை என்பது நம்பிக்கை.

காவுகொடுக்கறது : தொ.பெ. 1. அறுவடையின்போது, 2. பாலம் கட்ட, 3. பொருள் காணாமல் போனவர்கள் பொருளை எடுத்தவர் இதேபோல் துடிதுடிக்க வேண் டும் என வேலில் கோழியைக் குத்துதல்.

காலிபுலவர் : காலிப்பிளவர் : பெ.(பூக்கோசு).

காளப்பட்டி மாரியம்மன் : பெ. தெய்வம். இத்தெய்வத்திற்கு ஏழு ஊர்க் கவுண்டர் சேர்ந்து பல ஆண்டுகளுக்கு ஒருமுறை தான் விழா எடுக்கின்றனர்.

காளாச்சி : பெ. மாட்டுவகை.

காளான் : பெ. ஈரமுள்ள இடத்தில் குடைபோல் தோன்றும் பூஞ்சை வகை.

காளிச்சு : வி.எ. நிரவி.

காளிச்சு செங்காயெ எடுக்கறது : தொ.பெ. தாம்பு ஓட்டியபின் நெல்லின் மேலுள்ள பொடிப்புற்களை நிரவி நீக்குதல்.

காளித்தல் : தொ. பெ. தானியங்களின் மேலுள்ள தூசியை நிரவி நீக்குதல்.

காளித்தனம் : பெ. மூர்க்கத்தனம்.

காளியாத்தா வாரீட்டுப் போக : வியங். வி. வசை.

காளியோட அறுக்கறது : தொ. பெ. அறுவடைக்கு வந்த கம்பை, சிறிது தட்டுடன் சேர்த்து அறுத்தல்.

காளை : பெ.1. பார். எருத்து "காளைக்கு கழுத்துப் புண்ணு காக்காய்க்கு வவுத்துப் பசி", 2. க.ச. எண் (ஞூரசளநல சூரஅநெச), 3. பார். காட்டாடு.

கான் : பெ. குழி 'அவரை நட கான் எடுக்கணும்'.

கானம் : பெ. தானியவகை.

கானாங்கழுத்தி : பெ. பார். அயிலை.

கானை : பெ. மாட்டிற்கு வாயில், காலில் ஏற்படும் புண்.

காஜா : பெ. பொத்தானுக்குத் துளை எடுத்தல்.

## கி

கிஞ்சாதே : எ.ம. வி. சிரிக்காதே 'பல்லக் கிஞ்சாதே'.

கிச்சடி : பெ. 1. அரிசிவகை, 2. உப்புமாவகை, 3. கறிவகை (இந்துஸ்தானி).

கிச்சன் : பெ. பார். அடுக்களை (ஆங்கிலம்).

கிச்சு : பெ.1. இடுப்பு, 2. பார். பக்கம்.

கிச்சு கிச்சு : பெ. உடம்பில் ஏற்படுத்தும் ஒரு கிளுகிளுப்பு.

கிச்சு கிச்சு தம்பலம் : பெ. ஒருவகை விளையாட்டு.

கிச்சு கிச்சு மூட்டுதல் : தொ. பெ. கூச்சம் உண்டாகும்படி பிறர் அவயங்களைத் தொடுதல்.

கிசுக்கு : இடை. பார். உஸ்க்கி.

கிசேபி : பெ. கட்டத்திற்குள் இரண்டு குண்டுகளை வீசி ஒரு குண்டால் அடித்தல் (இரு குழியாட்டம், குண்டாட்டம்).

கிட்ட : வி. அடை. அருகில் "கிட்டப் போனா முட்டப் பகெ" (கிட்டக்க).

கிட்டத்தெ : வி.அடை. அருகில்தான்.

கிட்டி : பெ. 1. ஆடு ஒழுங்காக மேய, கழுத்தில் கட்டும் பலகை, 2. இறுக்குங்கோல், 3. பன்றியைக் கொண்டு ஆழமில்லாமல் உழும்போதும், பன்றி வேலியில் முட்டாமல் இருக்கக் கழுத்தில் போடும் பலகை.

கிட்டி செவுறு : பெ. வரிசையாகக் கால் நட்டு குறுக்காகக் கருணை மூங்கில் கட்டி இடைவெளியில் மண்பூசி சாணி மெழுகி காய்ந்தபின் சுண்ணாம்பு பூசிய சுவர்.

கிட்டி வச்சு புடிக்கறது : கிட்டி வைத்துப் பிடித்தல் : தொ. பெ. எலிப் பொறியில் உணவு தைத்து எலியைப் பிடித்தல்.

கிடக்க : வி.எ. நிம்மதியாக இருக்க 'ஒரு நிமிசம் கிடக்க விடறையா'.

கிடத்தி வச்சு : வி.எ. படுக்க வைத்து 'பையனெ கிடத்தி வச்சுட்டு வந்தே'.

கிடாரங்கா : கடாரங்காய் : பெ. நாரத்தை வகை (கிடாநாரத் தங்கா).

கிடாரி கன்னு : பெ. பெண் எருமைக்கன்று.

கிடாசினா(ன்) : வி.மு. எறிந்தான்.

கிடாவெட்டு : பெ. ஆடுவெட்டுதல்.

கிண்ணங்கலக்குதல் : தொ.பெ. துன்புறுத்துதல் 'கிண்ணங் கலக்கிருவே பாத்து நடந்துக்கோ'.

கிண்டறெ : கிளறுகின்றேன் : வி.மு.

கிண்டி : பெ. குழந்தைக்குப் பால் குடிக்க வைக்கும் கிண்ணம் (கெண்டு).

கிண்டித்தின்னி : பெ. பிறரிடம் நயந்து பேசி வாங்கிச் சாப்பிடு பவன்.

கிண்டியே கரந்திருவே (கரந்திடுவாய்) : வி.மு: நயமாகப் பேசி விஷயங்களை அறிதல்.

கிண்ணம் : பெ. பாத்திரவகை (கிண்ணி).

கிண்ணம் பறிக்கிறது : தொ.பெ. செடிக்கு உப்பிட வட்டமாக மண்ண பறித்தல். எ-டு. புகையிலை.

கிண்ணுன்னு : வி.அடை. 1. செழிப்பாக 'பயிர் கிண்ணுக்கு வந் துருக்கு', 2. நிறைந்து 'வயிறு கிண்ணுக்கு இருக்கு'.

கித்தான் : பெ. மூட்டைக்குப் பயன்படும் பெரிய பை வகை.

கிம்பளம் : பெ. கையூட்டு.

கிர் : இடை. கத்துதல் குறிப்பு 'தலை ஏனோ கிர்ங்குது'.

கிர்னு : வி. அடை. 1. இறுக்கமாக 'போத்தாழெயெ கிர்னு மூடுங்கோ', 2. பார் .1. கிண்ணுன்னு.

கிரகம் பிடிச்ச பய : வசை (சனியம் புடுச்சவன்.)

கிரசரு : பெ. கரும்புப் பால் ஆட்டப் பயன்படும் கருவி (பாகங்கள் : கிரசரு வீலு, கிரசரு பெரிய புள்ளி வீலு, கொட்டாப்புடிக்கருது).

சாப்டு, பெங்கருது (பெண்கருது), உறாங்கருது (ஆண்கருது), (ஆங்கிலம்).

கிரட வாகனங்கள் : பெ. பாமா, ருக்மணி, விஷ்ணு இவர்களுக்குரிய வாகனம்.

கிராக்கி : பெ. 1. ஆணவம் 'ரொம்பத்தா கிராக்கி பண்ணிக்காதே'.

2. தேவை, தட்டுப்பாடு 'தண்ணிக்கி கிராக்கியா போச்சு' (உருது).

கிராக்கு : பெ. 1. பைத்தியம், 2. வெடிப்பு 'பாட்டில் கிராக்கு புட்டிடுச்சு'.

கிராப்பு : பெ. வெட்டுக்கு வருதல் 'திராட்சி கிராப்புக்கு வந்துருச்சு' (ஆங்கிலம்).

கிராப் வந்துடும் : கிராப்புக்கு வந்துவிடும் : வி.மு.

கிராம்புக் குச்சி : பெ. காதின் மேற்பகுதியில் அணியும் (மேலக் காதில்) கிராம்பின் உருவுடைய காதணிவகை (கிராம்புச் சொரை, கிராம்புத் திருகிணி, கொப்புக்காது).

கிராமசாந்தி : பெ. அமைதியும் குளுமையும் நிலவச் செய்யும் சடங்கு.

கிராமசெட்டிகாரு : பெ. தேவாங்கச் செட்டியார் சமூகத்தின் சிறுகிராமத் தலைவர்.

கிராம தெய்வம் : பெ. ஒவ்வொரு கிராமத்திலும் உள்ள ஊர் காக்கும் தெய்வம்.

கிராமம் : பெ. பல வீடுகள் சேர்ந்த குடியிருப்புப் பகுதி.

கிரிச்சிட்டி : பெ. மாட்டுவண்டியின் நுகத்தின் இருபுறமும் சிறுவர் உட்கார்ந்து கிரீச், கிரீச் என ஒலியெழுப்பும் விளையாட்டு.

கிருக்கன் : பெ. பார். கிராக்கு.

கிருதா : பெ.கன்னமீசை.

கிருதாமீசை : பெ. தொங்கக் கூடிய பெரியமீசை.

கிருபை : பெ. அருள்.

*கிருஷ்ண கள்ளி : பெ. கள்ளிவகை.*

*கிருஷ்ணன் தொட்டில் : பெ. பச்சையின் வடிவம்.*

*கிருஷ்ணமூர்த்தி : பெ. கழுத்து வெள்ளையாக உள்ள கருஞ் சிவப்பு நிறக் கழுகு (கெரட பகவான்).*

*கிரேப் : பெ. பழவகை (ஆங்கிலம்).*

*கில்லாடி : பெ. தந்திரம் மிக்கவன் (மராத்தி).*

*கில்லித்தாண்டு : பெ. கில்லியாட்டம்.*

*கிலி : பெ. பயம்.*

*கிலுகிலி : பெ. ஒலி செய்யும் விளையாட்டுக் கருவி (கிலுகிலுப்பை).*

*கிலுகிலுப்பு : பெ. உற்சாகம் தரக்கூடிய உணர்வு "வயசுப் புள்ளெ கிளுகிளுப்பு, வெதத்துக்கு ஒரு நடநடப்பு".*

*கிலுட்டு : பெ. மெருகேற்றுதல் 'சயினுக்கு கிலுட்டு போட ணும்' (ஆங்கிலம்).*

*கிலுவமரம் : கிளுவை : பெ. மரவகை.*

*கிழக்குமுகனா : வி.அடை. கிழக்குப் பக்கமாக (கெழக்குமானா, கெழக்கு மோனா).*

*கிழிச்சே : கிழித்தாய் : வி.மு. சாதிக்க முடியுமா 'ஆமா நீ செஞ்சு கிழிச்சே'.*

*கிழித்தல் : தொ.பெ. 1 சாதித்தல், 2. விளையாட்டில் கோடு வரைதல்.*

*கிளவர் : பெ. சீட்டாட்டச் சீட்டின் நான்கு குறிகளில் ஒன்று. (ஆங்கிலம்).*

*கிள்ளு : பெ. 1. கட்டப்பட்ட பூவிலுள்ள கட்டு 'நாலுகிள்ளு குடு போதும்'.*

*2. கிள்ளப்பட்டது 'புகையிலை நாலு கிள்ளு கொடு', 3. சீலை மடிப்பு 'நல்லா கிள்ளு வச்சு கட்டு'.*

*கிள்ளு ஏ.வி. கிள்ளுகை.*

*கிள்ளுக்கீரை : பெ. எளிமையானவன்-வள்-து. 'கிள்ளுக்கீரையா நா உங்களுக்கு'.*

*கிளி : பெ.1 கிளித்தட்டு விளையாட்டில் தொடுபவன், 2. பறவை வகை, "கிளிப்புள்ளெக்கி சொல்லிக் குடுத்தாப்பலே" (2-கிளிப்புள்ளெ).*

கிளிக்கொம்பு : பெ. 1. எருமையின் கொம்பு பின்னால் சென்று நுனி மேலே வளைந்து இருத்தல், 2. மேல்நோக்கியுள்ள மாட்டின் கொம்பு - நல்லது.

கிளிஞ்சல் : பெ. கடலில் கிடைக்கும் சுண்ணாம்பு.

கிளித்தட்டு : பெ. நிலத்திற் சதுரக்கோடு கீறி ஆடும் ஒருவகை விளையாட்டு.

கிளிமூக்கு : பெ. வளைந்த மூக்கு.

கிளிமூக்குச் சட்டம் : பெ. வண்டியோட்டி உட்காரும் வண்டியின் பாகம்.

கிறுக்கு கத்து கெத்துது : வி.மு. கோழி அடைவிழுந்தபோது எழுப்பும் ஒலி.

கிறுகிறுப்பு : வி.அடை. 1. செருக்கு 'அவனுக்கு கிறுகிறுப்பு தாஸ்தி ஆயிடுச்சு' 2. தலைசுழற்சி 'பசிமயக்கம் கிறு கிறுன்னு வருது'.

கிறுமமா : வி.அடை. ஒழுங்காக 'கிறுமமா இருந்தா இரு இல்லாட்டிபோயிடு'.

கின்னாரக்காரன் : கிண்ணரக்காரன் : பெ. இளம்பாடகன் "கெழவன் பேச்சு கின்னாரக்காரனுக்கு ஏறுமா?'

## கீ

கீச்சுக்குரல் : பெ. ஒருவகை மென்குரல்.

கீரப்பாசி : பெ. இருளர் தாலி.

கீரன்கூட்டம் : பெ. ஓர் இனம்.

கீரிப்புள்ளை : பெ. (வகை : பாம்பாட்டியங் கீரி, மொந்தங்கீரி).

கீரை : பெ. இலைக்கறி.

கீரைக்காரர் : பெ. கன்னடச் சாதியின் உட்பிரிவு.

கீரைத்தண்டு : பெ. தண்டுக்கீரையின் தண்டு. காய்கறிபோல் இதுவும் சாம்பாருக்குப் போடப் பயன்படும்.

கீல் : பெ. கொக்கி (உருது).

கீழ்க்காடு : பெ. மேட்டுக்காட்டுக்குக் கீழே இருப்பது.

கீழ்க்குழாய் : பெ. கிணற்றின் பாகம். நீருக்குள் இருக்கும் குழாய். இது கிணற்றிலுள்ள நீரைப் பம்பிற்று இழுத்துக் கொடுக்கும்.

கீழ்ப்பூட்டு : பெ. கருவத்தடியை நுகத்திற்குமேல் வைத்துக் கட்டுதல்.

கீழாதி : பெ. தாழ்ந்த சாதியினர்.

கீழாநெல்லி : பெ. மூலிகைவகை.

கீழே : வி.அடை. 1. கீழிடம் "கீழே தள்ளினதுமில்லாம குதிரெ குழியும் பறிச்சுதாம்"2. முற்காலம் "பத்து வருசத்துக்குங் கீழே பாத்தது'.

கீறி உடுதல் : தொ. பெ. நாற்றங்காலைக் கையால் கீறிச் சமப் படுத்துதல்.

## கு

குக்கி : உட்கார்ந்து : வி.எ. "குக்கி குக்கி குண்டி பெருத்தாச்சு : ஓடி ஓடி நரம்பு வலுவாச்சு".

குக்கிரகம் : குறும்பு : பெ. "குருடனுக்கு குக்கிரமே சாஸ்தி. உட்காருவதே தடம் என உக்காந்துவிடுவான்.".

குக்கு : உட்கார் : ஏ.வி.

குகை வெட்டறது : குகை வெட்டுதல் : தொ.பெ. புதைகுழி யினுள் ஏழுபடி வைத்துக் குகைபோல் வெட்டுதல்.

குங்கிலியம் : பெ. மரவகை.

குங்குமப்பிள்ளை நிறம் : மாட்டின் நிறம்.

குங்குமப்பூ : பெ. குங்கும மரத்தின் பூ.

குங்குமம் : பெ. "குங்குமம் சுமந்த கழுதெ மணமறியுமா?" (செவப்பு. வகை : காபிக்கலர் குங்குமம், சாமி குங்கும், நத்தச்செவப்புக் குங்குமம், பெங்காலி; குங்குமம், மஞ்சக்கலர் குங்குமம்).

குச்சி : பெ. பார். 1. அல்சேசன், 2. மரக்குச்சி.

குச்சி ஊனுதல் : தொ. பெ. 1. கதிரை நீக்கி அல்லது கதிருடன் பயிரைக் கட்டிய காய நிறுத்துதல், 2. திராட்சை, பாகல் முதலிய கொடிகள் படரக் குத்தி நடுதல்.

குச்சிக்கிடாய் பூசை : பெ. விழாச்சடங்கு. ஆடுபலியிடப்பட்டு, இரத்தம் முழுவதும் பூசாரி குடித்தல்.

குச்சிக் கெழங்கு : பெ. 1. பனங்கிழங்கு, 2. மரவள்ளிக்கிழங்கு,

குச்சியஞ்சத்து : பெ. கையணி.

குச்சு : பெ. பார். 1குச்சி ஊணுதல், 2. சிறு குடிசை.

குச்சு : ஏ.வி. உட்கார் "அப்பனூட்லே ஆனெமேல குச்சுட்டு சோறுண்டாலும் புருசனூட்லே பிச்செ எடுத்துண்றது மேல்".

குசலம் : பெ. தந்திரபுத்தி 'எம்மேலே குசலம் வச்சுவுட்டுட்டா'.

குசுக்கு : இடை. பார்.உஸ்க்கி.

குசினி : பெ. பார். அடுக்களை (பிரெஞ்சு).

குசுகுசுனு : வி. அடை. காதுக்குள் ஓதுதற் குறிப்பு.

குசும்பு : பெ. குறும்புத்தனம்.

குஞ்சம் : பெ.1 சேலை முந்தானையின் முனையில் இருக்கும் தொங்கல், 2. தலையணி "சீவக்கட்டெக்கிப் பட்டுக் குஞ்சம்" (குஞ்சலம்).

குஞ்சு : பெ. பறவைக் குஞ்சு.

குஞ்சு : ஏ.வி. இழு 'குஞ்சுனா முடி பிஞ்சிட்டுப் போயிடு'.

குஞ்சுக் கருவாடு : பெ. பொடிக்கருவாடு.

குஞ்சுக்கோழி மீனு : பெ. நட்சத்திரங்கள்.

குட்டக் கலப்பை : பெ. தேய்ந்த கலப்பை, "கூளெ குடியெக் கெடுக்கும் குட்டக் கலப்பெ காட்டெ கெடுக்கும்".

குட்டத்துணி : பெ. கைக்குட்டை.

குட்டம் : குஷ்டம் பெ. (குட்டவெசாதி).

குட்டானாக : வி.அடை. குரோதமாக 'எப்பவுமே எம்மேலே குட்டானாகப் பேசறா(ன்)'.

குட்டி : வி.அடை. சிறிய 'குட்டி வயலு'.

குட்டிக்கரணம் : பெ. 1. தலைகீழாகப் பாய்தல், 2. பெருமுயற்சி 'குட்டிக் கரணம் போட்டும் நடக்கலெ'.

குட்டிச்செவரு : பெ. 1. இடிந்த சிறு சுவர் "கழுதெ கெட்டா குட்டிச்செவர்",

2. பழுது 'காரியம் குட்டிச் செவறாப் போச்சு',

குட்டிச் செவுறாப் போயிடுவே : வசை.

குட்டித்தாச்சி : குட்டிச் சாத்தான் : பெ. பேய்வகை, "குட்டித் தாச்சிக்கு வேலெ குடுத்தாப்லே".

குட்டிவித்தை : பெ. குருவிடம் பயிலாமல் நூல்மூலம் கற்றல் 'கண் இல்லாத வித்தெ குட்டி வித்தெ'.

குட்டு : பெ.1. இரகசியம் , 2. குவியல்.

குட்டுகிட்டெல்லா : வி.அடை. இரகசியமனைத்தும் 'குட்டுகிட்டெல்லா தன்னப்போல வெளியே வந்துடும்'.

குட்டு வைத்து ஊதறது : தொ.பெ. விளையாட்டின் பெயர்.

குட்டேரி : பெ. தானியங்களைக் குவித்து வைக்கும் இடம் (குட்டாரி).

குட்டை : பெ.1. குறுகிய உருவம் உள்ளவன் "நெட்டையை நம்பினாலும் குட்டைய நம்பக் கூடாது", 2. நீர் தேங்கும் இடம்.

குட்டைவுடாதே : எ.ம.வி. பொய்கூறி ஏமாற்றாதே (டவுட் அடிக்காதே).

குட்டோ : கிட்ட : இடை.1. அருகில் 'ஆத்துக்குட்டோ போகும் போது', 2. இடம் 'அவங்குட்டோ குடு'.

குட்லி : பெ. பார்.1. குட்டை.

குடமுருட்டிக் கந்தசாமி : பெ. ஆட்பெயர்.

குடவேங்கை : பெ மரவகை.

குடி : பெ. குடும்பம் "திருடி குடியாவாளா?தவிடு களியாகும்மா? (குடித்தனம்).

குடிக்கு : குடிப்பதற்கு : பெ.எ. 'குடிக்கு தண்ணீர் குடு.

குடிச்சாலும் குடித்தாலும் : வி.எ. "எரந்து குடிச்சாலும் இருந்து குடி.

குடிச்சியவொ : குடித்தவர்கள் : வி.அ.பெ.

குடி முழுகிப்போதல் : தொ. பெ. குடும்பநிலை முதலாயின முழுதும் அழிதல் 'குடியொன்னும் முழுகலே கவலப்படாதே'.

குடியாமெ : குடிக்காமல் : வி.எ.

குடியானச்சி : பெ. எசமானி.

குடியானப்பையன் : பெ. பயிரிடுவோன் (குடியானவன்).

குடு : கொடு : ஏ.வி. " குடுக்கமாட்டாதவ(ன்) கூத்தெ பழிச்சானாம்".

குடுக்க வாங்கப் பண்ணுதல் : பெ. வட்டிற்குப் பணம் கொடுத்தல் 'குடுக்க வாங்க பண்ணிட்டு இருக்கான்'.

குடுக்கை : பெ. கள்குடுக்கை.

குடுகு : பெ. தொடை எலும்பும் இடுப்பெலும்பும் சேருமிடம்.

குடுகை : பெ. கஞ்சாப் புகைக்குழாய்.

குடுசு : பெ. பட்டிக்கருகில் காவலாளி தூங்கக் கட்டப்படும் குடில். கால்நட்டு மேலே சோகை போடுதல். நுழையும் வாய்ப்பகுதி மூடாமல் இருக்கும் (வகை : நெட்டக்கால் குடுசு (குடிசையின்மேல் ஆள்படுப்பான். மழைவரின் ஆடுமாடு இதனடியில் நிற்கமுடியும். இதனை இடமாற்றஞ் செய்ய முடியும்), பூப்புச் சடங்கின்போது போடும் குடில்).

குடுசு கட்டுதல் : தொ.பெ. பூப்புச் சடங்கின்போது தாய்மாமன் கட்டுதல்.

குடுசுபுடுங்குதல் : தொ. பெ. தாய்மான் குடிலைப் பிடுங்கிக் காட்டில் எரித்தல்.

குடுத்துணி : பெ. ஆடை. (உருது).

குடுத்து : கொடுத்து : வி.எ. "பட்டுங் குடுத்து முக்காலியும் செமந்தாப்பலே".

குடுத்துவச்சவன் : கொடுத்து வைத்தவன் : வி.அ. பெ. "குடுத்து வச்சவனுக்குத்தான் குளிர்காச்சல்".

குடுதாலி : பெ. மாடு நீர் குடிக்கும் மண்தொட்டி.

குடும்பஸ்த்திரி : குடும்பப் பெண் : பெ.

குடுமி : பெ. உச்சிக்கொண்ட "சொந்தக் குடுமிக்கி எண்ணெயெக் காணோம் சுத்துக் குடிமிக்கி எண்ணை வைக்கப் போயிட்டானாம்", 2. உரித்த தேங்காயின் வால்பகுதி.

குடோன் : பெ. சரக்கு குவிந்துள்ள வணிகம் செய்யும் இடம்.

குண்டத்தில் போடறது : தொ. பெ. குண்டம் மிதிப்பதற்குமுன் எரியும் நெருப்பில் தானியம் பல சரக்குகளைப் போடுதல்.

குண்டத்தில் வீசறது (வீசுதல் ) : தொ.பெ. குண்டம் மூடிய பின் உப்பு, மிளகு இவற்றைக் குண்டத்தின்மேல் போடுதல்.

குண்டம் தொறக்கறது (திறத்தல்) : தொ.பெ. கம்பம் போட்ட ஆறாம் நாள் குழி எடுத்து விறகு அடுக்கிநெருப்பிடுதல்.

குண்டம் முதிக்கிறது (மிதித்தல்) தொ.பெ. முதலில் பூசாரி இறங்க, பின் பலரும் குண்டத்தில் இறங்குதல்.

குண்டன் : பெ. "கண்டதெ தின்னா குண்டனாவான்", "கண்டதெ படிச்சா பண்டிதனாவான்".

குண்டா : பெ. வாயகன்ற பாத்திரவகை (மராத்தி, குண்டா போசி, (குண்டான், வாணாபோசி).

குண்டாச்சட்டி : பெ. உருண்டையான பாத்திரவகை (குண்டாவு).

குண்டாட்டம் : பெ. பார். கிசேபி.

குண்டாந்தடி : பெ. பருத்துர் குறுகிய கைத்தடி.

குண்டால் : பெ. நூறு கிலோ கொண்ட அளவு.

குண்டி : பெ. 1. ஆசனப்பக்கம் "குண்டி காஞ்சா குதிரெ வக்கிப் பில்லு திங்கும்", 2. பருமனான பெண் 'குண்டி போறா(ள்)', 3. வசை 'போடி குண்டி'.

குண்டிக்காய் : பெ. மூத்திராசயம்.

குண்டி திருகிக் கதவு : பெ. ஒருவகைக் கதவு (ஒத்தக்கதவு).

குண்டு : பெ. 1. நெசவுக்கருவி, 2. விளையாட்டுக் கருவி.

குண்டுக்கல்லு : பெ. 1. அம்மியில் அரைக்கும் கல், 2. குண்டான கல்.

குண்டுகுண்டுனு : வி. அடை. விரைவுக்குறிப்பு 'குண்டுகுண்டுனு ஓடியாறே'.

குண்டுகுழி : பெ. மேடுபள்ளம்.

குண்டுத்தாலி : பெ. தாலிவகை.

குண்டுபோசி : பெ. பாத்திரவகை.

குண்டுமஞ்சக் கெழங்கு : பெ. மஞ்சள் வகை.

குண்டுமணி : குன்றிமணி : பெ. "குப்பெயிலே கண்டெடுத்த குண்டுமணி".

குண்டுமல்லி : பெ. மல்லிகைவகை.

குண்டூசி : பெ.1 . தலை திரண்டுள்ள ஊசி, 2. துணியில் குத்தும் ஊசிவகை.

குணுக்கம் : பெ. கூர்மை, விளக்கம் 'என்னனு குணுக்கமா கேட்டுட்டுவா'.

குணுக்கு : பெ. குளவிக்கூடுபோல் உள்ள காதணிவகை.

குத்தகை : பெ. நிலம் முதலிய ஒப்பந்தம்.

குத்தகை வேலை : பெ. ஒப்பந்தத்தின்பேரில் ஏற்றுக்கொள்ளும் வேலை (உருது).

குத்தம் : குற்றம் : பெ. 1. அபராதம், 2. குறை "தன்னோட குத்தம் தனக்குத் தெரியாது".

குத்தம் போடுதல் : தொ.பெ. அபராதம் விதித்தல்.

குத்தலா : வி.அடை. மனம்நோகும்படி 'குத்தலா பேசறாங்க'.

குத்தாம் போடறது : தொ.பெ. பம்பர விளையாட்டில் கரத்திற் குள் உள்ள பம்பரத்தைக் கையிலுள்ள பம்பரத்தால் குத்தி எடுத்தல்.

குத்தாரி : பெ. 2. பார். குட்டேரி "குத்தாரி இருக்குது குத்தாரி இருக்குதுன்னு குடிப் பிச்சை எடுத்தாளாம்" (குத்தேரி, குந்தாண்), அறுவடை செய்த கதிர்களைக் குவித்து அதனுடைய தட்டால் சுற்றிலும் மூடுதல்.

குத்தாரி பிரித்தல் : தொ.பெ. குத்தாரியில் உள்ள கதிர்களைப் பரவலாகக் காயவைத்தல்.

குத்தாரி போடுதல் : தொ.பெ. நடவுக்குரிய நாற்றுக் காயாமல் இருக்க ஒன்றின்மேல் ஒன்றாகக் குவித்து வைத்தல்.

குத்தான் மேயரது : தொ.பெ. வீட்டுக்குச் சட்டம் போடுதல்.

குத்தி எடுத்து வீசுதல் : தொ.பெ. முதன்முறை நீளமாகக் தூற் றிக் குவித்துள்ள நெற்குவியலை முறத்தால் அள்ளி யெடுத்து வீசிக்கொண்டே செல்லுதல்.

குத்திடிச்சுன்னு : குத்திவிட்டது என்று : வி.எ. "கண்ணெ குத் திடிச்சுன்னு கையெ வெட்டறதா?"

குத்தீட்டி : பெ. குத்தக்கூடிய ஈட்டி (குத்துட்டி).

குத்து : ஏ.வி. 1. உலக்கையால் இடித்தல் "மாமியா குத்தறா மருமகொ பொடக்கறா", 2. கைமுட்டியாற் தாக்குகை.

குத்து அறுகு : பெ. அறுகுவகை.

குத்துக்கம்பம் : பெ. குத்து விளக்கு.

குத்துக்காய் : பெ. நிலக்கடலை வகை.

குத்துக்காலு : பெ. 1. ஏற்றம் இறைக்குங் கருவி, 2. கட்டிலைத் தாங்கும் நான்கு கால்கள், 3. காலை குத்திட்டு உட்கார்ந்த நிலை, 4. தூண், 5. நெசவுக்கருவி.

குத்துச்செடி : பெ. மல்லிகைச்செடிவகை(குத்துமல்லி).

குத்துப்பசலை : பெ. கொடிவகை.

குத்து பம்பரம் : பெ. விளையாட்டின் பெயர்.

குத்துமதிப்பு : பெ. தோராயமதிப்பு.

குத்துமரம் வுடறது (விடுதல்) : தொ.பெ. நேராக நின்று காற்று வரும் திசையில் தானியத்தைத் தூற்றுதல்.

குத்தமில்லே : வி.மு. பரவாயில்லை 'துணி நல்லாருக்காணு சேக்கிறியா? குத்தமில்லே (சுமார், தேவலெ)

குத்து மொளக்காத்தழெ : பெ. மூலிகைக் கீரை.

குத்துயிர் : குற்றுயிர் : பெ. 'குத்துயிரும் கொலை உயிருமா கெடக்கறான்'.

குத்து வெளையாட்டு : பெ. விரித்துள்ள கையில் குத்தி விளையாடுதல்.

குத்தூசி : பெ. தானிய மூட்டைகளில் நெல் முதலியவற்றைக் குத்தியெடுக்குங் கருவி.

குதப்புதல் : தொ. பெ. அசைபோடுதல், மெல்லுதல் 'விசயங் கெடச்சுட்டா வெத்தலயெ குதப்பற மாதிரி கொதப்பி தள்ளிடுவா(ள்)'.

குதரமொகம் சாஞ்சிருக்கு : குதிரை முகம் சாய்ந்துள்ளது : வி.மு. அறுவடைக்கு வந்த பயிர் தலை சாய்தல்.

குதரமே ஊர்கோலம் : குதிரைமேல் ஊர்வலம் : பெ. மாப்பிள்ளை அழைப்புத் திருமணச்சடங்கு.

குதிகயிறு : பெ. அள்ளு தொண்ணையையும், குதி தொண்ணையையும் இணைக்கக் கூடிய சமுக்காளம் நெய்யுங்கருவி.

குதிதொண்டை : பெ. பார். காவடி தொண்ணை.

குதிபில்லை : பெ. செருப்பு முதலியன தேயாமல் இருக்க காலணிகளின் அடியில் பின்பக்கம் கொடுக்கப்படும் டயர் துண்டு.

குதிமார் அடித்தல் : தொ.பெ. இறந்தவர்களுக்காக மார்பைக் கையால் அடித்துப் பாட்டுச் சொல்லி அழுதல் (மார் யடுச்சி யழுகறது).

குதிர்தல் : தொ.பெ. தீர்மானப்படுதல் 'பொண்ணுக்கு ஒரு எடமும் குதிரலெ'.

குதிர(ரை) மசால் : பெ. குதிரைவாலிப் புல்வகை.

குதிரமணி : பெ. வேல்மணியில் ஒருவகை.

குதிரு : பெ. நெல்முதலியன வைக்குங் கூடு அல்லது மண் பானை "எங்கப்பன் குதிருக்குள்ளே இல்லே" (குருது).

குதிரெ : குதிரை : பெ. 1. பாவு தாங்கும் மரச்சட்டத்தாலான முக்கோணத்தாங்கி, 2. விலங்கினம் "குதிரையின் கொணத்தெ கண்டுதான் கொம்பில்லாம படச்சான் ஆண்டவன்".

குதிரெ சவுக்கு : பெ. மரவகை.

குதிரைக் கொழம்பு : பெ. கொடிவகை.

குதிரை சவாரி : பெ. குழந்தையை முதுகில் சுமத்தல்.

குதிரைப் பந்தயம் : பெ. குதிரைகளை ஓடவிடும் பந்தயம்.

குதிரைப் புடுக்கு : பெ. மரவகை.

குதிரை வாகனம் : பெ. நீலியாத்தாள் வாகனம்.

குதிரைவாலி : பெ. தானியவகை.

குந்தாணி : பெ. 1. மரத்தால் அல்லது மண்ணால் செய்யப்பட்ட பேருரல், 2. முறம் " கொளத்துக்குத் தண்ணி வர குந் தாணி குந்தாணியாப் பேஞ்சா போதுமா?"

குந்தாலி : பெ. மாடு தண்ணீர் குடிக்கும் மண்தொட்டி.

குந்தி : பெ. கதவு நிலவிற்கு அடிக்குங் கருவி.

குந்தி : வி.எம். பார் குக்கி "குந்தித் தின்னா குன்றும் கரெயும்".

குந்துக்கால் : பெ. முன்னங்காலால் நிற்றல்.

குந்துமணி : பெ. கோவில் போன்ற இடங்களில் தொங்கவிடப் படும் மணி.

குப்பக்கீரை : பெ. தானாக முளைக்கும் கீரைவகை.

குப்பத்தொட்டி எலைக்சன் : பெ. நகரசபைத் தேர்தல்.

குப்பம் : பெ. மீனவர் குடியிருப்புப் பகுதி (தெலுங்கு).

குப்பமரம் : பெ. மரவகை.

குப்பமேனித்தலை : பெ. தானாக முளைக்கும் மூலிகைக் கீரை.

குப்பற நீச்சல் : தொ. பெ. தலைகவிழ நீந்துதல்.

குப்பற வுழுதல் : தொ. பெ. 1. தலைகவிழ விழுதல், 'கொழந்தே குப்பற வுழுந்திருச்சு' 2. தோல்வி அடைதல்.

குப்பாரி கொட்டறது : தொ.பெ. திருமணச் சடங்கு. எ-டு. உடையார், பண்டாரம்.

குப்பி : பெ. சவுரியின் மேலுள்ள கலசம் போன்ற அணிகலன், 2. குடுவை (இந்துஸ்தானி).

குப்பை : பெ.1. உபயோகமற்ற பொருள்கள், 2. உரம் (2. எருவு).

குப்பை எடுக்கறது : தொ.பெ. உரக்குழியிலுள்ள உரத்தை வழித்தல்.

குப்பை ஓட்டறது : தொ.பெ. வழித்த உரத்தைக் காட்டில் குவியலாகச் சேர்த்தல்.

குப்பை ஓதறுதல் : தொ.பெ. குவியலாக உள்ள உரைத்தைக் காட்டிற்குப் பரப்புதல்.

குப்பை கொட்டும் போது தானே தெரியும் : மணமாகாத பெண்ணிற்று வாழ்வின் சிரத்தையை உணர்த்துதல் "கட்டிட்டுப்போன எடத்துலெ குப்பை கொட்டும் போது தானே தெரியும்".

குப்பைத் தொட்டி : பெ. குப்பையைப்போடும் தொட்டி.

கும்பக்கட்டு : பெ. வண்டிக் கும்பத்தின்மீதுள்ள இரும்பு வளையம் (கட்டு).

கும்பகோணச்சாளு : பெ. மாதுளம்பூ வடிவிலுள்ள பெரிய குடவகை.

கும்பசொரை : பெ. சுரைக்காய் வகை.

கும்பம் : பெ. 1. குடம், 2. வண்டிச் சக்கரத்தின் மையப்பகுதி; ஆரக்கால்கள் குவியும் இடம்.

கும்பல் : பெ. கூட்டம்.

கும்பா : பெ. பார். கிண்ணம், 2. தவளை (குண்டா, போசி)

கும்பி : பெ. வயிறு.

கும்பிடு போடுதல் : தொ.பெ. 1. ஆசி பெறுதல் "குடுக்கறது கொஞ்சமாயிருந்தாலும் கும்பிடு பெரிசாயிருக்கோணும்" 2. பெற்றோர் இறப்பின் மகள்கள் வீட்டில் உள்ளவர் களின் 'எங்கள் அப்பனை, ஆத்தாளக் கடைசேத்தி விட்டோம். இனி எங்களுக்கு என்ன இருக்கிறது என்று கூறிக் காலில் விழுதல். சக்கிலியர் திருமணச் சடங்கு.

கும்புடு வாங்கு வாங்க : வி.மு. மணமக்களை ஆசீர்வதிக்க வாருங்கள் எனப் பெரியவர்களை அழைத்தல்; சக்கிலியர் திருமணச் சடங்கு,

கும்மாயப் பலகை : பெ. பருப்புக் க்டையும் கருவி.

கும்மாயம் : பெ. பார். உப்புப் பருப்பு.

கும்மாயம் கும்மாயம் : பெ. உடம்பில் புல்லரிப்பை ஏற்படுத்தும் விளையாட்டு (கிச்சுகிச்சு வெளையாட்டு, நண்டூருது நரியூருது, அக்கா வீடு போகுது, போகுது).

கும்மாளம் : பெ. 1. இருட்டு, 2. மேகம் மூடியிருத்தல்.

கும்மி : பெ. மகளிர் கைகொட்டிப் பாடியாடும் விளையாட்டு.

கும்மிக்கோலாட்டம் : பெ. கையாலும் கோலாலும் தட்டிக் கொண்டு பாடுதல்.

கும்மிருட்டு : பெ. காரிருள்.

கும்லா(ன்) : பெ. மரவகை.

குமட்டை : பெ. காட்டுக்கீரை.

குமிச்சாலும் : குவித்தாலம் : வி.எ. "தங்கத்தெ குமிச்சாலும் தம் புத்தி உடறதில்லே"

குமிடு : பெ. உடல் பழுப்பாகவும் கால்கள் கறுப்பாகவும் உள்ள குதிரைவகை.

குமிழக்கல்லு : பெ. மண்பாண்டம் செய்யுங் கருவி.

குமினி செடி : குன்றிச் செடி : பெ. செடிவகை.

குமுஞ்சு : குனிந்து : வி.எ.

குமுட்டி அடுப்பு : பெ. கரியிட்டு எரிக்கும் அடுப்பு.

குமுறுதல் : குமுறுதல் : தொ.பெ. 1. பீறிடுதல், 'குமுறியழுகறா',

2. மனத்தின்னுள்ளேயே வருந்துதல்.

குயவன் அடுப்பு : பெ. அடுப்புவகை (கொசவன் அடுப்பு).

குய்யோ முய்யோன்னு : வி.அடை. கூச்சலோடு கூடிய அழுகை 'குய்யோ முய்யோனு கத்தறா(ள்)'.

குயிலு(ல்) : பெ. பறவைவகை.

குயின் : பெ. சீட்டாட்டச் சீட்டுக்களில் பன்னிரண்டைக் குறிப்பது.

குயின்லாந்துக் கொட்டை : பெ. மரவகை.

குர்தெ : பார் 2. குதிரெ "குர்தெ குருடாயிருந்தாலும் கொள்ளு திங்கறதில்லே கொறயில்லே (குரதை).

குரணைஅரிசி : பெ. உடைந்த உருவம் சிதைந்த அரிசி.

குரணைப் பாக்கு : பெ. பொடிப் பாக்கு.

குரணை மருந்து : பெ. வாழைக் கன்றை நடுவதற்குமுன் நனைக்கப் பயன்படும் மருந்து.

குரம்பை : பெ. ஆட்டுவகை.

குராலு : பெ. 1. கழுதை, 2. வெள்ளிமூக்குக் குதிரை.

குரிச்சி : பெ. நாற்காலி (அரபு).

குருங்காடை : பெ. குருவிவகை.

குருசு : பெ. வெட்டிய புகையிலையில் முற்றாத அடித்தழை.

குருட்டாடு : பெ. ஒரு கண் உள்ள ஆடு.

குருட்டுக்கண்ணு : பெ. சரியாகத் தெரியாத கண்.

குருடிமலை : பெ. "குருடிமலெ மேல எறும்பூருதுன்னு சொன்னானாம்; கூட குட்டியும் போகுதுன்னானாம் மத்தவன்".

குருட்டுப்பஞ்சு : பெ. நோய். விழுந்த பருத்தி.

குருட்டுப்பருத்தி : பெ. நோய் விழுந்த பருத்தி.

குருட்டுப் பனங்காய் : பெ. உள்ளீடற்ற பனங்காய்.

குருட்டு லக்கு : பெ. எதிர்பாராமல் வரும் அதிர்ஷ்டம்.

குருடு : பெ. பருத்திச் செடியிலுள்ள பஞ்சின்மேல் வறண்ட இலை ஒட்டிக் கொள்ளுதல் 'செடியிலே குருடு நெறையா இருக்கு' 2. பார்வையின்மை "விடிஞ்சா தெரியுது பொண்ணு குருடா மாப்பிள்ளை குருடான்னு".

குருத்தழுகல் நோவு : பெ. பயிர் நோய் 'குருத்துக் கட்டெ உளுந்திடுச்சு'.

குருத்துக்கடி : பெ. பார். கருக்குத்தாள் உளுந்திட்டுது.

குருத்து நோவு அடுச்சிருச்சு (அடித்துவிட்டது) : வி.மு. பயிர் வெளுத்துப் போதல்.

குருத்துவோலை : பெ. இளமையான ஓலை "பழுத்தோ லெயைப் பாத்துக் குருத்தோலெ சிரிச்சுதாம்".

குருநாதசாமி : பெ. தெய்வம்.

குருப்பி : பெ. பெரிய கரண்டிவகை (தோசை திலுப்பி).

குரும்பை : பெ. காதினுள் திரளும் அழுக்கு, 2. பாக்கு,தெங்கு, பனைகளின் இளங்காய்.

குருவி : பெ. "குருவி குடிச்சா கொளம் வத்தாது".

குருவிக்காரன் : பெ. 1. நரிக்குறவன், 2. வேட்டைக்காரன்.

குருவி சொப்பு : பெ. சிறிய மண்பானை "குருவி சொப்பு செய்ய முடியாத கொசவ(ன்) குன்னிமொடா செய்ய ஆசெப் பட்டாப்பலே".

குருவிப்பீ : பெ. பார்.1. குரும்பை.

குரோட்டன்ஸ் : பெ. அலங்காரச் செடி.

குல்ட்டி : பெ.குள்ளமானவன்.

குல்மால் : பெ. ஏமாற்றல்.

குல்லா : பெ. தலைக்குல்லா (பெர்சியன்).

குல்லாப்பூச்சி : பெ. பூச்சிவகை.

குல்லாப் போடுதல் : தொ.பெ. ஏமாற்றுதல்.

குல இல்லா வாழை : பெ. வாழைவகை.

குலநோவு : பெ. பயிர்நோய்.

குலாப்பு : பெ. மண்ணெண்ணெய் விளக்கு (கொளாப்பு).

குலாம் : பெ. வசை (உருது).

குலுக்கி : குலுங்கி : வி.எ. 'நாய் குலிக்கிட்டு ஓடுது; நல்லது.

குலுக்குதல் : தொ.பெ. மஞ்சளுக்கு மெருகு ஏற்றித் தூசி நீக்குதல்.

குலுகை : பெ. மாத்திரை (குலுவை).

குலோத்துங்க சோழீஸ்வரர் கோவில் : பெ. குலோத்துங்க சோழன் நினைவாக, காங்கேய நாட்டிலுள்ள முத்தூரில் கட்டப்பட்ட கோவில்.

குல நூறுக் கிழங்கு : பெ. காடர் கிழங்குவகை.

குவளை : பெ. டம்ளர்.

குவை : பெ. வார்ப்படக் கருவி (குகை, மூசை).

குழட்டை : பெ. காட்டுக்கீரை.

குழாயர் கூட்டம் : பெ. ஓர் இனம்.

குழாவி : குழாய் : பெ. துளையுடைய பொருள்.

குழாவிக்கெணறு : குழாய்க்கிணறு : பெ. குழாயிறக்கி உண்டாக்கிய கிணறு.

குழி : பெ. பார். அணப்பு.

குழிஅடுப்பு : பெ. குழி செய்து போடும் அடுப்பு.

குழிங்கை : பெ. உள்ளங்கை.

குழிப்பணியாரம் : பெ. பலகாரவகை.

குழிபணியாரக்கல்லு : பெ. குழி குழியாய் உள்ள தோசைக் கல் வகை.

குழிபோடுதல் : பெ. வாழை, தென்னை போன்றவை நடமூன்று அடிவரை போடும் குழி.

குழிமேடு : பெ. பிரேதக்குழி (குழிவாசல்).

குழியங்காடு : பெ. மேட்டுப்பகுதியிலுள்ள காட்டின் கீழ்ப் பகுதி குழிந்து இருத்தல்.

குழியிலே போட : வியங்.வி.வசை.

குழீலும் : பெ. பிரேதக் குழியிலும் "குழீலும் புள்ளெ மடியிலும் புள்ளெ".

குழையறா(ள்) : வி.மு. மயக்குகிறாள் 'ரொம்பத்தா குழையறா'.

குள்ளக்கம்பு : பெ. கம்புவகை.

குள்ளநரி : பெ. நரிவகை.

குள்ளவாழை : பெ. வாழைவகை (கருவாழை).

குள்ளன் : பெ. பார். குல்ட்டி "கள்ளன நம்பினாலும் குள்ளன நம்பாதே".

குள்ளன்னன் : பெ. குள்ளநரி.

குளத்துப் பக்கம் போறே (போகிறேன்) : வி.மு. மலம் கழிக்கச் செல்கிறேன். (வெளிக்காட்டுக்குப் போறே).

குளரவுட்டு : குளிரவிட்டு : வி.எ. ‘அவ மனசெ குளரவுட்டுப் பாக்கலாம்’.

குளிச்சுட்டு : குளித்துவிட்டு : வி.எ.

குளியாமெ இருக்கா : வி.மு. கர்ப்பிணி ஆக இருக்கிறாள் (முழுகாமெ இருக்கா).

குளிப்பாட்டற சீரு : குளிப்பாட்டும் சீர் : பெ. சாவுச் சடங்கு.

குளுத்தி : குளிர்ச்சி : பெ.

குளோஸ்பண்ணு : ஏ.வி. கொலை செய்துவிடு.

குற்றாலத் துண்டு : பெ. ஆடைவகை.

குறவஞ்சிநாடகம் : பெ. கிராமக் கூத்து வகை.

குறி : பெ. ஆடையின் கரை.

குறிஏப்பு : பெ. கைம்மாத்து (குறியாப்பு).

குறிகாட்டுதல் : தொ. பெ. நல்லது கெட்டது குறித்த அறிகுறி ‘தவறு செய்தவன் கனவில் பாம்புகளின் வடிவம் தெரிதல்’.

குறிக்கேக்கணும் : வி.மு. கோடாங்கியிடம் சோதிடம் கேட்டல் ‘பையனுக்குக் குறிகேக்கணும் அப்பத்தா நிம்மதி’.

குறிச்சி : பெ. நாற்காலி வகை (குறிஞ்சி).

குறிஞ்சாம்பூ : குறிஞ்சிப் பூ : பெ. மலர்வகை.

குறிப்பு : பெ. ஜாதகம் ‘பையனுக்குக் குறிப்பு இருக்கா’.

குறியாடு : பெ. ஆண் செம்மறியாடு “குறியாடு தலெ குத்தினாப் பலே”.

குறியாப்பு : ஏரு : பெ. பார். ஏருக்கு ஏரு.

குறுக்கடி : வி. அடை. 1. இடையில் ‘நீ குறுக்கடி பேசாதே’ 2. ஒழுங்கற்றப் பேச்சு’

குறுங்காட்டி : வி.எ. வழிமறித்து ‘குறுக்காட்டி யிருப்பெ’

குறுக்கிடுதல் : தொ.பெ. பிறர்காரியத்தில் தலையிடுதல் ‘நீ குறுக்கிடாதே’.

குறுக்கு : பெ. நெடுமைக்கு மாறான அகலம்.

குறுக்குக்கம்பி : பெ. மாட்டுவண்டியின் பாகம்.

குறுக்குசால் : பெ. முதலில் ஒருமுறை ஒரு திசையில் விளா அறுப்பதற்குச் சால் என்று பெயர். அதற்குக் குறுக்காக அறுப்பது குறுக்குச்சால் (குறுக்கு ஓழவு).

குறுக்குச் சட்டம் : பெ. 1. குத்துக்கால்களுக்கு இடையிலுள்ள குறைந்த நீளமுள்ள கட்டில் சட்டம், 2. குறுக்காக இடும் உத்திரம், 3. கூரையின் குறுக்குக் கட்டை, 4. தறியின் இரு குத்துக் கால்களையும் இணைக்கும் மரம்.

குறுக்குத் தீனி : பெ. இடை நேரத்தில் உண்ணும் பலகாரம் (நொறுக்குத்தீனி).

குறுக்கு நெடுக்கு : வி. அடை. அங்கும் இங்கும் 'ஒண்ணு புரியாமெ அப்பப் புடுச்சு குறுக்கு நெடுக்கு அலையறா(ன்)'.

குறுக்குப் பலுவு : பெ. வண்டியின் பாகம்.

குறுக்கு மறுக்கு : வி. அடை. இடையிடையே "மச்சாண்டாருக்கு மணியம் பண்ணாடி குறுக்கு மறுக்கு".

குறுக்கு வாய்க்கா(ல்) : பெ. நெட்டு வாய்க்காலிலிருந்து பிரியும் கிளை வாய்க்கால்.

குறுக்கு வெட்டு : வி. அடை. இடைமறித்தல்.

குறுகுறு : இடை. 1. 'குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுங்குது'.

குறுந்தடி : பெ. "கோழி அடிக்கோணும்னா குறுந்தடியா வேணும்".

குறுப்பி : பெ. பார். காதுநோண்டி.

குறும்பர் : பெ. பழங்குடி இனம்.

குறுமட்டை : கூமட்டை : பெ. முட்டாள்.

குறுமட்டெ : கூமட்டெ, சைத்தான், கும்பாரன், மயிரு, மட்டெ, போடா பச்சோந்தி : நண்பர்களுக்குள் உரிமையுடன் திட்டிக் கொள்ளுதல்.

குறுமத்தை : பெ. காய்வகை.

குறுமொளகு : பெ. மிளகு.

குறுவிரியன் : பெ. சிறிய விரியன்வகை.

குன்ச்சு குல்லா நாயக்கர் : பெ. நாயக்கர் உட்பிரிவு.

குன்றுடையாக் கவுண்டர் : பெ. காவல் தெய்வம்.

குன்னம் : பெ. பனையேறு கருவி.

குன்னிமொடா : பெ. பெரிய மண்பானை.

குஜிலி : பெ. பழைய சாமான்கள் (அரபு).

குஜிலிக்கடை : பெ. பழைய சாமான்களின் கடை.

குஷ்டரோகி : பெ. தொழுநோயாளி.

குஷி : பெ. சந்தோஷம் (பெர்சியன்).

குஸ்தி : பெ. சண்டை.

கூ

கூகை : பெ. பறவை.

கூகைக்காய் : பெ. 'கூகை உட்கார்ந்ததால் நோய் விழுந்த தேங் காய் (கூகைத் தேங்காய்).

கூச்சம் : பெ. 1. அரியாந்திரம், 2. கட்டடத்திற்கு உதவும் சிறு மரக்கட்டை, 3. நாணுகை, 4. வீடுகளிலுள்ள தூண்.

கூசா : பெ. 1. கண்ணாடி பாட்டில்; ஹார்லிக்ஸ் பாட்டில், 2. திருகித் திறக்கக் கூடிய மூடியுள்ள பாத்திரம், 3. மண்பானை (அரபு).

கூசுது : வி.மு. 1. அவமானத்தால் நாணுதல், 2. ஒளியால் கூசுதல், 3. பல் கூசுதல்.

கூட்டம் : பெ. வழி வந்தவர்கள்.

கூட்டர் : ஸ்கூட்டர் : பெ. (ஆங்கிலம்).

கூட்டாங்கழி : பெ. உடைக்கப்பட்ட அரிசியும் கேழ்வரகும் சேர்த்துச் சமைத்த உணவு.

கூட்டிக் கழித்துப் பார்த்தல் : தொ. பெ. சராசரியாகப் பார்த்தல்.

கூட்டித்தொழில் : ஏ.வி. வாசலைப் பெருக்கிச் சாணம் கரைந்த நீரைத் தெளித்தல்.

கூட்டி வர : வி.எ. அழைத்துவர.

கூட்டு : பெ. 1. உணவுவகை, 2. ஊர் விசேடத்திற்கு ஊர் முழுவதும் வசூலிக்கப்படும் பணம்.

கூட்டு : ஏ.வி. பெருக்கு "குப்பெயிலே குடியிருந்தாலும் கூட்டிக் குடியிருக்கோணும்".

கூட்டுப்புழு : பெ. புழுவகை.

கூட்டுவண்டி : பெ. 1. குதிரை வண்டிபோலுள்ள ஒருமாடு பூட்டக்கூடிய அழகிய வண்டி (புதுப்பெயர் வில்வண்டி), 2. மேற்கூடுள்ள வண்டி.

கூட்டுவாங்க : கூட்டி வாருங்கள் : வி.மு.

கூட : இடை. 1. உடன் 'கூடவா', 2. மேற்பட 'கூட அஞ்சு ருபா போட்டுக் குடு சாமி'.

கூட இருந்தே குழி பறித்தல் : தொ. பெ. நண்பனைப் போல் பழகிப் பலி வாங்குதல்.

கூடக்கரை : பெ. இரு ஆற்றுநீர் கலக்குமிடம்.

கூடக்கூட : வி.அடை. உடனுக்குடன் 'கூடக் கூட வாயாடாதே'.

கூடப்போடு : ஏ.வி. 1. காணாமல் போடு 'காசெ கூடப் போட்டுட்டியா'.

2. மேற்படப் போடு 'ரெண்டு காயி கூடப்போடு'.

கூடம் : பெ. பார். 2. ஆசாரம்.

கூடி : வி.எ. சேர்ந்து 'அவுங்க ஒண்ணா கூடிட்டாங்க'.

கூடிப்போச்சு : கூடிவிட்டது : வி.மு. 'கூட்டம் கூடிப்போச்சு',

கூடியமட்டும் : வி. அடை. இயன்றவரை.

கூடு : பெ. வண்டியின் மேற் கூடாரம்.

கூடுகொம்பு : பெ. கொம்பு கூடியுள்ள மாடு அல்லது எருமை; முளைக்கும் போதே கூடியிருப்பின் நல்லது.

கூடுதொரை : பெ. நதிகள் கூடுமிடம்.

கூடுதொரை கோவில் : பெ. ஓர் ஆலயம் (சங்கமேஸ்வர ஸ்வாமி கோவில்).

கூடை : பெ. பிரம்பு முதலியவற்றால் பின்னப்பட்ட பெட்டி.

கூடைக்கருது : பெ. பண்ணையத்தாள், வண்ணான், நாவிதன், தண்டக்காரர் முதலியோர் அறுவடையின்போது அறுத்துக் கொள்ளும் ஒரு கூடைக்கதிர்.

கூடை தூத்தறது : தொ.பெ. கூடையைத் தலைக்குமேல் பிடித்துத் தூற்றுதல்.

கூண்டுப்புழு : பெ. புழுவகை.

கூண்டோடு : வி. அடை. அடியொடு, 'கண்டோட தொலச்சுப் புடுவே'.

கூணன் : பெ. 1. மலைவாழ் இனத்தவன், 2. முதுகு கூணி வளைந்தவன் 'உம் புருச கூணனடி'.

கூத்தாடி : பெ. நடிகன் "கூத்தாடிக்குக் கெழக்கே கண்ணு, கூலிக்காரனுக்கு மேக்கே கண்ணு".

கூத்தாடுது : வி.மு. மகிழ்ச்சி மிகுதல் 'மனசு ஏனோ கூத்தாடுது'

கூத்தாண்டவர் : பெ. ஒரு கிராம தேவதை.

கூத்தாண்டை : பெ. அர்ச்சுனன் மகன் அரவானுக்கு எடுக்கும் விழா (அரவான் பண்டிகை).

கூத்தியா : பெ. வைப்பாட்டி.

கூத்து : பெ. 1. குழப்பம், 2. கேலிக்கூத்து 'பெரிய கூத்து நடந்து போச்சு', 3. நாடகம் "ஆடாத கூத்து ஆடினாலும் காரியத்தில் கண்ணை வை".

கூதல் : பெ. குளிர் "கூதலுக்கில்லாத குறியுஞ்சீலையும் கூரெயெல்லாம் கட்டிக்கிட்டு ஆடுதாம்".

கூந்தல்பனை : பெ. அலங்கார மரம்.

கூந்தலடி : பெ. சில பெண்கள் வரிசையாய் நிற்க, மற்றொரு பெண் அவர்களுடைய கைகளுக்குப் படாமல் கடைசிப் பெண்ணைத் தொடுதல்; தொட்டால் இடம் மாற வேண்டும்.

கூப்பு : கூப்பன் : பெ. குடும்ப அட்டை (ஆங்கிலம்).

கூப்புட்டான் : வி.மு. பெண்ணை, ஆண் கெட்ட நோக்கத்தோடு அழைத்தல் 'அவளெ அவங் கூப்புட்டா(ன்)'.

கூப்புடுந் தொலை : பெ. எழுப்பும் குரல் கேட்கும் தூரம்.

கூம்படுக்கு : வி.எ. கூர்மையாய் ஒடுங்கும்படி அடுக்கு.

கூம்பு : பெ. முனைப்பகுதி.

கூமங்கூட்டு : பெ. கோம்புபோடும்போது முனை கூர்மையாய் இருத்தல்.

கூமட்டை : பெ. பார் குறுமட்டை "மொட்டெ சோத்தெ மோரு மறெக்கும் கூமட்டப் பொண்டாட்டியெ புள்ளெ மறெக்கும்".

கூமாச்சி ; பெ. கூர்மை.

கூரங்கோல் : பெ. காடர் கிழங்கு தோண்டுங் கருவி.

கூரை(றை) : பெ. ஆடை.

கூரைச்சாலை : பெ. முதலில் பனை ஓலையாலும் பின் கரும்புச் சோகை அல்லது கம்பின் தட்டால் வேய்ந்த சுமார் ஆறு ஆண்டு தாங்கக் கூடிய சாலை.

கூரைப்பொடவை : பெ. மணமகளுக்கு மணமகன் வீட்டார் கொடுக்கும் புடவை.

கூரைப்பேனு : பெ. எண்ணெய்ப்பிசுக்கு, அழுக்குப் படிவதால் துணியில் ஏற்படும் பேன்வகை.

கூரைவண்டு : பெ. பார் அட்டடை.

கூலி : பெ. 1. சடங்குகளின் போது பெறும் பணம்; இளங்காலிக் கூலி, தலையாரிக் கூலி, பந்தக்கலி, வந்த கூலி. எ-டு. சக்கிலியன், கவுண்டன், 2. வேலைக்குப் பெறும் ஊதியம் "கூலிக்கு மாரடிக்கறாப்பலே".

கூலிக்காரன் : பெ. தினக்கூலி வீதம் பெறுபவன்.

கூலிமுத்து : பெ. இராஜாப் பாண்டியில் இராஜா மற்றவர் கட்டுக் கொடுக்கும் முத்தின் பெயர்.

கூலி வள்ளம் : பெ. கூலியாட்களுக்குப் படிஅளக்கப் பயன் படுத்துக் கூடிய அளவு குறைந்த வள்ளம்.

கூழ்காச்சி ஊத்தறது : தொ.பெ. மாரியம்மனுக்கு விழா நடக்கும் போது பலரும் கூழ் காய்ச்சி தானம் செய்தல்.

கூழி : பெ. காளை.

கூழி சேத்தறது : தொ.பெ. பசுமாட்டைக் காளையுடன் சேர்க்கைக்காக இணைத்தல்.

கூழு : பெ. கஞ்சி "குடிக்கறது கூழு கொப்பளிக்கறது பன்னீரு".

கூழையாடு : பெ. புள்ளிமான் நிறமுள்ள ஆட்டுவகை.

கூளக் கும்பிடு : கூழைக்கும்பிடு : பெ. போலிவணக்கம்.

கூளம் : பெ. பதர்.

கூளை : பெ. பார். குல்ட்டி.

கூறு : பெ. 1. அறிவு "கூறுகெட்ட கழுதெ கட்டுப்பில்லு தின்னாப்பலே". 2. சிறுகுவியல் "காய்கறிக் கூறு', 3. பிளவு பட்ட துண்டு 'உன்னெ கூறு போட்டிடுவே'.

கூறுகெட்டவனே : வசை.

கூன்வண்டு : பெ. வண்டுவகை.

கூனுக்கருவாடு : பெ. பார். எரால்.

## கெ

கெசம் : கெஜம் : பெ. இரண்டு முழங்கொண்ட அளவு.

கெஞ்சரனே : கெஞ்சுகின்றேனே : வி.மு.

கெட்ட : பெ.எ. அழிந்த "பட்ட காலிலேயே படும் கெட்ட குடியே கெடும்".

கெட்ட கோவம் : பெ. மிக்க கோபம்.

கெட்ட நடத்தை : பெ. தீயொழுக்கம்.

கெட்ட மிருகம் : பெ. கொடிய விலங்கு.

கெட்ட வியாதி : பெ. கொடிய நோய்.

கெட்டி சாயம் : பெ. நீங்காத சாயம்.

கெட்டி சீம்பு : பெ.முதல்நாள் சீமப்பாலில் இனிப்புச் சேர்த்துக் காய்ச்சிய கெட்டியான சீம்புவகை.

கெட்டிப்பால் : பெ. நீர் கலக்காத பால்.

கெட்டிமேளம் : பெ. விசேடத்திற்கான மேளம்.

கெட்டுப்போச்சு : வி.மு.1. அழிதல் 'விளைச்சல் கெட்டுப் போச்சு'. 2. அழுகிப்போதல், 3. ஒழுக்கங்கெடுதல் 'பொண்ணு கெட்டுப்போச்சு', 4. வறுமையுறுதல் 'அது (அவள் ) ரொம்ப கெட்டுப் போச்சு'.

கெடக்கது வுடு : வி.மு. போகட்டும் விடு.

கெடக்கும் : வி.மு. இருக்கும் 'எங்கியாவது கெடக்கும்'

கெடங்கு : கிடங்கு : பெ. பத்து முழம் அளவு நீருள்ள குழி.

கெடந்த கேட்டுக்கு : வி. அடை. தாழ்நிலையைக் குறிக்கும் இழிச்சொல் "நாய் கெடந்த கேட்டுக்கு நாயித்துத் கெழமெ ஒரு சந்தி".

கெடமரம் : பெ. கரும்பாலைக் கருவி.

கெடவு : கெடு : பெ. 1. தவணை 'ரெண்டு கெடவுலெ கட்டிரு', 2. முறை 'உன்னெ எத்தன கெடவு கேக்கறது' (கெடுவு).

கெடாக்கன்னு : பெ. கன்று, முதல் கன்று ஈனும் பருவம் வரையுள்ள ஆண் எருமைக் கன்று (கெடாரிக்கன்னு, கோனாக் கன்னு).

கெடாக்குட்டி : பெ. ஆண் ஆட்டுக்குட்டி.

கெடாய் : கிடாய் : பெ. வளர்ந்த ஆண் ஆடு.

கெடாப் பொங்க(ல்) விருந்து : பெ. பொங்கலிட்டுப் பூசை செய்து ஆடுவெட்டிப் போடும் விருந்து.

கெடாரி : பெ. பெண் எருமைக் கன்று (பொட்டை).

கெடாவெட்டு : பெ. விழாச் சடங்கு. அம்மன் அழைப்பின் போதும், கம்பம் பிடுங்கும்போதும், குண்டம் மூடும் போதும், விழா முடிந்தபின்னும் ஆடு வெட்டப் படுதல்.

கெடும்பு : பெ. துர்புத்தி.

கெடுபுடி : பெ. பார். கிராக்கி 1, 2 (உருது).

கெடுவழி தூக்கிடுது : வி.மு. போதிய மழை கிடைக்காமல் உழவு ஓட்டி, விதைத்த பயிர் முளைக்காமல் கருகுதல்.

கெடுவு : பெ.முறை (தெலுங்கு).

கெடெ : இடை : பெ. 1. இடம் 'ஒரு கெடெ இருக்க மாட்டியா', 2. வேளைக்கு "நரிக்கு எடங்குடுத்தா கெடெக்கி ரண்டு ஆடு கேக்கும்".

கெடையாது : கிடையாது : வி.மு.

கெண்டை : பெ. 1. கால்தசை "கெண்டெ பெருத்தா கொண்டவனுக்கு ஆகாது" (கெண்டக்காலு), 2. நெசவுத்தாறு, 3. பச்சையின் வடிவம், 4. மீன்.

கெண்டை உழுந்திடுச்சு : கெண்டை விழுந்துவிட்டது : தண்டில் நோய்விழுதல். எ-டு. புகையிலை (கெண்டை நோவு).

கெண்டை சுத்தறது : தொ.பெ. பூட்டுத் தளையில் வரும் நூலைக் கருதூசியில் சாட்டை மூலம் சுற்றுதல்.

கெண்டை புடுக்கிது : கெண்டை பிடிக்கின்றது : வி.மு.

கெணத்தடி : பெ. கிணற்றைச் சுற்றிய பகுதி (கெணத்து மேடு).

கெணத்து மண் எடுக்கற கூடை : பெ. கூடைவகை.

கெணத்துவளி : கிணறு : பெ. "வேறே ஊட்டுக்கு வெட்ற கெணத்துவளி சாச்சியா".

கெத்துது : கத்துது : வி.மு.

கெதி : கதி : பெ. 1. சக்தி 'பணம் கொடுக்க கெதியில்லே', 2. நிலை "கெதிகெட்ட மாப்பிள்ளெக்கி எருமுட்டெ பணியாரம்".

கெப்பாசிட்டி : பெ. 1. கொள்ளளவு, 2. திறமை (ஆங்கிலம்).

கெளரகம் : கிரகம் : பெ.

கெளரமமே தீந்துது : வி.மு. தொல்லைவிட்டது.

கெரங்கு : குரங்கு : பெ. "தாங்கெட்ட கெரங்கு வனத்தையும் சேத்து கெடுத்துதா".

கெரசி : பெ. நீளக்குச்சியின் நுனியில் சிறு கூடை கட்டப்பட்ட கருவி; கரும்பாலையில் மட்டியை எடுத்து ஊற்றுவது.

கெரடமொகம் : பெ. நெற்றியில் மனிதனுக்கு நாமம் போட்டது போல் மூன்று சுழி இருத்தல்.

கெரடி : கரடி : பெ.

கெரெமிச்சி : கழித்து : வி.எ. 'ரெண்டு நா கெரமிச்சை வா'.

கெராக்கி பொம்பளெ : கிராக்கிப் பெண்பிள்ளை : பெ. 1. அடங்காப்பிடாரி, வாயாடி.

கெராம்புப்பூ : கிராம்பு : பெ.

கெரிக்கே : பெ. அறுகு.

கெருடாலம் : கருடன் : பெ. "கழுத்து வெளுத்தால் காகம் கெருடாலனாகுமா".

கெல்டு : பெ.கிழவன், கிழவி.

கெலந்து : கலந்து : வி.எ.

கெலித்தல் : தொ.பெ. வெல்லுதல் (செயித்தல்).

கெலிப்பு : பெ. மகிழ்ச்சி.

கெளவுரவம் : கெளரவம் : பெ.

கெளவுளி செல்லுது : கவுளி சொல்கிறது : வி.மு. பல்லி ஒலி கொடுத்தல்; அது சொல்லும் திசைக்கேற்ப நல்லது கெட்டது முடிவு எடுத்தல்.

கெவுளி வாக்கு : பெ. பூவரங் கேட்டபின் பல்லி கூறும் பலனைக் கேட்டு விழா நடத்துதல் 'அரியப்பம் பாளைய மாரி யம்மன் விழா'.

*கெவுனி : கவனி : ஏ.வி.*

*கெழக்கே வெளுத்திருச்சு : கிழக்கில் வெளுத்துவிட்டது : வி.மு. விடியற் காலை (கெளக்கே வெளுத்து வந்தாச்சு).*

*கெழங்கு அழுகல் நோவு : பெ. பயிர்நோய். எ-டு. மஞ்சள்.*

*கெழடு : பெ. 1. கிழவன், 2. முதுமை 'கெழடு தட்டிப் போச்சு'.*

*கெழபொறமா : கிழக்குப் பக்கமாக : வி. அடை. (கெழவரொ).*

*கெழவன் : கிழவன் : பெ.*

*கெழவி : கிழவி : பெ.*

*கெழுத்தி : பெ. வளமை 'பையே கெழுத்தியா இருக்கா'.*

*கெளக்கத்துக்காரர் : கிழக்குப் பகுதியினர் : பெ.*

*கெளச்சுட்டா : களைத்துவிட்டாள் : வி.மு. கர்ப்பத்தைக் குலைத்தல், 'நேத்து கெளச்சுட்டு வந்துட்டா'.*

*கெளச்சுவிடுதல் : கிளறிவிடுதல் : தொ.பெ.*

*கெளப்புதல் : தொ. பெ. தூண்டுதல் 'அவனெ கெளப்பி வுடாதே', 'கோபத்தெ கெளராதே'.*

*கெளம்பு : கிளம்பு : ஏ.வி.*

*கெளாக்கா : பெ. கிளாச்செடியின் காய் "நாளக்கி கெடைக்கும் மாங்காயெ் விட இன்னிக்கிக் கெடைக்கும் கெளாக்கா மேல்" (கெளாப்பழம்).*

*கெளாசு : பெ. பார். குவளை.*

*கெளை ஆடு : பெ. பார். காட்டாடு.*

*கெளுத்தி : பெ. மீன்வகை.*

*கெளையவுட்டு : வி.எ. உறவைவிட்டு 'கெளையவுட்டுத் தனியா வந்துட்டா(ன்)'.*

## கே

*கேக்கலியே : கேட்கவில்லையே : வி.மு.*

*கேக்கறவியோ : கேட்கின்றவர்கள் : வி.அ.பெ.*

*கேக்கிரியா : கேட்கின்றாயா : வி.மு.*

கேக்கும் : வி.மு. குணப்படுத்தும் : கட்டுப்படுத்தும் 'காச்சலுக்கு இது கேக்கும்' (கண்டிக்கும் ) கேசரிபாத் பெ. உணவு வகை (மராத்தி).

கேசு : பெ. வழக்கு (ஆங்கிலம்)

கேட்டுகம்பி : பெ. குதிரை வண்டியின் பாகம் (கேட் ஆங்கிலம்).

கேட்டுவால் : பெ. கிணற்றிலுள்ள இயந்திரத்தின் பாகம்.

கேணச்சி : பெ. முட்டாள் பெண்மணி.

கேணை : பெ. பார். கிராங்கு "கேக்கறவங்க கேணையாயிருந்தா கடுகு மொளகு சோறாகும்" - (கேணன்).

கேந்தி : பெ. ஆசைவெறி, ஏக்கம் 'பலகாரமுனா அவ்வளவு கேந்தியா'.

கேப்பமாரி : கேப் மாரி : பெ. வசை (ஜில்லா கேப்மாரி) கேப் பாரு பேச்செக் கேட்டுக்கிட்டு அலையறா(ன்) : சொல் புத்தி கேட்டு நடப்பவனைக் குறித்தல்.

கேப்பு : பெ. இடைவெளி (ஆங்கிலம்).

கேப்பே : கேட்பேன் : வி.மு.

கேப்பை : பெ. கேழ்வரகு.

கேப்மாரித்தனம் : தொ.பெ. ஒழுங்கீனம்.

கேம்பு : பெ. அணை (டேம்) "கேக்கறவெ கேணனா இருந்தா கேம்புலெ நெய் வடியுதும்பா(ன்)" (டேம் - ஆங்கிலம்).

கேரள பட்சி ஆட்டம் : பெ. விளையாட்டுவகை.

கேரள வெத்திலெ : பெ. வெற்றிலைவகை.

கேரள வெளக்கு : பெ. பித்தளை விளக்குவகை.

கேலி : பெ. பரிகாசம்.

கேவமா : வி. அடை. ஞாபகமாக.

கேவுரு : பெ. பார் கேப்பை "கேவுருலெ நெய் வடியுதுன்னா கேக்கறவனுக்கு மதியெங்க போச்சு".

கேள்வி கேட்க ஆள் இல்லே : கேள்விக் கேட்பாரற்றவனைக் குறித்தல்.

கேள்வெ : கேள்வி : பெ.

## கை

கை அஸ்த்தம் : பெ. அம்மனுக்குப்போடும் வெள்ளியால் ஆன கைக்கவசம்.

கை ஓடு : பெ. ஒருவகை ஓடு.

கைக்கச்சை ஆடுதல் : தொ.பெ. குண்டைக் கையால் சுண்டி விளையாடுதல்.

கைக்கட்டு : பெ. 1. கைகளைக் கட்டிக் கொள்ளுதல், 2. பிணத்தின் கைப்பெருவிரல் இரண்டையும் இணைத்துக் கட்டுதல்.

கைக்கரண்டி : பெ. பார். அன்னக்குத்தி.

கைக்களை : பெ. சேற்றில் கையால் எடுங்குங் களை.

கைக்காசு : பெ. சிறுசேமிப்பு.

கைக்கு எட்டுவது வாய்க்கு எட்டலெ : அடைந்தும் அனு பவிக்க முடியாத நிலை.

கைக்கு ஒதவாது : வி.மு. சமயத்திற்குப் பயன்படாது, 'எத்தன இருந்தாலும் கைக்கு ஒதவாது'.

கைக்குத்து : பெ. கைமுட்டியால் தாக்குகை.

கைக்குள்ளே போட்டுக்கிட்டா : வி.மு. வசியம் செய்து தன்வய மாக்கிக் கொண்டாள்.

கைக்கூலி : கையூட்டு : பெ.

கைகண்ட : பெ. அடை. அனுபவ சித்தமான 'கை கண்ட மருந்து'.

கை கழுவுதல் : தொ.பெ. 1. இறப்பு 'அப்பா திடீர்னு கை கழுவிட்டார்', 2. உறவை முடித்துக் கொள்ளுதல் 'நாலு புள்ளையோட அவளெ கை கழுவிட்டார், 3.பொறுப்பை நீக்கிக் கொள்ளுதல் 'அவங்கை கழு விட்டா இனி எதையும் செய்ய மாட்டா(ன்)'.

கை காச்சுதல் : தொ. பெ. சம்பா விளையாட்டில் தோற்றவரை வென்றவர் - தண்டனைக்குள்ளாக்குதல். அதாவது தோற்றவர் அடிக்குத் தப்பிப் பழம் ஆன நான்கு காயை யும், ஆடிய நான்கு காயையும் கட்டத்திற்குள் இருந்து எடுத்தல்.

கைகாட்டி : பெ. அடையாளங் குறிக்கும் கைகாட்டி மரம்.

கைகாரன் : பெ. நல்வழியற்ற தந்திரமான திறமையுடையவன்.

கைக்காரி : பெ. தந்திரமிக்கவள்

கைக்கால் வெளங்கலெ : கை கால் விளங்கவில்லை : வி.மு. பக்கவாதம்.

கைகுளுர : வி. அடை. தாராளமாய் 'கை குளுர செலவு செய் யணும்'.

கை கூடுதல் : தொ.பெ. சித்தியாதல்.

கைகொட்டி : கைகளைத் தட்டி : வி.எ.

கைகொடுத்தல் : தொ. பெ. உதவி செய்தல் 'நமக்குக் கை கொடுக்க யார் இருக்கறா'.

கைகோர்த்தல் : தொ. பெ. கை பிணைத்தல்.

கைகோர்வி : பெ. மணமக்களின் சுண்டு விரல்களைப் பிணைத் தல். எ-டு. பள்ளர், கவுண்டர்.

கைகோர்வி வாங்கிவுடுதல் : தொ.பெ. மணமக்களின் கையை அரிசியில் இருந்து எடுத்தல்.

கைகோர்வி உடறியவோ வாங்கோ : கைகோர்வி விடுகின்றவர்கள் வாருங்கள் : மணமக்கள் அரிசியில் கை கோத்து நிற்க அனைவரும் மணமக்களுக்கு அரிசி போடும் சடங்கு.

கைக்கோளன் : பெ. ஓர் இனம்.

கைச்சண்டை : பெ. பொருதல்.

கைச்சாடை : பெ. இரகசியமாகக் கை காட்டுங்குறிப்பு.

கைச்சாலை : பெ. 1. குடிசைவீடு, 2. சிறிய அறை, 3. பந்தல், 4. வீட்டிற்குள் உள்ள ஒரு அறை,

கைச்சுத்தி : பெ. சுத்தியல்வகை.

கைச்சுழட்டு : பெ. நெசவுக்கருவி.

கைச்செண்டு : பெ. மணமக்கள் கையில் கொடுக்கும் மலரணி.

கைச்செலவு : பெ. 1. சில்லறைச் செலவு 'கைச்செலவுக்குத் தா பத்து ரூவா வெச்சிருக்கே', 2. சொந்தச் செலவு - காப்பி, பீடி, வெற்றிலைப் பாக்கு முதலியன பெறுதல்.

கைசேரலை : வி.மு. மீண்டும் கிடைக்கவில்லை 'போட்ட முதல் கை சேரலெ' .

கைசோந்து : வி.எ. கை தளர்ந்து.

கைத்தடி : பெ. 1. ஊன்றுகோல், 2. சிறுதடி.

கைத்தறி வேட்டி : பெ. ஆடைவகை.

கை தவறிருச்சு : கைதவறுதல் : தொ. பெ. 1. இறத்தல் 'கொழந்தே கை தவறிருச்சு', 2. காணாமல் போதல் 'பொருள் கை தவறிருச்சு'.

கைதாழி : பெ. நீர் காய வைக்கும் மண்பானை.

கைதாரை : பெ. தாரை வார்த்தல்.

கை தெவயரது : தொ.பெ. தாய விளையாட்டில் ஆடுபவர்கள் ஆட்டத்தைத் தொடங்க முதலில் 'ஒன்று' போடுதல் - அதாவது காய் ஒற்றையில் விழ வேண்டும்.

கை நனைக்கலெ : வி.மு. சாப்பிடவில்லை 'கை நனச்சு மூணு நாள்ஆச்சு'.

கைநாட்டு : பெ. கைரேகை வைத்தல்.

கை நீட்டுதல் : தொ.பெ. 1. அடிக்கக் கையோங்குதல், 2. திருடுதல்.

கைநீளம் : பெ. அடிக்குங் குணம் 'அவளுக்கு கை நீளம்' எப்பவும் ரெண்டு போட்டுட்டெ இருக்கறா(ள்), 2. தாராளம், 3. திருட்டுக்குணம்.

கைப்பத்திட்டா : வி.மு. தன் வசமாக்கிக் கொண்டான்.

கைப்பலகை : பெ. கரும்பாலைக் கருவி.

கைப்பால் மாடு : பெ. கன்று இறந்த பசு (கமலம் - செங்கல்பட்டு).

கைப்பாவை : பெ. தீபம் ஏந்திய பெண் வடிவிலுள்ள பித்தளை விளக்கு.

கைப்புடி : கைப்பிடி : பெ. அளக்கும்போது மேலே கையால் பிடிக்க உதவுவது, 2. ஆயுதம் முதலியவற்றின் பிடி, 3. குதிரை வண்டியின் பாகம்.

கைப்புள்ளக்காரி : பெ. சிறு குழந்தையை உடையவள்.

கைப்பூடு : பெ. கையால் பிடுங்கும் களைவகை.

கைப்பொழுது : பெ. சூரியன் மறையும் நேரம்.

கைபாத்தல் : தொ.பெ. இரேகை பார்த்தல்.

கைபுடிச்சீரு : பெ. திருமணச் சடங்கு.

கைபுடியாப் புடிச்சே(ன்) : வி.மு. கையும் களவுமாய்ப் பிடித்தேன்.

கைப்பை : பெ. துணிப்பை.

கைபோடுதல் : தொ.பெ. 1. பிறரறியாமல் கைகளை வஸ்திரத்தால் மறைத்துக் கொண்டு கைக்குறிப்பால் மாட்டின் விலை பேசுதல், 2. விளையாட்டுச் சொல்.

கைமரம் : பெ. 1. குதிரை வண்டியின் பாகம், 2. வீட்டுக் கூரையின் கை.

கைமருந்து : பெ. 1. பிறருக்கு உணவுடன் கொடுக்கும் வசிய மருந்து, 2. வீட்டில் தயாரிக்கும் கசாயம் முதலிய மருந்துகள்.

கைமாத்து : கைமாற்று : பெ. 1. கைக்கடன், 2. பரிவர்த்தனை.

கைமாறிடுச்சு : வி.மு. பரிவர்த்தனை செய்தல்.

கைம்மாறு : பெ. பிரதியுகபாரம்.

கைமொகஞ்சா : வி.எ. கையில் முகம் புதைத்தால்.

கையாலம் : பெ. குறுகிய இடம்.

கைய குறுக்கிப் போடறது : தொ.பெ. தூற்றும்போது தானியத்தை குறைவாக விடுதல்

கைய தூக்கிப்போடறது : தொ.பெ. தூற்றும்போது தானியத்தை மிகுதியாக விடுதல்.

கையமத்த : வி.அடை. விடைகூற.

கைய வச்சு எடுத்தனா எந்த ஆசுபத்திரியிலும் எடுக்க மாட்டாங்க : வசை.

கையாலாகாதவன் : வி.அ.பெ. வேலை செய்யும் திறமையற்றவன்.

கையாள் : பெ. குற்றேவல் செய்வோன்.

கையிலே புடிச்ச முடியாது : வி.மு. ஆணவமாக நடப்பவனைக் குறித்தல், 'இன்னு நல்ல பொண்டாட்டி கெடச்சிருந்தா உன்னெ கையிலெ புடிக்க முடியாது, 2. மிகு மகிழ்ச்சியில் இருப்பவனைக் குறித்தல், 'இன்னைக்கு அவனெ கையுலெ புடிக்க முடியாது'.

கையிலெ போட்டுகிட்டா : கையில் போட்டுக் கொண்டாள் : வி.மு. ஒருவனைத் தீயவழியில் தனக்கு உரிமையாக்கிக் கொள்ளுதல் 'எம் புருசனெ கையிலெ போட்டுகிட்டா'.

கையிடற நேரம் : பெ. 'வேலையாட்கள் வேலையை நிறுத்தும் நேரம் : பகல் ஒருமணி மாலை ஆறுமணி ஆகியன.

கையுரிய : வி.எ. கைத்தோல் உரிய 'கையுரிய நெல்லுக் குத்தி'.

கையெ கடிக்குது : வி.மு. எதிர்பார்த்ததற்கு மேல் செலவாதல்.

கையெ ஊரப்போட்டுடு : வாங்க : வி.மு. வேலையை நிறுத்திக் கொள்வார்கள் 'நா(ன்) போகுலேனா ஆளுக கையெ ஊரப் போட்டுடுவாங்க.'

கையேந்துதல் : தொ.பெ. பிச்சை எடுத்தல்.

கையொடிஞ்ச மாதிரி : வி.அடை. 'நீ இல்லாதது கை யொடிஞ்ச மாதிரி இருக்கு'.

கையோட : வி. அடை. உடன், 'கையோட கூட்டிட்டு வா' 2. கூடவே 'கையோட இதையும் செஞ்சிரு'.

கையோடு புடுச்சுட்டுவா : ஏ.வி. உடன் அழைத்து வா.

கைரேகை : பெ. கையில் அமைந்திருக்கும் வரை (ரேகைகள். காசு, பணரேகை, குருமேடு, குரு ரேகை, சக்கர ரேகை, சாலமான் ரேகை, யோகரேகை).

கைலலப்பிடி : இடை. இசைநிறைச் சொல்.

கைலாகு : பெ. திறமை (மராத்தி).

கைலாசம் : பெ. விண்ணுலகம்.

கைலி : பெ. பலவர்ணமுள்ள ஆடை (உருது).

கைவச்சுட்டான் : வி.மு.1. அடித்துவிட்டான், 2. திருடிவிட்டான்.

கைவச்சுட்டாங்க : வி.மு. அடிதுடி போட்டுக் கொள்கிறார்கள் 'இரண்டுபேரும் கை வச்சுட்டாங்க'.

கைவந்த கலை : பெ. 'பொய் பேசறது இவனுக்குக் கைவந்த கலை'.

கைவரிசை : பெ. 1. சீட்டாட்டத்தில் முதலில் சீட்டை இறக்கும் உரிமை.

கைவரிசையெ காட்டிட்டா(ன்) : வி.மு. 1. குண இயல்பை வெளிப்படுத்துதல் 'கூடவே இருந்துட்டுக் கைவரிசையெ காட்டிட்டா', 2. திருடுதல்.

கைவரும் : வி.மு. திறம்பட வரும்.

கைவாய்க்கா(ல்) : பெ. பெரிய வாய்க்காலில் பிரியும் இறுதி வாய்க்கால் (கடைசி வாய்க்கா, சின்னக்காவா).

கைவிட்டம் : பெ. வீட்டின் குறுக்குவிட்டம்.

கைவீச்சுக் கவுறு : பெ. கயிறுவகை.

கைவுட்டாச்சு : வி.மு. 1. விட்டொழிதல், 2. வேலையை நிறுத்துதல் 'ஏலே ஒண்ணுகூட ஆகலெ அதுக்குள்ளே கைவுட்டாச்சு'.

கைவெதப்பு : கைவிதைப்பு : தொ.பெ. வியாபாரி வேண்டிய வாழைக் குலைகளை அதுசமயம் பணம் கொடுத்து வெட்டுதல்.

கை வெளக்கு எடுக்கறது : தொ.பெ. விழாச் சமயம் கையில் விளக்கு எடுத்து ஊர்வலத்தில் செல்லுதல்.

கொக்கரக்கொம்பு : கொக்கரைக் கொம்பு : பெ. 1. மாட்டின் ஒரு கொம்பு வளைந்து ஒரு கொம்பு வளையாமல் இருத்தல், 2. மாட்டின் கொம்புகள் பாதிக்குமேல் வளைதல், 3. மேல்பகுதி மட்டும் வளைதல்.

கொக்கரச்சிடுச்சு : வி.மு. நீரில் இருந்ததனால் கைகால் விரைத்தல்.

கொக்கரிக் கொம்பு : பெ. கொம்பின் நுனி வளைந்த மாடு.

கொக்கரை : பெ. 1. கல்லாட்டம், 2. வளைவு.

கொக்கி : பெ. 1. ஏற்றம் இறைக்குங் கருவி, 2. நுகத்தையும் சங்கிலியையும் இணைக்கும் உழவுக் கருவி, 3. மூட்டை தூக்க, தொட்டில் மாட்ட முதலியவைகளுக்குப் பயன் படும் கொக்கி.

கொக்காணி : பெ. 1. அழகு காட்டுதல், 2. சிறுவர் பழித்துக் காட்டுதல்.

கொக்கி எருமை : பெ. கொம்பு கீழ்நோக்கி வளைந்த எருமை.

கொக்கிக் கொம்பு : பெ. மாட்டின் கொம்பு முன்னோக்கி வளைதல்; நல்லது.

கொக்கிப் பல்லு : பெ. மாட்டின் கடைவாய்ப் பல் இரண்டும் கொக்கிபோல் இருத்தல்; இங்ஙனம் இருப்பின் சரியாக அசைபோடப்படாமல் தீவனம் வெளியே வந்துவிடும்.

கொக்கு நோவு : பெ. பயிரின் மேல் வெண்மை நிறம் படியும் நோய் வகை எ-டு, நெல்.

கொங்க மூப்பர் : பெ. ஓர் இனம்.

கொங்காடை : பெ. சாக்கை நீள்வசத்தில் உள்மடக்கி தலையில் மழையைத் தாங்க கவித்தல் "கொங்காடெக்குள்ளே கல்லீடு" (கொங்காணி).

கொங்காளியம்மன் : பெ. விழா எடுக்கப்படும் சிறுதெய்வம்.

கொங்கு : பெ. கோயமுத்தூர் சேலம் மைசூர் சீமையின் ஒரு பகுதியுமாகிய தமிழ்நாடு.

கொங்குச்சாணான் : பெ. பார். கொங்க மூப்பர்.

கொங்குச்செட்டி : பெ. ஓர். இனம்.

கொங்குமொதலி : பெ. ஓர். இனம்.

கொங்கு வெள்ளாளர் : பெ. கொங்கு நாட்டு வேளாளர்.

கொச்சு : பெ. குழம்புவகை (இந்துஸ்தானி).

கொசவன் அடுப்பு : பெ. மண் அடுப்பு

கொசவன் ஓடு : பெ. குயவன் ஓடு, பார். கை ஓடு.

கொசுகொசுன்னு : வி.அடை 'மழெ கொசுகொசுன்னு பேயுது',

கொசுத்துளி : வி.அடை மழைத்தூறல் 'கொசுத்துளி துளிக்குது'.

கொசுத்தேன் : பெ. கொசு கட்டும் தேன்.

கொசுரு : குசர் : பெ. பொருளை வாங்கியவருக்குக் கொடுக்கும் சிறிதளவு அதிகப்படியான பொருள்.

கொசுவணம் : பெ. ஓரங்கொய்து சுருக்கப்பட்ட உடை (கொசுவம். வகை : முன் கொசுவனம், பின் கொசுவனம்).

கொசுவலு : பெ. குயவர் வாழும் பகுதி.

கொசுவலுக்குப் போற சீரு : பெ. குயவன் வீட்டிற்குச்சென்று புதுப்பானை வாங்கி வரும் திருமணச் சடங்கு. எ-டு. வேளாளர்.

கொசுவலை : பெ. கொசு வராமல் தடுக்கும் வலை.

கொசுவன் : குயவன் : பெ. "கொழு[illegible]வோட போனா இழுத்து குலைமேலே போடு"

கொஞ்ச(ம்) : பெ. அடை.சிறிது "கொஞ்சடெங் குடுத்தா மொளகா அரச்சிடுவே".

கொஞ்சநஞ்சம் : பெ. அடை. சிறிதளவு.

கொஞ்சப்போல : பெ. அடை. சிறிது (கொஞ்சூண்டு).

கொஞ்சுட்டியா : கொய்துவிட்டாயா : வி.மு.

கொட்டம் : பெ. 1. பார். 1, 3 ஆசாரம், 2. இறுமாப்பு "மகன் செத்தாலும் சாகட்டும் மருமவள் கொட்டம் அடங்கி னால் போதும்" 3. சேட்டை, 4. மாட்டுக்கு மருந்து கொடுக்கும் மூங்கிற் குழாய்.

கொட்டமுத்து : பெ. ஆமணக்குவிதை (கொட்டமரம்).

கொட்டமுத்துத் தாலி : பெ. இரு கொம்புடைய சிறுதாலி, எ-டு. பள்ளர்.

கொட்டலா : பெ. செருப்புத்தைக்கும் கருவி (மழுவு).

கொட்டளாவு : பெ. வெற்றிலை பாக்கு இடிக்குங் கருவி (கொட்டாப்புளி), கொட்டுப்புடி).

கொட்டாங்குச்சி : பெ. பருப்பு எடுக்கப்பட்ட தேங்காய் மூடி (தேங்காத்தொட்டி, தொட்டாங்குச்சி, தொட்டி).

கொட்டாப்புடி : பெ. உளிமேல் அடிக்கும் ஆயுதம். .

கொட்டாப்புளியாட்டா உக்காந்திருக்கிறா(ன்) : கூறுவதைக் காதில் வாங்காதவனைக் குறித்தல்.

கொட்டாயி : 1. திரையரங்கம், 2. வாயைத் திறந்து வெளியிடும் கொட்டாவி.

கொட்டி ஈச்சை : பெ. மரவகை.

கொட்டிக்கோ : ஏ.வி. சாப்பிடு 'வந்து கொட்டிக்கோ'.

கொட்டியா கெடக்குது (கிடக்கின்றது) : வி.மு. உங்களுக்குத் தூக்கிக் குடுக்க கொட்டியா கெடக்குது'

கொட்டு : பெ. வாத்தியம் (தெலுங்கு).

கொட்டு : ஏ.வி. 1. குட்டு "கொட்டுப்பட்டாலும் மோதிரக் கையிலெ கொட்டுப்படணும்" 2. வாத்தியத்தை அடித்தல்.

கொட்டுக்காலி : பெ. நிலம் அதிர நடப்பவள்.

கொட்டுக்கூடை : பெ. கிண்ண வடிவான கூடை.

கொட்டுப் பருத்தி : பெ. நோய்விழுந்து சரியாக வெடிக்காத பருத்தி.

கொட்டு மொழக்கு : பெ. 1. ஆணவம், 2. ஆரவாரம் 'அவனோட கொட்டு மொழக்கு ரொம்ப ஆயிடுச்சு', 3. வாத்திய கோஷம் "கோயில் சின்னதானாலும் கொட்டு மொழக்கு பெரிசு".

கொட்டுப்பாக்கு : பெ. தோலோடு உள்ளபாக்கு. "பத்துப் பணம் குடுத்தவன் பாத்துட்டிருந்தானாம் கொட்டைப்பாக்கு குடுத்தவன் கட்டிட்டுப் போனானாம்" (பழம்பாக்கு).

கொட்டேசன் : பெ. விலை பற்றிய விவரக் குறிப்பு (ஆங்கிலம்).

கொட்டேர் : பெ. 1. எடுத்துச் செல்லும் வசதிக்காக ஏரைத் திருப்பிப் போடுதல், 2. எல்லையைக் குறிக்கும் உழவு "காட்டெ காணாம கொட்டேர் போடாதே" (கோட்டேர்).

கொட்டை எலந்தை : பெ. இலந்தை வகை.

கொட்டைத்தணக்கு : பெ. தணக்குவகை.

கொட்டை நூக்கறது : தொ.பெ. பஞ்சு நூற்றல் "கப்பலேறிப் பட்ட கடன் கொட்டெ நூத்து·தீருமா".

கொட்டைப்பழம் : பெ. விதைகளுள்ள பூவன்பழம்.

கொட்டை மஞ்சள் : பெ. உருண்டை மஞ்சள்.

கொட்டை வாழை : பெ. கொட்டை மிகுந்திருத்தலால் உண்ண உதவாத கனியுடைய வாழை வகை.

கொட்னாப்பலே : கொட்டியதுபோல : வி.மு. "திருடனெத் தேள் கொட்னாப்பலே"

கொடக்காது : குடைக்காது : பெ. பெரிய காதுள்ள சீமைமாடு.

கொடகல் : பொருள் தெரியவில்லை "நடந்தா கொடகல் வேணு".

கொடசாய்ஞ்சிடுந்து : குடை சாய்ந்துவிட்டது : வி.மு. வண்டி குடங் கவிழ்தல்.

கொடஞ்சா : குடைந்தால் : வி.எ. "கடஞ்சே காணலே கொடஞ்சா வரும்?".

கொடம் : குடம் : பெ. நீர் வைக்கும் அல்லது எடுக்கும் ஒரு வகைப் பாத்திரம் (தோண்டி).

கொடம் வைக்கறது : தொ.பெ. முட்டியான கைகளை ஒன்றன் மேலொன்று வைத்துத் தயிர்க்குடம், பாற்குடம் என்று கூவித் தட்டி ஆடும் பிள்ளை விளையாட்டு.

கொடமேல்கொடை : பெ. பார். இடிமேல் இடி கொடைமேல் கொடை.

கொடல் ஏறுதல் : தொ. பெ. குடல் நெஞ்சுக்கருகில் ஏறிக் கொள்ளுதல்; அங்ஙனம் ஆனால் நீர் நீர் ஆகப் பேதி யாகும்.

கொடல் தட்டறது : தொ. பெ. நெஞ்சுக்கருகில் ஏறிய குடலை வயிற்றின்மேல் எண்ணெயிட்டு நீவி, தட்டிச்சரி செய்தல்.

கொடாணம் : பெ. வாயகன்ற குடம்.

கொடாப்பு : குடாப்பு : பெ. கோழி, கன்றுக்குட்டி ஆகியன மூடும் மூங்கிலால் ஆன பெரிய கூடை.

கொடி : பெ. தங்கச் சங்கிலி.

கொடி எலுமிச்சை : பெ. மரவகை.

கொடி ஏத்தம் : தொ.பெ. காரமடைத் கோவிலில் கொடி கட்டிவிழா தொடங்குதல்.

கொடிக்கடலை : பெ. நிலக்கடலை வகை.

கொடிக்காய் : பெ. கொடிக்கடலையில் கிடைக்கும் நிலக்கடலை.

கொடிக்கால் : பெ. ஆறுமாதத்திற்குட்பட்ட வெற்றிலைத் தோட்டம் (சடைக்கால்).

கொடிகட்டி வாழ்தல் : தொ.பெ. மிகு சிறப்பான வாழ்க்கை 'நீயென்ன கொடி கட்ட வாழறியா?"

கொடிகொடியா மந்திரிக்கா : பெ. விளையாட்டின் பெயர் (கொலை கொலையா முந்திரிக்கா).

கொடிசுத்திப் பொறந்தவன் : வி.அ.பெ. கொப்பூழ்க் கொடி சுற்றிக் கொண்டு குழந்தை பிறத்தல் "கொடிசுத்திப் பொறந்தா கொண்டவனுக்கு ஆகாது".

கொடிநோயி : பெ. மாட்டின்நோய்; நீர்த்தாரை தொங்கல் ஆக இருத்தல்.

கொடிப்பசலை : பெ. கொடிவகை.

கொடிமல்லி : பெ. ஒருவகை மல்லி.

கொடிமுறுக்கு : பெ. நன்றாக ஏறின முறுக்கு.

கொடியறுகம்பில்லு : பெ. அறுகுவகை.

கொடிவழி : பெ. கால்தடம்.

கொடிவால் சுருட்டுது : வி.மு. மாடு, தன் வாலைத் கொடி போல் நிறுத்தி முறுக்குவதுபோல் சுழற்றுதல்.

கொடிவேலி : பெ. மரவகை.

கொடிவேறி : பெ. தாவரங்கள் அதிகமுள்ள பகுதி.

கொடுக்கறுவா(ள்) : பெ. கைப்பிடியில் வளைவுள்ள அறுவாள்.

கொடுக்கு : பெ. வளைந்த உறுப்பு 'தேள் கொடுக்கு'.

கொடுக்கு : நண்டு : பெ. நண்டுவகை.

கொடுங்கோல் : பெ. நுனியில் கொக்கியுடைய நீளக்குச்சி.

கொடுத்து வச்சவெ : கொடுத்து வைத்தவன் : வி.அ.பெ. நல் வினைக்குரியவன்.

கொடுப்பனை : நல்வினை : பெ.

கொடும்பாவி : பெ. பார். அரும்பாவி.

கொடுலுவலி : குடல்வ்லி : பெ. "குலுங்கி குலுங்கி சிரிப்பானேன் கொடல்வலி வந்து துடிப்பானேன்?"

கொடுவா(ள்) : பெ. மரம் வெட்டும் கத்தி.

கொடுவாமுடி : பெ. பார். அறுவாமுடி.

கொடெ தூக்கிவுடறது : தொ. பெ. வண்டியிலுள்ளதைக் கீழே கொட்ட வண்டியின் பின்பகுதியை நிலத்தைத் தொடு மாறு முன் பகுதியைத் தூக்குதல்.

கொடை போல்ட் : பெ. முஸ்லீம்களைக் குறிக்கும் குறிப்பு.

கொடை : குடை : பெ. "அற்பனுக்கு ஆசெ வந்தா அர்த்த ராத்திரிலே கொடெ புடிப்பான்".

கொடைக்கூலி : குடைக்கூலி : பெ. வாடகை.

கொடை சிமிக்கி : பெ. காதணி :

கொடைமூக்கன் : பெ. விரிந்த மூக்கையுடையவன்.

கொடையுதா : வி.மு.அடுத்தவர் விசயத்தில் தலையிடுபவரைக் கேட்டல் 'உனக்கென்ன கொடையுதா நீ சும்மா இரு'.

கொடையுது : குடைகிறது : வி.மு. "வேலியிலே போற ஓணானெ இடுப்பிலே வச்சிட்டுக் கொடையுது கொடையுதுன்னாளாம்".

கொடைராட்டினம் : பெ. சுழலும் ஊசல்வகை.

கொண்ட்டு : வி.எ. எடுத்துக் கொண்டு "அரிசியும் பருப்பும் கொண்ட்டு அக்கா வூட்டுக்குப் போனாப்பலே".

கொண்டக்குருவி : பெ. குருவி வகை.

கொண்ட சுழி : பெ. மாட்டின் நெற்றியில் இரு கொம்பிற்கு நடுவிலுள்ள தீயசுழி.

கொண்டம் : குண்டம் : பெ. குழி.

கொண்டம் மூடுதல் : தொ.பெ. குண்டம் இறங்கியபின் எருமையை வெட்டி உள்ளே போட்டுக் குண்டத்தை மூடுதல்.

கொண்டவன் : பெ. கணவன் "கொண்டவன் கோணமாயிருந்தா கூரெயேறி சண்டெ புடிப்பா(ள்)" (கொண்டான்).

கொண்டவனைத் தின்னவ(ள்) : வி.அ.பெ. கணவனை இழந்தவள்.

கொண்ட வெட்டுத்தழை : பெ. அகத்தியின் இளந்தளிர்.

கொண்டாந்து : கொண்டு வந்து : வி.எ.

கொண்டாராட்டி : கொண்டு வராவிட்டால் : வி.எ.

கொண்டி : பெ. பார் 2. ஒண்டி.

கொண்டிவச்சு : கொண்டு போய் வைத்து : வி.எ.

கொண்டூசி : பெ. கொண்டைக்குக் குத்தும் ஊசிவகை( கொண்டை ஊசி).

கொண்டை : பெ. பெண்கள் கூந்தலைத் திரளாகச் சேர்த்துக் கட்டும் முடிவகை.

கொணங்கி : வி.எ. ஒளிந்து 'கொணங்கி கொணங்கி போறா பாரு'.

கொணுவு : பெ. கரும்பின் தலைப்பாகம் (கொழுத்தாடை, கொழுந்தாடை, கோந்தாழை, தளவடி).

கொத்தமடைப்பாய் : பெ. பெரிய பாய்வகை.

கொத்தவரை : பெ. செடிவகை.

கொத்தளத்தார் : பெ. ஒரு சாதியினர்.

கொத்தனார் : பெ. பார். ஒட்டன் (கொளத்துக்காரர்).

கொத்து : பெ. களை எடுக்குங் கருவி.

கொத்து ஆச்சா : வி.மு. சிறையில் தரும் உணவைச் சாப்பிட்டாயிற்றா என்று கேட்டல் குறிப்பு.

கொத்துக்களை : பெ. பெண்கள் கொத்தினால் வெட்டும் களை.

கொத்துக்காட்டுக்காய் : பெ. சிறிய காய்களை விடும் அரசாணி (பூசனி) வகை.

கொத்துக்காடு : பெ. சிறிய அளவிலுள்ள கொத்திப் பயிர் செய்யும் பூமி.

கொத்துக்காரர் : பெ. நிலச் சொந்தக்காரர், 2. வேலையாட்களின் தலைவன்.

கொத்துக்காரி : பெ. வேலையாட்களின் தலைவி.

கொத்துத்தகடு : பெ. பிடிபோடாத கொத்து.

கொத்து மல்லிச்சரம் : பெ. கழுத்தணி (மொழுகு சம்பாச் சயினு).

கொத்துமல்லித் தோடு : பெ. காதணி.

கொதகொதனு : வி.அடை. 'புண்ணு கொதகொதனு இருக்கு'.

கொதம்ப கொதம்மையா வெட்டி : கணுக்கள் விட்டு வெட்டி.

கொதுவனை : பெ. மனக்கொதிப்பு 'எங்க கொதுவனை எப்ப ஆறு(ம்)'.

கொதுவை : பெ. அடகு.

கொந்தளம் : பெ. மண்வெட்டியில் ஒருவகை. "கொந்தளம் போடறவனுக்கு ஒரு பணம், கோளாறு சொல்றவனுக்கு ரண்டு பணம்".

கொந்துதல் : தொ.பெ. கல்லாட்டத்தில் மேலெறிந்த கல் கையில் விழுவதற்குள் தரையிலுள்ள கற்களை எடுத்தல்.

கொப்பரை : பெ. 1. நீர் வற்றிய தேங்காய், 2. பிடியோடு கூடிய பெரும் பாத்திரம் "ஆனா அச்சிலே ஆகாட்டி கொப்பரையிலே" (இந்துஸ்தானி).

கொப்பரை வளையம் : பெ. கொப்பரையின் பிடி.

கொப்பாரி கொட்டறது : தொ. பெ. நாட்டுக்கல்லுக்குப் பூசை யிட்டு மணமக்களுக்குக் கங்கணம் கட்டுதல், எ-டு. வேளாளர்.

கொப்பி : பெ. மாட்டின் கொம்பிற்குப் போடும் அணிகலன்.

கொப்பி : பெ. கும்மியாட்டம் (தெலுங்கு, குப்பி).

கொப்பி வெண்டையம் : பெ. பார். கொப்பி.

கொப்பு : பெ. 1. பார் கார வாய்க்கால், 2. பார். கிராம்புக்குச்சி, 3. கொத்து 'பூ கொப்புக் கொப்பா புடுச்சிருச்சு', 4. பெரிய மடை, 5.மரக்கிளை, 6. முருகு காதில் போடும் அணி.

கொப்புக்காது : பெ. பார் கிராம்புக்குச்சி.

கொப்பு திளுப்பி : கொப்புத் திருப்பி : பெ. ஒருவனுடைய பாகத்திற்குப் பாயும் நீரை அடுத்தவன் பாகத்திற்குப் போக உதவும் பெரியமடை.

கொப்பு வாய்க்கா : பெ. பார். 1. கொப்பு.

கொப்புளி : ஏ.வி. வாய் குமிழ்த்தல்.

கொம்பன் : பெ. சமர்த்தன் 'நீயென பெரிய கொம்பனா'.

கொம்பாள மரம் : பெ. மரவகை.

கொம்பு : பெ. 1. ஊதும் கருவி, 2. மரக்கிளை 'ஏறுன கொம் புலேயே எறங்கணும்', 3, விலங்கின்கொம்பு "காளெ எளெச்சாலும் கொம்பு எளெக்காது".

கொம்புக்கவுறு : பெ. கயிறுவகை.

கொம்புக்காரன் : பெ. கொம்பு ஊதும்சாதியான் (கொம்பூதி கவுண்டன், தப்பட்டையன், பறையன்).

கொம்புகட்டி : பெ. மாட்டின் கொம்பிற்குக் கட்டும் கயிறு.

கொம்புச்சுழி : பெ. மாட்டின் கொம்புகளுக்கிடையே உள்ள சுழி.

கொம்புசுத்தி அடிக்குது : வி.மு. ஒழுங்கற்று வீசும் காற்று.

கொம்புத்தழை : பெ. புகையிலையில் முதல்தரம்.

கொம்புத்தேன் : பெ. மரக்கொம்பிலுள்ள தேன் கூட்டிலிருந்து எடுக்கப்பட்ட தேன்.

கொம்பு மண் வீசுது : வி.மு. மாடு கொம்புகளால் நிலத்தில் உள்ள மண்ணைப் பெயர்த்தெடுத்தல் :

கொம்பேறி : பெ. மரக்கொம்புகளின் மீது பாய்ந்து விளையாடும் விளையாட்டு.

கொம்பேறி நாகன் : பெ. பாம்புவகை.

கொம்பேறி கொல்லேறி : பெ. மரத்தின் மேலுள்ளவர்கள் கீழே வட்டத்திற்குள் உள்ள குச்சியை எடுக்க முயலும்போது கீழே உள்ள ஒருவன் தொடுதல் (கொம்பேறி பீச்சா).

கொம்பை : பெ. பொம்மை.

கொம்பைச்சீரு : பெ.சக்கிலியர் திருமணச் சடங்கு. பங்காளிகள் கூட்டத்தினர் பொம்மை செய்து, கோபித்து விளையாடுதல்.

கொம்மை : பெ. கம்பின் பதர் ‘கம்பெ கொம்மையோட திங்காதே’.

கொமுரி : குமரி : பெ. “குண்டனுக சேந்தா தெண்டம் வருக கொமுரிக சேந்தா நகரழியும்”.

கொமுரியாயிட்டா : வி.மு. பார். உக்காந்துட்டா(ள்).

கொய்து : வி.எ. அறுவடை செய்து, பறித்து.

கொய்யாக்கட்டை : பெ. 1. கதவில் தாழ்ப்பாள்போல் இயங்கும் கட்டை, 2. கொய்யாக்கட்டைப் பலகையைத் தாங்கியுள்ள கட்டை, 3. வீட்டின் பாதம்.

கொய்யாக்கட்டைப் பலகை : பெ. பொருட்களை வைக்க வீடுகளில் மேலே வைக்கப்பட்டுள்ள பலகை.

கொய்யா : பெ. மரவகை (போர்ச்சுக்கீயம்).

கொய்னு : பெ. மரவகை.

கொரங்காடு : பெ. கானல்.

கொரங்குப்படல் : பெ. சிறுவர்கள் சைக்கிளை ஓட்டும் முறை.

கொரங்குப்பழம் : பெ. பழவகை.

கொரம்மா : கொடு அம்மா : ஏ.வி. ‘சாயச்சீலை ஏலேலப்படி சரி கொரம்மா’.

கொரவளே : குரல்வளை : பெ. “கொம்பு ரண்டு கொரவளி மூணா?”

கொருக்கு : பெ. கொத்து.

கொல்லன் : பெ. இரும்பு வேலை செய்பவன் "கொல்லந் தெரு விலே ஊசி வித்த மாதிரி".

கொல்லன் பட்டரை : பெ. கொல்லன் உலைக்கூடம்.

கொல்லிக்கருவாடு : பெ. கருவாட்டுவகை.

கொல்லுவேலை : பெ. இரும்புவேலை.

கொல்லை : பெ. வீட்டின் பின்புறம்.

கொலங்கோதறது : குலம் கோதுதல் : தொ.பெ. திருமணச் சடங்கு எ-டு. வெள்ளாளர்.

கொலஞ்சு : வி.எ. துன்பப்பட்டு.

கொலதெய்வம் : குலதெய்வம் : பெ. ஒரு குலத்தார் பரம்பரை யாக வழிபட்டு வருங்கடவுள்.

கொலப்பட்டினி : பெ. பசியின் கொடுமை.

கொலம் : குலம் : பெ.

கொலுசு : பெ. 1. கால்காப்பு, 2. காற்சலங்கை (தெலுங்கு).

கொலுமிச்சை : பெ. மரவகை.

கொலுவு : பெ. நவராத்திரிக் கொலு.

கொலை : பெ. வாழைக்குலை.

கொலைநோவு : பெ. 1. பயிர் நோய் எ-டு. கம்பு நெல், 2. மார்பெரிச்சல்.

கொலை ஈரல் : பெ. ஈரல் 'கொல ஈரல் வத்தற மாதிரி கத்த ரேனே காதிலே விழலியா'.

கொலையூசி : பெ. குதிரையின் நெஞ்சியிலுள்ள தீயசுழி.

கொலைக்காய் : பெ. ஈரலின் அருகிலுள்ள பாகம்.

கொலைக்கும் : கலக்கும் : வி.மு. 'சாந்து கொலைக்கும் கையி'.

கொழஞ்சான் : பெ. தெளுவு இறக்கியபின் பாளையின் அடிப் பாகம்.

கொழஞ்சு : குழைந்து : வி.எ. 'சோறு கொழஞ்சு போச்சு'

கொழந்தெக் கடலெ : குழந்தைக் கடலை : பெ. நிலக்கடலை எடுக்கவரும் பெண்களிடம் குழந்தை, சிறுவர் இருப்பின் அதிகப்படியாகப் போடும் கடலை.

கொழந்தெ கழுஞ்சிடுச்சு : குழந்தை பிறந்துவிட்டது : வி.மு.

கொழந்தெ சோறு : பெ. கைக்குழந்தைக்கு என வாங்கி ஊட்டப்படும் தருமச்சோறு.

கொழந்தை : பெ. "கொழந்தெயும் தெய்வமும் கொண்டாடும் எடத்திலே".

கொழமாத்து : குழப்பம் : பெ. "சக்கிலிய(ன்) ஏமாத்து பறெய(ன்) கொழமாத்து".

கொழல் : குழல் : பெ.

கொழி : ஏ.வி. புடை.

கொழுத்தவர்கள் : வி.அ.பெ. 1.நேர்மையற்ற முறையில் முன்னேறியவர்கள், 2. வசதிபடைத்தவர்கள்.

கொழுந்து : பெ.1. துளிர், 2. வளரும் பருவத்திலுள்ள வெற்றிலைக் கொடிக்கால்.

கொழுந்தடித்தல் : தொ.பெ. செடியின் நுனிப்பாகத்தை உடைத்தல் (கொழுந்து கிள்ளுதல்).

கொழுந்தனார் : பெ. கணவனின் தம்பி (கொழுந்தன்).

கொழுந்தியா(ள்) : பெ. 1. கணவனின் தங்கை, 2. சகோதரன் மனைவி, 3. மனைவியின் சகோதரி (கொழுந்தி).

கொழுப்பு : பெ. 1. ஆணவம், 2. "கவுண்டனுக்கு எருது போச்சுன்னு வருத்தம் சக்கிலியனுக்குக் கொழுப்பில் லேன்னு வருத்தம்".

கொழுவு : பெ. கலப்பையில் உழும் நுனியிலுள்ள இரும்புப் பட்டை.

கொழுவு ஆணி : பெ. கொழுவிலுள்ள ஆணி (போல்ட்).

கொள்முதல் : பெ. வங்கின விலை.

கொள்ளி : பெ. எரிகட்டை "அடுப்பிலே வச்ச கொள்ளி வெந்துதான் ஆகோணும்"

கொள்ளிக்கண் : பெ. தீயகண்.

கொள்ளிக்கருவாடு : பெ. கருவாட்டுவகை.

கொள்ளிக்காலு : பெ. குதிரையின் ஒரு காலில் வெள்ளைநிறம் இருத்தல் -நல்லதல்ல.

கொள்ளிச்சுழி : பெ. பார். உச்சி முதுகுச்சுழி.

கொள்ளுமுட்டிக்காரன் : பெ. தலைமகன் கையைப்பிடித்துச் சவக்குழிக்குக் கொள்ளியை வைக்கச் செய்யும் நாவிதன்.

கொள்ளிமுட்டி போடறது : தொ.பெ. சாவுச்சடங்கு, எ-டு. கவுண்டர்.

கொள்ளியத்த பய : பிள்ளைப் பேறு இல்லாதவன்.

கொள்ளு : பெ. பார். கானம் "எள்ளும் கொள்ளும் வெடிச் சாப்பலே".

கொள்ளுப்பாட்டன் : பெ. பாட்டனின் தந்தை.

கொள்ளுப்பேத்தி : பெ. பேரனின் மகள்.

கொள்ளுப்பேரன் : பெ. பேரனின் மகன்.

கொள்ளுப்பை : பெ. குதிரை வண்டியின் அடியிலுள்ள பை.

கொள்ளுமாவு : பெ. கொள்ளின் மாவுடன் பாகு சேர்த்துப் பிடித்த உருண்டை.

கொள்ளை : பெ. 1. களவு "கொள்ளெக்கிப் போனாலும் கூட்டாகாது",

2. நோய், 3. பெருவாரி 'கொள்ள சொத்து'

கொள்ளையிலே போனவனே : கொள்ளை நோயால் சாக என வைதல்.

கொள்றது : கொள்வது : தொ.பெ.

கொள(ழ)க்கட்டை : பெ.1. அழகற்றவன் 'போடா கொளக் கட்டெ', 'இவ யாருடா இவன் அவசரத்துக்குப் புடுச்ச கொளக்கட்டையாட்ட இருக்கான்', 2. ஆவியில் வேக வைத்த கம்பு மாவால் செய்த இனிப்பு "கொளக்கட்டெ தின்னானாம் கழுத்து சுளுக்கிடிச்சாம்", 3. புல்வகை.

கொள(ழ)கம் : பெ. 1. ஆறுபடி கொண்ட அளவு 2. மேலே நாகபடம் உள்ள தங்கப் பூச்சுடைய குல்லாய்.

கொளச்சி மழுட்டி : பெ. ஒருவகை மண்வெட்டி.

கொளத்துக் கருவாடு : பெ. குளத்தில் பிடித்த மீனின் கருவாடு.

கொளத்துக்காரன் : பெ. பார். ஒட்டன்.

கொளப்பாளை : பெ. ஒரு நெற்பயிரின் தூர் முழுதும் கருக் காய் ஆக இருத்தல்.

கொளரி : உளறி : வி.எ. பயம் முதலியவற்றால் மொழி தடு மாறுதல்.

கொளலை மல்லி : பெ. செண்டுமல்லிச்செடி.

கொளவி : குளவி : பெ. 1. ஆட்டுக்கல்லில் ஆட்ட உதவும் கல், 2. அம்மியில் அரைக்கும் கல், 3. கொட்டும் இயல்புள்ள ஈவகை (3. கருங்கொளவி, செங்கொளவி).

கொளவு : பெ. புகையிலையின் காம்புப்பகுதி உரிப்பதற்கு எளிதாகக் குளகுள என்று மிருதுவாகிப் பக்குவத்திற்கு வருதல் 'கொளவு வந்துடுச்சா',.

கொளறுவாயெ : கிளறுவாயன் : பெ.

கொளாப்புட்டு : பெ. ஆவியில் வேகவைத்த கேழ்வரகு மாவி னால் செய்த இனிப்பு.

கொளாப்ரேசன் : பெ. குழப்பம்.

கொளாப்பு : பெ. சிறிய மண்ணெண்ணெய் விளக்கு (சிம்லி, சிம்னி).

கொளாம்பு : குளம்பு : பெ. ஒருசார் விலங்குகளின் பாதம்.

கொளாவி : குழாய் : பெ. நீண்ட காற்சட்டை 'கொளாவி மாட்டிப் பழகாதே'.

கொளாம்பு வெட்டு : பெ. மாட்டுக்குக் குளம்பு செதுக்குதல்.

கொளுக்கட்டைத் தேக்கு : பெ. மரவகை.

கொளுஞ்சி : பெ.1. செடிவகை, 2. நாரத்தை வகை (1-கொளுஞ்சிப்பூ).

கொளுத்தி : வி.எ. தீப்பற்ற வைத்து.

கொறக்கடவு : பெ. இரண்டு பக்க எலும்புகளில் ஒன்று தூக்கி யும் ஒன்று தணிந்தும்இருத்தல்.

கொறக்காடு : பெ. வண்டல்மண் அதிகமுள்ள நிலம்.

கொறக்குளி : பெ. பார். கொக்கரச்சிடுச்சு.

கொறக்கூடை : பெ. உழவுக்குப் பயன்படும் கூடை.

கொறங்காட்டம் : பெ. விளையாட்டின் பெயர்.

கொறங்கு : குரங்கு : பெ. 1. குரங்காட்டத்தில் ஓடிப் பந்தைப் பிடிக்க முயல்பவன், 2. விலங்கு "கொறங்கு தாங் கெட்ட துமில்லாமெ வனத்தெயும் கெடுத்துதாம்".

கொறங்கு சம்பா : பெ. நெல்வகை. இது 1950 இல் தஞ்சாவூரில் விளைந்தது. ஈரோட்டில் வசிக்கும் பழனியப்பன் என்பவர் மிகுதியாக வாங்கி அரவை செய்ததால் 'குரங்குப் பழனியப்பன்' என்ற புனைப்பெயருடன் இன்று இருக் கிறார். தற்போது இந்நெல் விளைச்சல் இல்லை.

கொறங்கு புத்தி : பெ. நிலையற்ற குணம்.

கொறங்குப்புடி : பெ. விடாப்பிடி.

கொறங்கெ : குரங்கன் : பெ.

கொறடா : குறடா : பெ. குதிரைச் சவுக்கு (போர்க்சுக்கீசியம்).

கொறடு : பெ.1 . இடுக்கி, 2. பார். காதுநோண்டி.

கொறத்தனம் : குறத்தனம் : பெ. பாசாங்கு.

கொறத்தி : பெ. 1. பாசாங்குக்காரி, 2. மீன்வகை.

கொறவலையெ கடுச்சுப் போடுவே(ன்) : வசை.

கொறவன் : குறவன் : பெ.1. கூடை, முறம் முதலியன செய்யும் சாதியினன் "ஒழியப்போயி கொறவனூட்லெ ஒழிஞ் சானாம்" 2. பாசாங்கு பண்ணுகின்றவன்.

கொறவு : குறைவு : பெ. "நோயத்த வாழ்வே கொறவத்த செல்வம்".

கொறிக்கறது : கொறித்தல் : தொ.பெ. 1. குறுக்குத்தீனி 'கொறிக்கறதுக்கு ஏதாவது இருக்கா', 2. சிறிது சிறிதாகப் பொறுக்கி உண்ணுதல், 3. நகத்தைப் பல்லால் கடித்தல் 'நகத்தெ கொறிக்காதே ஆகாது'.

கொறே : குறை : பெ. 1. குற்றம், 2. தரிசு நிலம், 3. தற்சமயம் பயிர் செய்யாதுவிடப்பட்ட நிலம், 4. மேய்ச்சலுக்கென்று விடப்பட்ட பகுதிகள்.

கொறை ஒழவு : பெ. முதல் உழவு.

கொறைப்பூட்டை : பெ. கதிருக்கு வரும் நோய்.

கொன்னவாய்க் குருவி : பெ. குருவி வகை.

கொன்ன வாய்ச்சி : பெ. உளறிப் பேசுபவள்.

கொன்னவாயன் : பெ. திக்கிப்பேசுபவன்.

கொன்னாந்து : கொண்டு வந்து : வி.எ.

கொன்னு : கொன்று : வி.எ. 'கொன்னு போட்டான்',

கொன்னுட்டான் : வி.மு. 1. கொலை செய்துவிட்டான், 2. திறமைக் குறிப்பு 'நேத்து பேசும்போது எல்லா பிரமிக்கிற மாதிரி கொன்னுட்டான்'.

கொன்னை : கொன்றை மரம் : பெ. (வகை : கருங்கொன்னை, சரக்கொன்னை, செங்கொன்னை, மஞ்சக்கொன்னை).

## கோ

கோக்கோ : பெ. பானப் பயிர் (ஆங்கிலம்).

கோகுலாட்டமி : பெ. கிருஷ்ணாஷ்டமி (வடசொல்).

கோசக்கா : பெ. பழவகை.

கோசம் : பெ. பசுவின் வயிற்றினுடைய அடிப்பகுதித் தோல்.

கோசானம் : பெ. மாட்டுவண்டியில் நிறப்பும் மண் சிந்தாமல் இருக்க விரிக்கும் மூங்கிற் பின்னல் (கோதாணி).

கோசும்பரி : பெ. உணவுவகை (மராத்தி).

கோட்டு : பெ.1. தோல்வி, 2. முறை 'மூணுகோட்டு மருந்து அடிச் சாச்சு (ஆங்கிலம்).

கோட்டை : பெ. பனை ஓலையால் கட்டப்படும் இது தற்கா லிகமாகப் பதநீர் குடிக்கப் பயன்படுத்துவது.

கோடங்கி : பெ.1 . உடுக்கடித்துக் குறி சொல்வோன், 2. கேலி 'சுத்த கோடங்கியா இருக்கியே', 3. வசை.

கோடப்பருத்தி : பெ. கோடைப்பட்டத்தில் பயிர் செய்யப் படும் பருத்தி.

கோடாலி : பெ. பிளக்கும் கருவிவகை.

கோடாலி முடுச்சு : பெ. பார். அறுவாமுடி (கோடாலிக் கொண்டை).

கோடாலி முறுக்கு : பெ. மரவகை.

கோடாலி மூக்குத்தி : பெ. மரவகை.

கோடி : பெ. 1. இறந்தவர்களுக்குப் போடும் புதிய ஆடை, ஆண் எனின் ஒரு கோடி. பெண் எனின் பிறந்த வீட்டார், புகுந்த வீட்டார், பங்காளிகள் எனப் பலரும் கோடி போடுவர். 2. புதிய ஆடை 'கோடி உடுத்திக் காதுகுத்துமென்பார் சுந்தரர்க்கு', 3. மூலை,

கோடு : பெ. ஆட்டம் முதலியவற்றிற்காக வகுத்த தானம்.

கோடுஅடி : ஏ.வி. ஆடைக்கு விளிம்பு அடித்தல்.

கோடுபுடுங்கிப் போடறது : தொ.பெ. தாம்பு ஓட்டும்போது ஓரங்களில் உள்ள நெற்கதிர்களை உள்ளே தூக்கிப் போடுதல்.

கோடை : பெ. பருவம் .

கோடைக்கொப்பளம் : பெ. சூட்டினால் வரும் பெரிய கொப்பளம்.

கோண் உளி : பெ. தச்சுக்கருவி.

கோணக்கால் : பெ. மாட்டின் முன்னங்கால்கள் ஒன்றுக் கொன்று அடித்தல்.

கோணக்காலி : கோணின கால் உள்ளவள்.

கோணபுத்திக்காரெ : பெ. நேர்வழி அற்றவன்.

கோணமாணலா : வி.அடை. ஒழுங்கற்று 'கோணமாணலா பேசாதே'

கோணவாயன் : பெ. கோணின வாய் உள்ளவன்.

கோணிச்சாக்கு : பெ. பார் கித்தான்.

கோணிச்சு : வி.எ. வளைந்து 'கோணிச்சுநிக்காதே'.

கோணியம்மன் : பெ. எட்டுக்கரங்களையுடைய காக்கும் அம்மன், ஒரு காதில் தோடும் மற்றொன்றில் குண்டலமும் அணிந்தவன்.

கோணான் : பெ. ஆண்எருமை.

கோணாக்கன்னு : பெ. பார். கெடாக்கன்னு.

கோணாக்கிழி போட்டுட்டு : வி.எ. கோபித்துக் கொண்டு 'உம்மக(ள்)' கோணாக்கிழி போட்டுட்டு போயிட்டா(ள்).

கோணாஞ்சேத்துதல் : தொ.பெ. எருமைகளைச் சேர்க்கைக் காக இணைத்தல்.

கோணூசி : பெ. சாக்குத் தைக்கும்ஊசி.

கோணெ செருப்பு : பெ. முன்பகுதி வளைந்துள்ள செருப்பு.

கோணை : கோணல் : பெ. வளைவு.

கோத்திரம் : பெ. வம்சம் "கோத்திரமறிந்து பொண்ணெ குடு".

கோத்து : வி.எ.

கோதண்டம் : பெ. பள்ளிச் சிறாரைத் தண்டிக்கும் தொங்கு கயிறு.

கோதண்டம் போடறது : தொ. பெ. கோதண்டத்தைக் கையில் பிடித்துத் தொங்கச் செய்தல்; கீழே முள் பரப்பப்பட்டிருக்கும்.

கோதிப்போட்டு : வி.எ. மண்ணனைத்து 'கோதிப் போட்டுட்டேன்'.

கோது : ஏ.வி. 1. சரிசெய் 'வரப்பெ கோதிவுடு', 2. மயிர்ச்சிக் கெடுத்தல்.

கோதும்பி : பெ. 1. குளவிவகை, 2. கோதுமை, 3. பூச்சிவகை, 4. மாட்டுவியாபாரத்தில் முப்பது ரூபாயைக் குறிக்கும் சொல்.

கோதும்பித்தட்டை : பெ. மாட்டு வியாபாரத்தில் முப்பத்தைந்து ரூபாயைத் குறிக்கும் சொல்.

கோதும்பி நாகெ : பெ. நல்லபாம்பு வகை.

கோதுமரொட்டி : பெ. சிற்றுண்டி (சப்பாத்தி).

கோதுமைச் செயினு : பெ. கழுத்தணி.

கோந்திருந்து : உட்கார்ந்திருந்து : வி.எ. 'கோந்திருந்து போங்க'.

கோந்து : பெ. பிசின் (இந்துஸ்தானி).

கோந்தை : பெ. தலைமயிர் 'கோந்தெ விரிச்சமுதே'.

கோப்பி பீசு : பெ. பெண்கள் கைகோத்து ஆடுதல் (பிச்சோ பிள்ளை, பிள்ளோ பிள்ளை).

கோப்பு : பெ. 1. நிலை 'பழைய கோப்புக்கெ வந்துட்டா(ன்), 2. வீட்டின் பாகம்.

கோப்பை : பெ. பார். கிண்ணம் (கப்பு).

கோபம் பொங்கிட்டுது : வி.மு. கோபம் மிகுதல்.

கோபி : பெ. சுண்ணாம்பு வகை.

கோபி செயினு : பெ. கழுத்தணி.

கோபி நாமம் : பெ. பார். காந்திகணக்கு.

கோபுரைச்சுழி : பெ. எருதுக்குத் திமிலின் உச்சியிலுள்ள தீயசுழி.

கோம்பச் செவுறு : பெ.வீட்டின் பக்கச் சுவரின் மேற்பகுதியிலுள்ள முக்கோண வடிவச் சுவர்.

கோம்பு : பெ. 1. காம்பு 'மிளகாக் கோம்பு', 2. தானியம் நீக்கப் பட்டத் தட்டுக் குவிக்கப்படும் இடம் (தட்டுப்போர்), 3. நெசவுக்கருவி.

கோம்பை : பெ. வீட்டின் மேற்கூரை.

கோம்பைச் சட்டம் : பெ. வீட்டுக் கூரையின் உச்சிச் சேர்க் கைக்கு ஆதாரமாக வைக்கும் மரத்துண்டு.

கோமணம் : கோவணம் : பெ. "கோமணத்திலே ஒரு காசு இருந்தா கோழி கூப்புட ஒரு பாட்டு வரும்"

கோமாங்கா : பெ. மரவகை.

கோமியம் : பெ. பசுவின் சிறுநீர்.

கோமுட்டி : பெ. செட்டியாருள் ஒரு வகையினர் "கோமுட்டி கல்யாணத்திலே பாலூத்ன கதை".

கோமுட்டித் தலையன் : பெ. வசை.

கோய : கோவில் : பெ. 'கோயதெரு', "கோயப்பூனெ தேவருக்கு அஞ்சுமா".

கோயப்பசுமாடு : பெ. கோவிலுக்கு என விடப்பட்ட பசு.

கோய(ல்)ப் பண்டாரம் : பெ. பண்டாரச் சாதியில் அம்மன் கோவிலில் பூசை செய்வோர்.

கோயிந்த பிராக் : இடை. காரமடை விழாவின்போது பந்த சேவகர்கள், தண்ணி சேவகர்கள் எழுப்பும் குரல்.

கோயில்சாமி : பெ. மூலவிக்கிரகம் (மூலச்சாமி).

கோயிலு : பெ. சாராயக்கடையைக் குறிக்கும் குறிப்பு 'கோய லுக்குப் போலாமா'.

கோர்வை : பெ. கோத்தல் 'பொன்ஊசி கையிலெடுத்து பூத்த மல்லி கோர்வையுட்டா'.

கோரி : பெ. 1. பார். கண்சட்டுவம், 2. மகம்மதியர் கல்லறை (பெர்சியன்).

கோரிக்கை : பெ. வேண்டுதல்.

கோருங்கோ : ஏ.வி. உட்காருங்கள்.

கோரை : பெ. 1. கிழங்குவகை, 2. புல்வகை.

கோரைப்பல் : பெ. விகாரமான பல்.

கோரைப்பாசி : பெ. பாசிவகை.

கோரைப்பாய் : பெ. கோரைப் புல்லால் பின்னப்பட்ட பாய்.

கோரோசனம் : பெ. மாட்டு வயிற்றிலுள்ள மருந்துப்பொருள்.

கோல் : பெ. குச்சி "கோல் எடுத்தாத்தான் கொரங்கு ஆடும்".

கோல் எறிஞ்சா(ன்) : பெ. மீன்வகை.

கோலநட் : பெ. பானப்பயிர்.

கோலம் : பெ. 1. அவலநிலை 'இந்தக் கோலத்திலா உன்னெ பாக்கணும்'. 2. மா, கற்பொடி முதலியவற்றால் இடுங் கோலம் "கோலக்காரி கோலக்காரின்னு ஆறுமாசம் சோறு போட்டு, அவ அவசரக்கோலம்னு அள்ளித் தெளிச்சாளம்".

கோலாட்டம் : பெ. கோல் கொண்டு அடித்து விளையாடுதல்.

கோலாட்டுக் கம்பி : பெ. வார்ப்படக் கருவி.

கோலி : பெ. குண்டு (பெர்சியன்).

கோலியாட்டம் : பெ. பார். குண்டாட்டம் (வகை : ஒரு குழி யாட்டம், இரு குழியாட்டம், கரைக்குழி, முக்குழி யாட்டம்).

கோலுகுத்தி : கோட்சொல்லி : பெ. குறளைக் கூறுவோன்.

கோலெக்கருவாடு : பெ. பார். கொள்ளிக் கருவாடு.

கோவா : பெ. 1. இனிப்புவகை 'பால் கோவா', 2. காய்ச்சாத பாலில், எடுக்கப்படும் வெண்ணெய் (இந்துஸ்தானி).

கோவாளை : பெ. லயற்களை.

கோவுக்சுக்காதே : கோபம் கொள்ளாதே : எ.ம.வி.

கோவெளையாட்டு : பெ. ஒருவகை விளையாட்டு (கோக்கோ).

கோவேரிக் கழுதெ : கோவேறு கழுதை : பெ.

கோவைப்பழம் : பெ. கோவைக்கொடியின் பழம்.

கோழ்வந்திகட்டுதல் : தொ.பெ. புகையிலைகளைக் கட்டுக் கட்டாகத் கட்டுதல்.

கோழி : பெ. "வாங்குன கோழியும் சரியாயிருக்குது வளத்த கோழியும் சரியாயிருக்குது" (வகை : ஒயிட்லெக்கான் அல்லது போண்டாக்கோழி, கருப்புக்கோழி, காட்டுக்

கோழி, கானாங்கோழி, சீமக்கோழி, செவப்புக்கோழி, தண்ணிக்கோழி, நாட்டுக்கோழி, நியூஹேம்சியர், பொரிக்கோழி, ரோடுஐசிலேண்ட்ரெட், வாத்துக் கோழி, வெள்ளக்கோழி ஜின்கோழி).

கோழிக்காலன் : பெ. ஆட்பெயர்.

கோழிக்கொண்டை : பெ.1. சாவற் சூட்டுப் பண்ணை, 2. பூவகை.

கோழி கூப்பட : வி.அடை. கோழி கூவும் அதிகாலை நேரம் 'கோழி கூப்பட எந்திரிச்சரணும்'.

கோழிச்சண்டை : பெ. இரு கோழிகளுக்கு இடையே சண்டை மூளச் செய்தல்.

கோழிசாவா : பெ. சேவல்.

கோழித்தூக்கம் : பெ. அரைகுறைத் தூக்கம்.

கோழி தொறந்து வுடுதல் : தொ. பெ. கொக்கறை ஆட்டச்சொல்.

கோழி நெஞ்சு : பெ. முன்பக்கம் குவிந்த மார்பு.

கோழிப்பேனு : பெ. கோழியின் உடம்பிலுள்ள பேன்.

கோழிமுட்டைத் தைலம் : பெ. அண்டத் தைலம்.

கோழிமூடறது : தொ. பெ. கொக்கரை ஆட்டச்சொல்.

கோழி வெங்காயம் : பெ. செடிவகை.

கோழை : பெ.1. கபம், 2. மனத்துணிச்சல் இல்லாதவன்.

கோள் : பெ. புறங்கூறுதல்.

கோளாறு : பெ. 1. குற்றம் 'இஞ்சினிலே கோளாறு, 2. தாறு மாறு 'கோளாறு புடுச்சவெ'

## கௌ

கௌரிக்கண்ணு : பெ. பச்சையின் வடிவம்.

## ங

ங்கப்பா : இடை. 'போங்கப்பா, வாங்கப்பா, என்னங்கப்பா'.

ங்கொப்பரானே : இடை. பார். அடங்கொப்பரானே.

ஙொண்ணன் : பெ. அண்ணன்.

நொப்பன் : பெ. அப்பன்.

நொம்மா : பெ. அம்மாள்.

### ச

சக்க : பெ. தக்கை.

சக்கக்காளி : பெ. கம்பு நீக்கப்பட்ட சக்கை.

சக்கப்பால் : பெ.வெண்ணெய் எடுக்கப்பட்ட பால்.

சக்கப்பட்டி வேட்டி : பெ. சக்கப்பட்டி எனும் ஊரில் தயாரிக்கப்படும் வேட்டிவகை.

சக்கம்மா : பெ. நாயக்கர் குல தெய்வம்.

சக்கரக்கட்டி : பெ. மனத்திற்கினிய.

சக்கரக்கொடி : பெ. வெற்றிலை வகை.

சக்கரக்கத்தி : பெ. பார். இளங்காலி.

சக்கரமார்க்கட்டு : பெ. சித்தோடு அருகில் பல கிராமத்துச் சர்க்கரை விற்பனைக்கு வந்து சேருமிடம்.

சக்கரரேகை : பெ. அதிர்ஷ்டத்தைக் குறிக்கும் கைரேகை.

சக்கரவர்த்தி : பெ. கீரைவகை.

சக்கரவள்ளி : பெ. கிழங்குவகை. .

சக்கரெ : பெ. பழுப்புச்சர்க்கரை "வாய் சக்கரெ கை கொக்கரே"

சக்கரெ ஆலெ : பெ. சர்க்கரை தயாரிக்கும் இடம்.

சக்கரெ பட்டாணி : பெ. பட்டாணிவகை.

சக்களத்தி : பெ. 1. போலிப்பொருள் 'நெல்லுச் சக்களத்தி', 2. மாற்றாளான மனைவி.

சக்காத்து : பெ. தூண்டுதல் 'இந்த சக்காத்து வேலையெல்லா பண்ணாதே' (அரபு).

சக்காளத்தி முண்டே : பெ. வசை.

சக்காந்தம் : பெ. பரிகாசம்.

சக்கிலி : பெ. தாழ்ந்த வகுப்பினன் "சக்கிலி சாமிக்கு செருப்படி பூஜெ".

சக்கிலிக் கருப்பராயன் : பெ. தெய்வம்.

சக்கிலிச்சி : பெ. சக்கிலியப் பெண் "அந்நு பறெச்சி அடுத்தநா சக்கிலிச்சி மூணநாநா சூத்தரச்சி நாலாநா வாணிகச்சி அஞ்சாநா பிராமணத்தி".

சக்கை : பெ.1. கரும்புச்சாற்றைப் பிழிந்தபின் உள்ள பகுதி, 2. தானியம் நீக்கப்பட்ட கதிர்கள், 3. நெசவுக்கருவி.

சக்கைக்காய் : பெ. பலாப்பழம்.

சக்கைப்போடு : வி.அடை. பிரமாதம் 'வெள்ளாமெ சக்கப் போடு போட்டிருச்சு'.

சக்கையைப் பெரட்டி எடுத்துட்டான் : நன்றாக அடித்து விட்டான்.

சக்தி அழைத்தல் : தொ.பெ. இறைவனை அழைத்தல். ஆற்று நீரை ஊருக்குள் வைத்துப் பூசையிடுவதன் மூலம் இறைவன் ஊருக்குள் வந்துவிட்டதாகக் கொண்டு விழா நடத்துதல்.

சக்தியை அனுப்புதல் : தொ.பெ. விழாச்சடங்கு.

சகடநோய் : பெ. குழந்தைகட்கு வரும் உடல் நோய்கள்.

சக்தி : பெ. சேறு.

சகலகலாவல்லி : பெ. திறமையானவள்.

சகலப்பாடி : பெ. மனைவின் உடன்பிறந்தான் (இந்துஸ்தானி. சகலன், சட்டகர்).

சகலம் : பெ. எல்லாம்.

சகவாசம் : பெ. தொடர்பு 'உன் சகவாசமே ஆவாது', 2. நட்பு.

சகாயம் : பெ. 1. உதவி "தாமதம் தெய்வ சகாயம்", 2. சலுகை, 3. மலிவு.

சகிக்கலை : சகிக்கவில்லை : வி.மு. பொறுத்துக்கொள்ள முடியவில்லை.

சகுட்டுக்கு : வி.அடை. அடிக்கடி.

சங்கட்டம் : சங்கடம் : பெ. 1. மரணாவத்தை 'பொழைப்பது சங்கட்டம்'. 2. வருத்தம் 'மனசு ஏனோ சங்கட்டமா இருக்கு' (வடசொல்).

சங்கடை : பெ. குழந்தை பால் அருந்தும் சங்கு.

சங்கதி : பெ. செய்தி.

சங்கராத்தி : பெ. போகிப் பண்டிகை.

சங்காயம் : பெ. உளுந்து துவரை முதலியவற்றின் பதரமான மணி.

சங்காயம் அடிக்கறது : தொ. பெ. நெல்லிலுள்ள கருக்காயைப் பாளையில் இருந்து பிரித்தல்.

சங்காயம் புடி : ஏ.வி. சண்டா மாறினால் நெல்லின்மீதுள்ள குப்பையை அகற்று.

சங்கி : வி.எ. களைத்து 'சங்கிப் போயிட்டா'.

சங்கிலி : பெ. 1. கழுத்தணி, 2. இரும்புச் சங்கிலி, 'நாய்ச்சங்கிலி', 'சைக்கிள் சங்கிலி', 'நுகத்தை மாட்டும் சங்கிலி'.

சங்கிலி எணைப்பு : சங்கிலி இணைப்பு : பெ. கயிற்றை ஒன்றோடு ஒன்று பின்னுதல்.

சங்கிலி புங்கிலி : பெ. விளையாட்டின் பெயர்.

சங்கிலி பேட்டு : பெ. சீலையின் கரை.

சங்கிலியோசை : பெ. குண்டித்திருகிக் கதவைத் திறந்து மூடும் போது 'நிநி நீநீ' என வரும் ஓசை. இவ்வோசை வரின் நல்லது என்பது நம்பிக்கை.

சங்கு : பெ. 1. ஊதுகருவி, "சும்மா கெடந்த சங்கெ ஊதிக் கெடுத்தானாம் ஆண்டி", 2. பார். சங்கடை.

சங்கு ஊதற நேரம் : பெ. காலை ஆறுமணி, பகல் ஒருமணி, மாலை ஆறு மணி.

சங்குக் கவுறு : பெ. மாட்டின் கொம்பிற்குப் போடும் கயிறு.

சங்கு சக்கரப்பிடி : பெ. பிடிமணியின் வகை.

சங்குமாண்டி : பெ. பண்டாரச் சாதியின் உட்பிரிவு.

சங்கு நண்டு : பெ. நண்டுவகை.

சங்கோசம் : பெ. நாணம் (வடசொல்).

சச்சரவு : பெ. அடிதடிச் சண்டை, 2. வாய்ச்சண்டை.

சஞ்சலப்பு : பெ. 1. கலக்கம் "சாகப்போற கட்டெக்கி சஞ்சலப்பு எதுக்கு?" 2. துன்பம் 'எஞ்சஞ்சலப்பு தீரலெ' (சஞ்சலம்).

சஞ்சனங்கோ : பெ. உறவினர்.

சட்கா : பெ. வண்டிவகை (இந்துஸ்தானி).

சட்டக்கல்லு : பெ. வீட்டுத் திண்ணையின் பட்டையான விளிம்புக்கல்.

சட்டக்காரன் : பெ. ஐரோப்பியனுக்கும் இந்தியனுக்கும் பிறந்தவன்.

சட்டைக்காரி : பெ. ஐரோப்பியனுக்கும் இந்தியனுக்கும் பிறந்தவள்.,

சட்டக்குதிரை : பெ. வெளிர் சிவப்பு நிறமுள்ள குதிரைவகை.

சட்டம் : பெ. மரச்சட்டம்.

சட்டாம்புள்ளை ; பெ. முன்பிருந்த பள்ளிமுறையில் வகுப்பிற்குத் தலைமை தாங்கும் மாணவன்.

சட்டி : பெ. மண், அலுமினியம், பித்தளை முதலியவற்றால் செய்யப்பட்ட பாத்திரம், 'மண்சட்டி, ஈயச்சட்டி, பித்தளைச் சட்டி' "சட்டி சுட்டது கைவிட்டது".

சட்டி எடுத்தல் : தொ.பெ. இரத்தல் 'சட்டி எடுக்கற நெலமைக்கு வந்துட்டா'.

சட்டி ஒடைக்கறது : சட்டி உடைத்தல் : தொ. பெ. விளையாட்டுவகை.

சட்டிக்கரி : வி.அடை. பார். அட்டக்கரி.

சட்டிகிராப் பில்லு : பெ. புல்வகை.

சட்டி கெராப்பு : பெ. முடியை வட்டமாக வெட்டிக் கொள்ளும் முறை.

சட்டித்தலையன் : பெ. பெருந்தலையன்.

சட்டித்தோசை : பெ. சட்டியில் வார்த்தெடுக்கப்படும் தோசை வகை.

சட்டிதொடுதல் : தொ.பெ. குழந்தை பிறந்து ஐந்து மாதங்கள் ஆனபின் தாய் வீட்டிற்குள் வரச் செய்யும் சடங்கு. எ-டு. காடர்.

சட்டிபேரி : பெ. பேரிவகை.

சட்டு : வி.அடை. கெட்டி 'சட்டு கிடைக்கும் வரை அஸ்தி வாரம் தோண்டனும்'

சட்டுபுட்டுனு : வி.அடை. விரைவுக்குறிப்பு.

சட்டுவச் சோறுவுடறது : தொ.பெ. 1. மணமகள் மணமகனுக்கு உணவு படைப்பான், பின் மணமகன் தங்கச் சீப்பினால் மணமக்களுக்குச் சீவுவான். (எ-டு) : வேளாளர்,

2. மணமகள் அன்னமிட மைத்துனன் கலந்து எடுத்து மாப்பிள்ளைக்குக் கொடுத்தல். எ-டு. உடையார், செந் தலைக் கவுண்டர்.

சட்டுவம் : பெ. 1. பார். கண்சட்டுவம், 2.கரண்டிவகை (தோசக் கரண்டி, தோசத்தட்டு, தோசெ திலுப்பி).

சட்டுனு : வி.அடை. விரைவாக.

சட்டை : பெ. பார். அங்கராக்கு, 2. ஆடை 'சட்டே போடாம வெளையாடறியா 3. மகளிர் மார்பில் அணியும் ஆடை.

சட்டை ஆடு : பெ. வெள்ளையும் கறுப்பும் கலந்த ஆட்டுவகை.

சடங்கு சுத்தறது : தொ.பெ. பரிகாரம் செய்தல்; எலுமிச்சம் பழம் முதலியவற்றால் தலையைச் சுற்றியெறிதல்.

சடச்சி : பெ. 'சடை விழுந்த கூந்தலையுடையவள், 2. மரவகை.

சடசடனு : சடசடவெனல் : வி.அடை. ஒலிக்குறிப்பு.

சடத்தெனை : பெ. திணைவகை.

சடநோவு : சடைநோய் : பெ. பயிர்நோய். எ-டு. வாழை.

சடவாறுதல் : தொ.பெ. இளைப்பாறுதல்.

சடவில்லை. பெ. தலையணி (சடபில்லை, சடைபில்லி).

சடவு : சடைவு : பெ. மனத்தளர்ச்சி 'மனசு சடவா இருக்கு'.

சடாமணி : பெ. ஈசுவரன்.

சடுக்கா : பெ. குதிரைவண்டி.

சடுங்கி : வி.எ. விரிந்து 'செவுறு சடுங்கிரிச்சு'.

சடுத்தம் : பெ. 1. சண்டை, 2. போட்டி, 3. போராட்டம்.

சடெ : சடை : பெ. பின்னிய கூந்தல் (வகை : ஆறுகால் சடை, ஆயிரங்கால் சடை, ஒத்த சடை, சைக்கிள் சடை, மூணுகால் சடை, ரெட்டசடை, ரெண்டுகால் சடை).

சடைக்கால் : பெ. பார். கொடிக்கால்.

சடையலங்காரம் : பெ. சடையை மல்லிகை அல்லது தாழம் பூவினால் தைத்து அலங்கரித்தல்.

சடையன் : பெ. ஆட்பெயர்.

சண்டா அடித்தல் : தொ.பெ. நெல்லிமீதுள்ள பாளையைத் தட்டி நீக்குதல்.

சண்டா ஓட்டு : ஏ.வி.தூற்றும்போது கேழ்வரகின் மீது விழும் ராகியின் பதரைத் துடைப்பம் கொண்டு தட்டி நீக்குதல் (சண்டாமாறு அடி).

சண்டாமாறு : பெ. தானியங்களைக் கூட்டஉதவும் துடைப்பம் (கொழுஞ்சிமாறு).

சண்டாளப்பட்டி மகெ : வசை.

சண்டாளா(ன்) : பெ. கொடும் பாதகன்.

சண்டி : பெ. இடக்குச் செய்-பவன்-பவள்-வது, "சண்டை மாட்டுக்குச் சறுக்கினதே காயம்".

சண்டு : பெ.பதர்.

சண்டுகால் மாடு : பெ. காலை இழுத்து நடக்கும் மாடு.

சண்டுகாலி : பெ. காலை இழுத்து நடப்பவள்.

சணப்பு : பெ. செடிவகை.

சணலு : பெ. 1. செடிவகை, 2. மூட்டைதைக்கும் நூல்வகை.

சத்தம் போடுங்க(ள்) : ஏ.வி. கண்டியுங்கள் 'ஆளுகளே சத்தம் போடுங்க ஒழுங்கா வேலை செய்யட்டும்.

சத்தாயக்கிராங்க : வி.மு. சங்கடப்படுத்துகின்றார்கள்.

சத்தி : பெ. சக்தி.

சத்தி தீர்த்தம் : பெ. விழாச் சடங்குகளில் அம்மனைக் குளிப்பாட்ட ஆற்றிலிருந்து எடுத்துவரும் நீர்.

சத்தியுள்ள சாமி : பெ. ஆற்றல்மிக்க தெய்வம் " சத்தியுள்ள சாமியைக் கும்பிட்டப் புத்தியுள்ள புள்ளை பெறோணும்".

சத்திரஞ்சாவடி : பெ. அன்னசாலை.

சத்து : பெ. மந்திரித்த எந்திரத்தை உள்ளே வைக்கப் பயன்படும் தங்கம், வெள்ளி, ஈயம் ஆகியவற்றால் ஆன தகடு.

சத்துரு : பெ. பகைவன் "தன் சதையே தனக்கு சத்துரு" (வட சொல்).

சத்தை : பெ. பார். சண்டு.

சத்தை பொறுக்குதல் : தொ. பெ. ஏர் உழுதபின் பூமியிலுள்ள காய்ந்த புற்களைப் பொறுக்கி எடுத்தல்.

சதக்குனு : வி.அடை. குறிப்பு 'சதக்குன்னு குத்தினான்'.

சதகுப்பை : பெ. மருந்துப் பூண்டுவகை.

சதசதப்பு : பெ. ஈரப்பற்று 'மழை பேஞ்சு மண்ணு சதசதன்னு இருக்கு'.

சதா : வி.அடை. எப்பொழுதும்.

சதிகாரே : சதிகாரன் : பெ. மோசக்காரன்.

சதுப்பம் : பெ. மாட்டு வியாபாரத்தில் நாற்பது ரூபாயைக் குறிக்கும் சொல் (சதுப்பாவு).

சதுரக்கள்ளி : பெ. கள்ளிவகை.

சதுராட்டம் : பெ. விளையாட்டுவகை.

சதுரிச்சு : வி.எ. செதுக்கி.

சதைப்புடிப்பு : பெ. ஒருவித வாயு சம்பந்தமான நோய்.

சந்தக்கெடுவு : பெ. சந்தை நாள்.

சந்தகை : பெ. இடியாப்பம் (சேமியா).

சந்தடி : பெ. "கலியாணச் சந்தடியிலே எவனோ தாலிகட்ட மறந்தாப்பலே" (தெலுங்கு).

சந்தர்ப்பம் : பெ. முன்பின்னமைவு (சமயம், வாய்ப்பு).

சந்தனக்கலர் : பெ. நிறவகை.

சந்தனக்கோலு : பெ. ஊதுபத்தி.

சந்தன நலுங்கு : பெ. சந்தனத்தை வெண்ணேயில் தொட்டு மணமக்களின் கை, கால், முகம் இவற்றிற்குப் பூசும் திருமணச் சடங்கு.

சந்தனப்பிள்ளை : பெ. வெள்ளைநிறம் அல்லது மஞ்சள் நிற முள்ள மாட்டுவகை.

சந்தனவேம்பு : பெ. மரவகை.

சந்தானத்தோசம் : பெ. குழந்தை இன்மைக்குக் காரணமான தோசம்.

சந்தானம் : சந்தனம் : பெ.

சந்தா : பெ. (உருது).

சந்தான விரதம் : பெ. மக்கட்பேறு அடைய செய்யும் நோன்பு.

சந்தி : பெ. பல தெருக்கள் கூடுமிடம்.

சந்தி சிரிக்க வச்சிருவே (வைத்துவிடுவேன்) : பழிப்பிற்கிடமாக் குதல்.

சந்திரபொறை (பிறை) : பெ. தலைவகிட்டின் இரு பக்கங்களில் வைக்கும் அணிகலன்.

சந்து : பெ. 1. இடைவெளி, 2. பலவழிகூடுமிடம், 3. மிகக் குறு கிய பாதை (தெலுங்கு).

சந்துபொந்து : பெ. மறைவான இடம் (மூலை முடுக்கு).

சந்தை : பெ. குறித்த காலங்களில் கூடும் கடைகள்.

சந்தைச்சீரு : பெ. மணமக்களுக்குப் பெண்ணின் தாயார் சந்தையில் புதிய பை வாங்கி அதில் பணம், வெற்றிலை, பாக்கு முதலியன வைத்துக் கொடுத்தல். (எ-டு. சக்கிலியர்).

சந்தைச் செலவு : பெ. திருமணத்தில் சாப்பாட்டிற்கு ஆகும் மொத்தச் செலவு. இதை இருவீட்டாரும் சமமாகப் பிரித்துக் கொள்வர்.

சந்தை சாரி : சந்தை : பெ. கூட்டுச்சொல்.

சப்சாடா : வி.அடை. முழுவதும்.

சப்தகன்னிமார் : பெ. அண்ணன்மார் கோவிலிலுள்ள காவல் தெய்வம்.

சப்தி : பெ. கடன் கட்டாவிட்டால் அரசுசெய்யும் உடைமைப் பறிமுதல்.

சப்ப(பை)க்கட்டு : பெ. குற்றங் குறைகளைத் தாங்கிப் பேசுதல் (நொண்டிச்சாக்கு).

சப்பட்டை : பெ. தட்டை 'சப்பட்டை மூக்கன்'.

சப்பணம் : சம்மணம் : பெ. அட்டாங்காலிடுகை.

சப்பப்புழுவு : சப்பைப் புழு.

சப்பபொரி : பெ. உப்பு சேர்க்கப்படாத பொரி.

சப்பழிஞ்சு : வி.எ. வடிவு குலைந்து 'போசி சப்பழிஞ்சு போச்சு'.

சப்பளிதல் : தொ.பெ. தட்டையாதல்.

சப்பாணி : பெ. சம்மணம் போடுவதுபோல், ஆயின், கால்களையும் துணிகளையும் பரப்பி அகலமாக உட்காருதல், 2. நொண்டி.

சப்பாத்திக்கள்ளி : பெ. பார். சதுரக்கள்ளி.

சப்பா வைத்தல் : தொ.பெ. ஒருவனுடைய பாகத்திற்கு நீர் பாயும்போது மற்றவர்களுடைய பாகத்திற்குச் செல்லாமல் இருக்க மணியக்காரர் இடும் முத்திரை.

சப்பாளம் : பெ. பார். சப்பணம் (சப்பளம், சப்பளாம், சப்பாங் கால், சம்மணங்காலு).

சப்பி : வி.எ. ஊறிந்து "நல்ல சப்பித் தின்னு" (சூப்பி).

சப்புக் கொட்டறது : தொ.பெ. உணவை நினைப்பதால்., கேலியால், வருத்தத்தால் வாயால் எழுப்பும் ஒலி - 'ச்சூ' 'ச்ச்'.

சப்புன்னு : வி.அடை. 'சாரமின்மைக் குறிப்பு' 'விசயொ சப்புனு போச்சு'.

சப்பெ உதுறுது : வி.மு. பருத்தியின் .சப்பை நீர் இன்றி அல்லது நோயால் உதிருதல்.

சப்பை : பெ. 1. இனிப்பு, உப்பு , காரம் முதலியவை குறைதல் "காப்பி சப்பையா இருக்கு', 2. சதை, 3. தட்டையானது, 4. தோள், 5. பூ மொக்கு.

சப்பைக்காய் : பெ. செடி அடர்த்தியாக இருக்கும்போது மறைவாக உள்ள பூ தன் மகரந்தச் சேர்க்கையால் காய் ஆதல். இதிலிருந்து தரம் குறைந்த பருத்தி கிடைக்கும்.

சப்பைவாய் : பெ. உதடுகள் சிறிது உள்ளடங்கிய வாய்.

சப்பைவாயன் : பெ. ஆட்பெயர். (சப்பை வாய்ச்சி).

சப்பைவீக்கம் : பெ. கால்நடை வியாதி வகை.

சப்பைவுழுதல் (உதிர்தல்) : தொ.பெ. பருத்திக்கு வரும் நோய்.

சப்பை வெச்சிடுது (வைத்துவிட்டது) : தொ.பெ. பருத்தி நாற்பத்தைந்து நாளில் காய்க்கத் தொடங்குதல்.

சப்போட்டா : பெ. பழவகை.

சப்போட்டு : பெ. உதவி (ஆங்கிலம்).

சப்ஜா : பெ.1. திருநீற்றுப்பச்சை, 2. முழுவள்ளை நிறமுள்ள அதாவது கருமயிலை நிறமுள்ள குதிரைவகை.

சபதம் : பெ. பந்தயம்.

சபலம் : பெ. 1. ஆசை, 2. நிலையற்ற உள்ளம்.

சபாஷ் : இடை. மிக நன்று எனப் பொருள்படும் குறிப்புச் சொல் (பெர்சியன்).

சபையோர் : பெ. உற்றார் உறவினர் 'ஞாயித்துக் கெழமெ கரு மாதி சபையோர் வந்துடுங்க(ள்)'

சம்(மு)சாரி : பெ. குடும்பத்தினன்.

சம்பங்கி : பெ. 1. சம்பகம் , 2. லில்லிப்பூ.

சம்பங்கோழி : பெ. பார். காட்டுக்கோழி.

சம்பந்தம் : பெ. 1. உறவு, 2. தொடர்பு, 3. பொருத்தம் (வடசொல்).

சம்பந்தம் கலக்கறது : தொ.பெ. சம்பந்திமார்கள் நால்வரும் பெண்வீட்டிலும் அடுத்த நாள் மாப்பிள்ளை வீட்டிலும் ஒன்றாகச் சாப்பிடுதல். எ-டு. கவுண்டர்.

சம்பந்தி : பெ. மக்களின் திருமணத்தால் பெற்றோர் உறவு கொள்ளுதல் (ஆம்பளை சம்பந்தி, பொம்பளை சம்பந்தி).

சம்பந்தி சோறு : பெ. இறந்தவர் வீட்டிற்குச் சம்பந்தி முறை யுள்ளவர்கள் சமைத்துக் கொடுக்கும் உணவு.

சம்பம் : பெ. ஆணவம் "சம்பத்தப் பாருடா அம்பட்டம் பறையா".

சம்பல் : பெ. விலைமலிவு 'தக்காளி சம்பலாப் போச்சு ' (சவதம்).

சம்பா : பெ. 1. சம்பா விளையாட்டில் இரண்டு வெள்ளை, இரண்டு கறுப்பு விழுதல் 2. நெல்வகை, 3. விளை யாட்டின் பெயர் - காசு வைக்காமல் ஆடும் ஆட்டம்; காசு வைப்பின் தாயம் என்று பெயர் (3. சம்பாக்கரம்).

சம்பாகாய் : பெ. 1. சன்னமான மிளகாய் வகை, 2. பொடிக்காய்.

சம்பாங்கி எண்ணெ : சம்பக எண்ணெய் : பெ.

சம்பாதனெ(ணை) : பெ. பொருள் ஈட்டுகை (சம்பாத்தியம்).

சம்பாப்பொடி : பெ. சம்பா ரவையின்பொடி.

சம்பா ரவை : பெ.ஒருவகை கோதுமை ரவை.

சம்புடம் : பெ. மூடியுள்ள பாத்திர வகை.

சம்மட்டி : பெ. சுத்தியல் வகை "கம்மாளன் நாய் சம்மட்டி சத்தத்துக்கு அஞ்சுமா? "(சமுட்டி).

சம்மதம் : பெ. உடன்பாடு (வடசொல்).

சம்மந்தி யழைப்பு : பெ. கிடாய் வெட்டிலிருந்து வைக்கும் திருமணச் சடங்கு.

சமக்காளம் : பெ. விரிப்பு வகை : (இந்துஸ்தானி).

சமஞ்சுட்டா : சமைந்துவிட்டாள் : வி.மு. பார். உக்காந்துட்டா. "சமஞ்ச கொமுரியை ஊட்டுலெ வச்சிகிட்ட இருக்கறது மடியிலே நெருப்பைக் கட்டிட்டு இருக்கற மாதிரி".

சமஞ்சாலு : சமன்சாலு : பெ. நடவுபோட சமமாக உழும் உழவு.

சமணம் : பெ. பார். காது. நோண்டி. சமத்தில்லை : வி.மு. விருப்பமில்லை 'அந்த எடம் உனக்கு சமத்தில்லை'.

சமத்து : பெ. 1. சாது 'சமத்தா இருக்கா உம் பையெ', 2. வல்ல வன் 'நீ ரொம்ப சமத்துடா'.

சமதையான : வி.அடை. ஒப்பு 'அவன் இவனுக்குச் சமதை யானவன்'.

சமய சஞ்சீவி : பெ. சமயத்தில் உதவுபவன்.

சமய படைக்கால் : பெ. ஒரு விளா முடிந்ததும் அடுத்த விளா அறுக்க உழவு மாட்டைக் கட்டுப்பத்தி ஓட்டுதல் 'நீ சமய படைக்கால் ஒழுங்கா புடிச்சாத் தானே அடுத்த வெளாவு சரியா அறுக்க முடியும்'

சமனு : பெ. மஞ்சள் நிறமுள்ள குதிரை வகை.

சமாதி : பெ. கல்லறை (வடசொல்).

சமாளி : பெ. செருப்பு.

சமாளி : ஏ.வி. பெருங்கஷ்டத்தோடு ஒன்றை நிறைவேற்றுதல்.

சமாளி தொடறது (தொடுதல்) : தொ.பெ. சக்கிலியன் அரிசி மேல் காலணியை வைத்து மணமக்களுக்குக் கொடுக்கும் திருமணச்சடங்கு. எ-டு. உடையார், வேளாளர் செட்டியார்.

சமாளிவுடுதல் : தொ. பெ. பார். சமாளி தொடறது. எ-டு. செந்தலைக் கவுண்டர்.

சமிக்கை : சைகை : பெ.

சமீன் : பெ. நிலம் முதலிய உடைமை (பாரசீகம்).

சமுக்காளப் பண்டாரம் : பெ. பண்டாரச் சாதியின் உட்பிரிவு.

சமு(ம்) சாரம் : பெ. மனைவி.

சமுத்திர நண்டு : பெ. பச்சையின் வடிவம்.

சமுத்திரம் : பெ. 1. கடல், 2 மரவகை.

சமையற மாதிரி இருக்கு : வி.மு. பூப்பு அடையும் பருவத்திலுள்ள பெண்களைக் குறித்தல்.

சயனம் : சகுனம் : பெ.

சயனு : செயின் : பெ.

சர்க்கரை நோவு : பெ. பயிர்நோய். எ-டு. சோளம்.

சர்க்கீசு : சர்க்கஸ் : பெ. (ஆங்கிலம்).

சர்ச் : பெ. ஒயின், பிராந்தி, விஷ்கி முதலிய உயர்ரக மது வகைகளைக் குறிக்கும் குறிப்புமொழி (ஆங்கிலம்).

சர்ப்பகாந்தி : பெ. விடத்தன்மையுடைய மலர் (சர்ப்பகந்தி).

சர்ப்பம் : பெ. பாம்பு (வடமொழி).

சர்ப்பதோசம் : பெ. தீட்டுத்துணியின் மேல் பாம்பு போனதால் ஏற்பட்ட தோசம். இத்தோசம் இருப்பின் வயிற்றுவலியுடன் முகம் இருண்டு இருக்கும். தோசம் நீங்கினால் தான் குழந்தை உண்டாகும் என்பது நம்பிக்கை.

சர்பகண்டி : பெ. மரவகை.

சர்பத்து : பெ. பான வகை (அரபு).

சர்பீஸ் கட்டு : சர்பிடிகேட் : பெ. (ஆங்கிலம்).

சர்வே : பெ. நிலத்தை அளத்தல் (ஆங்கிலம்).

சர்வேயரு : பெ. நிலத்தை அளப்பவர் (ஆங்கிலம்).

சரக்கவிழ்த்தல் : தொ.பெ. பொய்ச் செய்திகளைக் கூறுதல் ‘சரக்கே அவுத்துவுட்டது போது(ம்) நிறுத்து’

சரக்கு : பெ.1. சாராயம் ‘நல்ல சரக்கா ஒரு பாட்லு குடு’

2. மருந்துப் பண்டம், 3. வியாபாரப் பண்டம் "செட்டி சரக்கிருந்தார் சட்டி மணக்கும்"

சரக்கு மாஸ்டர் : பெ. ஓட்டல் சமையல்காரர் (மாஸ்டர் - ஆங்கிலம்).

சரக்சரக்குன்னு : வி.அடை. 'சரசரன்னு பாம்பு போவுது'.

சரடு : பெ. பார். அங்கராக்கு (ஆங்கிலம்).

சரடு : பெ. 1. செய்தி 'உஞ்சரடை அவுத்துவுடு', 2. தறியில் ராட்டை இறகையும் தார் ஊசியையும் இணைப்பது, 3. தாலி, 4. புளுகு 'உஞ்சரடே இங்க உடாதே'.

சரடு அவுக்கறது : தொ.பெ. மனைவியின் கழுத்திலுள்ள சிறு தாலியை அவிழ்த்து இறந்த கணவனின் கால் கட்டை விரலில் கட்டுதல் : எ-டு. கவுண்டர்.

சரணம் : பெ. வணக்கம்.

சரணம் ஐய்யப்பா? : இடை. ஐய்யப்ப பக்தர்கள் எழுப்பும் குரல்.

சரப்பலகை : பெ. கடைகளின் அடைப்புப் பலகை (சொருகு பலகை).

சரம் : பெ. 1. சமசதுர வடிவில் எட்டு அல்லது ஒன்பது அடிநீளம் உள்ள மரத்துண்டின் அளவு, 2. மாலை.

சரமாரியா : வி.அடை. குறிப்புச்சொல் 'கல்லு சரமாரியா உழுந்துச்சு'

சரமாலை : பெ : நீளமாகக் கட்டப்பட்ட பூச்சரம்.

சரமுருக்கு : பெ. சரமாகக் கோக்கப்பட்ட சிறு முறுக்குள்.

சரவெளக்கு : பெ. கோவிலின் கதவோரத்தில் வரிசையாக உள்ள விளக்குகள்.

சரள் : பெ. கொடிப்படர நடப்படும் குச்சிகள்.

சரள் நடுதல் : தொ.பெ. பார். 2.குச்சி ஊனுதல்.

சராசரி : பெ. (உருது).

சராய் : பெ. அரைக்காற் சட்டை (செராய்).

சரிகட்டறது : தொ.பெ. 1. ஈடுசெய்தல், 2. ஒப்பச் செய்தல், 3. நேர் படுத்துதல்.

சரிகை : பெ. (பெர்சியன்).

சரிகைக்கம்பி : பெ. ஆடையின் விளிம்பிலுள்ள சரிகைக் கரை.

சரிக்சிங்கோ : ஜட்ஜ் . பெ. நீதிபதிகள் (ஆங்கிலம்).

சரியா நடுவே : பெ. மத்தியில்.

சரிவெட்டு : சரிபாதி : பெ.

சருக்கி வெளையாட்டு : பெ. விளையாட்டுவகை.

சருகு : பெ. 1. உலர்ந்து வற்றிய இலை "சருகு அரிக்க நேர மிருக்கு குளிர் காய ரேநமில்லெ", 2. ஒரு பாத்தி வரிசை.

சருகுநோவு : பெ. பயிர் நோய். எ-டு : வாழை.

சருகுமான் : பெ. மான்வகை.

சருகுவில்லை : பெ. சரிகையில் வட்டமாகச் செய்த தலையணி.

சருங்கு : ஏ.வி. சறுக்கு.

சருதி : பெ. பார். எறவு.

சருவம் : பெ. வாயகன்ற பாத்திர வகை (தவளை, வாணாபோசி).

சருவி : பெ. ஞாயம், பேச்சு, 'உங்கள் சருவியெல்லா; இங்கே வேண்டா'.

சல் ஒழுக்கறா : சல் ஒழுக்குகின்றான் : வி.மு. வாய் ஓரத்தில் உமிழ்நீர் வழிதல்.

சல்லக்கத்தி : பெ. நீளமான மூங்கிற் குச்சியின் முனையில் கட்டப்பட்ட கத்தி.

சல்லடை : பெ. 1. பார். காப்பி வடி, 2. மாவு, தானியம், மண் முதலியன சலிக்குங் கருவி.

சல்லடைக்கொப்பு : பெ. காதின் மேற்புறம் அணியும் சேவுண்டிபோல் உள்ள காதணி :

சல்வி : பெ. 1. கருவாடு, 2. நாணயத்தின் கடைசி அளவு.

சல்லிக்கட்டு : பெ. மாட்டை அடக்கும் விழாக்கால விளையாட்டு.

சல்லிக்காடு : பெ.சிறுகற்கள் உள்ள பூமி.

சல்லிசா : வி.அடை. எளிதாக 'காயி சல்லிசா கெடைக்கு' (அரபு).

சல்லிட்டு : வி.எ. சல்லிடுதல் : 1. எதிர்பார்ப்பில் ஏமாற்றம், 2. நா சுவைக்காக ஏங்குதல்.

சல்லிப்பய : சல்லிப் பையன் : பெ. வசை. (பொடிப்பய).

சல்லி மண்ணு : பெ. மண்வகை.

சல்லிமாடு : பெ. சல்லிக்கட்டுக்குரிய மாடு.

சல்லுப்புடுச்ச : பெ. எ. தொல்லை பிடித்த 'சல்லுப் புடுச்ச வேலை'

சல்லுமுல்லுனு : வி.அடை. 'எரிச்சல் குறிப்பு', 'சல்லு முல்லுனு உளுகறான்' (சல்லு புள்ளுனு).

சல்லை : பெ. 1. அளவு - பத்து முழம் ஒரு சல்லை, 2. ஒரு முழுக் கரும்பு, 3. கரும்பின் கணு, 4. துடுப்பு, 5. தொல்லை, 6. நீண்ட மூங்கில் (தோட்டாக்கருவி)

சல்லை போடறது : தொ.பெ. படகுக்குத் துடுப்புப் போடுதல்.

சலக்கால் : பெ. கிணறு தோண்டும்போது நீர் வருதல் 'சலக்கால் கெடச்சிருச்சு'

சலகை : பெ. 1. நூற்றி இருபது அல்லது முப்பது வள்ளம் கொண்ட அளவு,

2. பெரிய ஆண் பன்றி, 3. மாட்டு வியாபாரத்தில் இருபது ரூபாயைக் குறிக்கும் சொல்.

சலகைத்தட்டை : பெ. மாட்டு வியாபாரத்தில் இருபத்தைந்து ரூபாயைக் குறிக்கும் சொல்.

சலங்கைப் பணியாரம் : பெ. வேக வைத்து வெல்லம் சேர்த்து ஆட்டிய கடலை மாவினைப் பச்சரிசி மாவில் துவட்டிச் சுடுதல்.

சலதாரை : பெ. சாக்கடை.

சலப்புத்தண்ணி : பெ. "ஆத்து நெறையத் தண்ணி போனாலும் நாய்க்குச் சலப்புத் தண்ணிதா"

சலம் : பெ. தண்ணீர் (வடசொல்).

சலமீன் : பெ. கருவாடு.

சலமூலை : பெ. பார். ஈசானிய மூலை.

சலவாதி : பெ. மலம்.

சலவாயி : பெ. உமிழ்நீர் 'சலவாயி ஒழுக்கறதெ பாரு'.

சலாம் : பெ. வணக்கம் (அரபு).

சலி : ஏ.வி. 'மாவு சலி'

சலீங் : இடை. ஒலிக்குறிப்பு 'கீழே உளுந்தாள் அடிவயிறு சலீங்கோ'.

சலிச்சுப் போச்சு : வி.மு. 1. உணவுவகை கெடுதல், 2. சோர்தல்.

சலீசாவுடனும் : வி.மு. சலுகை தர வேண்டும்.

சலீசு : பெ. மலிவு

சலுகை : பெ. 1. இளக்காரம், 2. உதவி, 3. செல்வாக்கு, 4. விசேடச் சிறப்புத் தள்ளுபடி.

சலுவிசு : பெ. மலிவு.

சலுவுதண்ணி : பெ. பார் உசுப்புத்தண்ணி (சறுவுதண்ணி).

சவ்வரிசி : பெ. பண்டம்.

சவ்வரிசிப் பாயாசம் : பெ. பான வகை.

சவ்வாது : பெ. வாசனைத் திரவியம்(அரபு).

ச. கிராக்கி : பெ. இழுத்தடித்தற் குறிப்பு.

சவ்வு முட்டாயி : பெ. மிட்டாய்வகை.

சவங்கட்டி எடுத்தல் : தொ.பெ. சவத்தை ஆடையால் மூடி மூன்று சிறு துணிகளால் கட்டிப் பங்காளிகள் நான்கு பேர் எடுத்தல்.

சவம் : பெ. பிணம்.

சவரன் : பெ. எட்டுக்கிராம் கொண்ட அளவு (ஆங்கிலம்).

சவலைக் கழுத்துக்காரி : பெ. ஆட்பெயர்.

சவலைப்புள்ளெ : பெ. தாய்ப்பாலின்றி மெலிந்த குழந்தை "சவலெப் புள்ளெ அறியுமா மொலெக்குத்து நோவு".

சவளி : பெ. ஆடை.

சவாப்பு : பெ. விடை

சவாரி : பெ. வண்டி முதலியவற்றில் செல்லுதல் (பெர்சியன்).

சவாரித்தப்பை : பெ. கிளிமூக்குச் சட்டத்தின் பக்கங்களில் வரும் மூங்கில் வண்டியோட்டிக்குப் பாதுகாப்பு அளிப்பது.

சவாரி வண்டி : பெ.1 கூடாரமுள்ள மாட்டுவண்டி, 2. மாட்டு வண்டியை விடச் சிறியதாய் உள்ள ஆட்கள் பயணம் செய்யும் வண்டி.

சவால் : பெ. வினா (அரபு).

சவுக்காரம் : பெ. அழுக்கு நீக்கும் சோப்பு.

சவுக்கியமா இருக்கீங்க : நலமாக இருக்கின்றீர்களா?

சவுக்கிலி : பெ. நாடாவைக் கோத்து எடுக்க உதவும் தறிக்கருவி.

சவுக்கு : பெ. மரவகை (பெர்சியன். வகை : கருப்புச்சட்டை, சாம்ப சவுக்கு, சுத்தி சவுக்கு).

சவுங்கி : வி.எ. 1. மெலிந்து, 2. வாடி.

சவுரி : பெ. 1. அலங்காரத் தாவரம், 2. பார். கட்டுமசுரு.

சவுரியம் : சௌகரியம் : பெ.

சவுல் : பெ. கயிறு திரிக்கப் பயன்படும் கரண்டிபோலுள்ள கருவி.

சவுன் : சமம் : பெ. (சமன்).

சள்ளு : பெ. முற்றாத இளங்காய் (சள்ளுக்காய்).

சளசள : இடை. ஒலிக்குறிப்பு.

சளம்ப : பெ. அடை. நிறைய ‘தலைக்கு சளம்ப எண்ணெ தேயி’

சளாகண்டவரம் செவப்பு : பெ. சளாகண்டவரம் எனும் ஊரில் தயாரிக்கப்பட்ட சிவப்புச் சோலை வகை.

சளி : பெ. மூக்குச்சளி “மூக்குள்ளவரெக்குஞ் சளி”, 2. ஜலதோசம்.

சளோர் சளோர் : இடை. ஒலிக்குறிப்பு ‘சளோர் சளோர்ன் அடிச்சுட்டா’

சறுக்கும் : வி.மு. வழுக்கும் “ஆனெக்கும் அடி சறுக்கும்”.

சன்னக்கம்பி : பெ. ஆடையின் சிறு கரைக்கோடு

சன்னக்கூனி : பெ. கூனிக் கெருவாட்டின் பொடி.

சன்னம் : பெ. நுண்மை.

சன்னல் : பெ. (போர்ச்சுக்கீசியம்).

சன்னல் செயின் : பெ. கழுத்தணிவகை.

சனஞ்செராதவன் : பெ. பார். ஒண்டிமினி.

சனிக்கிரகதோசப் பரிகாரம் : பெ. சனிக்கிரக தோசம் நீங்கச் செய்யும் பரிகாரம்.

சனிக்கிரக தோசம் : பெ. தோசங்களிலொன்று.

*சா*

*சாக்கணாக்கறி :* பெ. மது உண்போர் தின்னும் மாமிசம்.

*சாக்கணாங்கடை :* பெ. மதுகுடிப்போர் உண்ணும் மாமிசம் முதலியன உள்ள கடை.

*சாக்கி சாட்சி :* பெ. 1. "ஓணானுக்கு வேலி சாக்கி வேலிக்கு ஓணான் சாக்கி" .2. பட்டுப்புழு வளர்ப்பில் புழு வெளி வந்த நிலை.

*சாக்கிட்டு :* பெ. பார். 3. சட்டை (ஆங்கிலம்).

*சாக்கு :* பெ. 1. பார். கோணிச்சாக்கு, 2. வீண் காரணங்கள், சமாதானம் (டச்சு).

*சாக்குப்படுதா :* பெ. இரண்டு மூன்று சாக்கைப் பிரித்துத் தைத் துப் பெரிதாக்கியது.

*சாக்குப்போக்கு :* பெ. பார். 2. சாக்கு.

*சாக்சு :* பெ. காலில் அணியும் உறைவகை (ஆங்கிலம்).

*சாகறதுக்கா வெளைஞ்சுது (விளைந்தது) :* வி.மு. யாராவது இறந்தபோது விளைச்சல் மிக நன்றாக இருப்பின் கூறுவது (சாவு வெள்ளாமை).

*சாகாவு :* பெ. குளுமையான இடம்.

*சாகு :* ஏ.வி. இறந்து போ(சாவு).

*சாகுபடி :* பெ. மகசூல்.

*சாங்காலம் : சாயுங்காலம் :* பெ. மாலைப்பொழுது.

*சாங்கிதம் :* பெ. பார். 1. உபதை.

*சாங்கியம் :* பெ. சம்பிரதாயம் (வடசொல்).

*சாச்செ : சாய்த்தேன் :* வி.மு.

*சாட்டக்குச்சி :* பெ. நூல் கயிற்றையுடைய வண்டி ஓட்டும் குச்சி (சாட்டவார். சாட்டை).

*சாட்டர் பொட்டி :* பெ. கிணற்றிலுள்ள மின்சார இயந்திரத் தின் பாகம் (ஆங்கிலம்).

*சாட்டாரு :* பெ. கிணற்றிலுள்ள மின் இயந்திரத்தை இயக்கும் பெட்டி (ஆங்கிலம்).

(சாட்டரின் பாகங்கள் : கலர்காயில், காயில். நோவால் காயில், குண்டு. குதிரை).

சாட்டரை அடிச்சுடு : ஏ.வி. டியூட் லைட்டில் ஸ்டாட்டரைத் திருப்பு.

சாட்டிவுடுதல் : தொ.பெ. பிறனிடம் சார்த்துதல் (சாட்டு).

சாட்டை : பெ. 1. பார். சாட்டக்குச்சி, 2. பம்பரத்தினைச் சுற்ற உதவும் கயிறு.

சாட்டையடி : பெ. சாட்டையால் அடித்துக் கொள்ளும் விழாச் சடங்கு "சாமி வந்தபோதே சாட்டெ போட்டுக் கோணும்"

சாட்டைவிழுதல் : தொ.பெ. குருத்துக்கழன்று விழும் பயிர் நோய்.

சாடி : பெ. 1. இருளர் தெய்வம். 2. கண்ணாடிப் பாட்டில், 3. கோள்மொழி, 4. மண்சாடி (போர்ச்சுக்கீசியம்).

சாடி : வி.எ. திட்டுதல் 'என்னடி சாடிகிட்டே இருக்கே'.

சாடிக்கூடை : பெ. வட்டமாக உள்ள பெரிய கூடை.

சாடை : பெ.. 1. கோள்மொழி 'சாடைபோட்டு பேசறா', 2. முகச் சாயல்,

சாடைமாடையாய் : வி.அடை. 1. குறிப்பாக 'சாடைமாடையாக் கேட்டே ஒத்துக்க மாட்டேங்கறான்', 2. பார்த்தும் பாராமல்.

சாண் : பெ. ஒன்பதங்குல அளவு "தலைக்கு மேலே வெள்ளம் போனா சாண் போனா என்ன மொழம்போனா என்ன".

சாணாத்தி : பெ. சாணாரப் பெண்.

சாணான் : பெ. கள்ளிறக்கும் சாதியான் "சாணானுக்கு ஏறெ யிலே ஒரு புத்தி எறங்கையிலே ஒரு புத்தி".

சாணி : சாணம் : பெ. "சாணி யெடுக்கற நாய்க்கு சந்தனப் பொட்டும் ஒரு கேடு".

சாணிக்கூடை : பெ. உழவுக்குப் பயன்படும் கூடை (சாணி மக்கிரி).

சாணிச்சாயம் : பெ. சாணம் கரைத்த நீரில் கலந்து வீடு மெழுகப் பயன்படுத்தும் பச்சை நிறப் பவுடர் (சாணிப்பவுடர்).

சாணிச்சீலை : பெ. வீடு மெழுகும் துணி.

சாணித்தட்டு : பெ. பார். எருமாமட்டை (சாணித்தட்டை).

சாணி தெளிக்கிற நேரம் : பெ. சூரிய உதயத்திற்முன்.

சாணிப்பாலு : பெ. சாணம் கரைத்த நீர்.

சாணிப்புழு : பெ. சாணத்திலுள்ள வெள்ளைப் புழு.

சாணிபோடு : ஏ.வி. வீட்டு வாசலைக் கூட்டிச் சாணி கரைத்த நீரைத் தெளி:

சாணியடுப்பு : பெ. கோபர் கேஸ்.

சாணிவண்டு : பெ. இது மாட்டின்மேல் பட்டால் பட்ட இடத்தில் மாட்டிற்கு வீக்கம் வரும்.

சாணைபுடிக்கறது : தொ. பெ. 1. ஆயுதத்தைக் கூர்மைப் படுத்துதல், 2. விளக்கு மாவு வடிவத்தில் (நீள் சதுரம்) பச்சரிசி மாவைப் பிடித்தல்.

சாத்தி : வி.எ. மூடி 'சாத்திக் கெடக்குது'.

சாத்திரிக்கம் : சாமர்த்தியம் : பெ.

சாத்து : ஏ.வி.1. அடி 'நாலு சாத்து சாத்து', 2. அணிவி 'சாமிக்குப் பூ சாத்து'.

சாத்துக்காயம் : பெ. உணவிற்குப் போடும் பெருங்காயம் (வகை : மாட்டுக்காயம்).

சாத்துக்கொடி : பெ. கிச்சிலி வகை.

சாதகம் : பெ.1. சௌகரியம் 'தனக்குச் சாதகமா பேசிடுவா',

2. பிறவிக்குணம் 'இவஞ் சாதகம் அப்புடி'.

சாதனம் போக்குவரத்து : பெ. செலவு முதலியன.

சாதனை : பெ.1. காரியம் முடித்தல், 2. பிடிவாதம் 'சோறு உங்க மாட்டேனு சாதனை பண்றா(ன்)'.

சாதா : பெ. அடை. 1. எளிது 'சாதா விசயம்', 2. பொது 'சாதா தோசை', 'சாதா துணி'.

சாதாக்கொப்பு : பெ. காதணிவகை.

சாதாச் செயினு : பெ. கழுத்தணிவகை.

சாதா செருப்பு : பெ. முன்பகுதி சதுரமாக உள்ள பழைய அமைப்புடைய செருப்புவகை.

சாதாத்தெனை : பெ. தினைவகை.

சாத்தா புரோட்டா : பெ. சிற்றுண்டி வகை.

சாதாமுடுச்சு : பெ. துணி தைக்கும்போது போட்டுக் கொள்ளும் முடிச்சு.

சாதி : பெ. 1.இனம், 2. சிறந்தது 'சாதி மாடு' சாதிநாயி, 3. மல்லிகைவகை.

சாதி : ஏ.வி. காரியத்தை முடி.

சாதிக்கா(ய்) : பெ. நறுமணம் மிக்க மருந்துப்பொருள்.

சாதிக்காரப் பொட்டி : பெ. பச்சையின் வடிவம்.

சாதிகெட்ட பய (பையன்.) : வசை.

சாதி கெட்டவன் : வி.அ. பெ. தாழ்ந்த குலத்தோன்.

சாதி நாயம் : பெ. குலம், உறவுமுறை முதலியன வினவுதல் 'சாலக்கார கண்ட சாதி நாயம் பேசுவாண்டி'.

சாதிப்பத்திரி : பெ. சாதிக்காயை மூடியிருக்கும் தோல்.

சாதிப்பூ : பெ. மல்லிகைவகை (வகை : செகப்பு சாதிப்பு, வெள்ளை சாதிப்பூ).

சாதிமல்வி : பெ. மல்லிகைவகை.

சாதி வெ(வி)லக்கு : பெ. பஞ்சாயத்து மூலம் தண்டனைக்கு ஆளாவோனை விலக்கி வைத்தல்.

சாந்தி கழித்தல் : தொ.பெ. கிரகம் முதலியவற்றின் பீடையைப் போக்குதல் (சாந்திப்பரிகாரம்).

சாந்துப்பொட்டு : பெ. நெற்றியிலிடும் சாந்து.

சாப் : பெ. சமையல் அறை (ஆங்கிலம். சாப்பு).

சாப்பாட்டு ராமன் : பெ. 1. பயனற்றவன், 2. பெருந்தீனிக்காரன்.

சாபம் : பெ. சபித்துக் கூறும்மொழி (வடசொல்).

சாபின் : பெ. பார் சவுக்காரம்.

சாம்பக்குழி : பெ. ஆலை அடுப்பிலுள்ள சாம்பலை அவ்வப்போது வழித்துக் கொட்டப் பயன்படும் குழி.

சாம்பசவுக்கு : பெ. சவுக்கு வகை.

சாம்ப பூத்திருச்சு : பூசனம் பூத்துவிட்டது : வி.மு. 1. காய் இலை முதலியவற்றில் சாம்பல் நிறம் படிதல், 2. நெருப்பில் நீறுபூத்தல்.

சாம்ப(ற்) பூசனி : பெ. பூசனிவகை.

சாம்பராணி : பெ. 1. தூபவர்க்கம், 2. வாழைவகை (மலாய்).

சாம்பராணிக்கரண்டி : பெ. தூபக்கால்.

சாம்பராணித் தூபம் : பெ. சாம்பிராணிப் புகை.

சாம்பல் ஆடு : பெ. சாம்பல் நிற ஆட்டுவகை.

சாம்பல் கூன் வண்டுப்புழு : பெ. பருத்திப் பயிரின் வேர்களைத் தாக்கும் புழு.

சாம்பல் நோவு : பெ. பயிர் நோய். எ-டு. மக்காச்சோளம் (அடிச்சாம்பல் நோவு).

சாம்பல் வரைதல் : தொ.பெ. மணவறையைச் சுற்றிக்கோலம் வரைதல். எ--டு. உடையார்.

சாம்பார் : பெ. 1. பார். உப்புப் பருப்பு, 2. பருப்புச் சேர்த்த ஒரு வகைக் குழம்பு (மராத்தி).

சாமக்காடு : பெ. சாமை விளையும் காடு.

சாமக்கோடங்கி : பெ. நள்ளிரவில் வந்து குறி சொல்பவன்.

சாமக்கோழி : பெ. நள்ளிரவில் கூவும் சேவல்.

சாமச்சோறு : பெ. சாமை அன்னம்.

சாமஞ்சட்டி : சாமான்கள் : பெ.

சாமம் : பெ. நள்ளிரவு.

சாமாச்சாரம் : பெ. செய்தி.

சாமாளி : ஏ.வி. சரிகட்டு (கன்னடம்).

சாமான் : பெ.1. பாத்திரம் 'சாமான் வெளக்கியாச்சா', 2. பொருள் 'கடைக்குச் சாமான் வாங்கப் போவணும்' (உருது. சாமானம்).

சாமானியம்மா : வி.அடை. பெறுதற்கு எளிதா? 'இந்த வேலை சாமானியம்மா முடியாது'.

சாமி : பெ. கடவுள்.

சாமி எறங்கற நேரம் : பெ. இரவு தொடங்கும் நேரம்.

சாமி எருது : பெ. பார். கோயப்பசுமாடு.

சாமிகாலம் : பெ. புரட்டாசி, கார்த்திகை ஆகிய இரு மாதங்கள். இம்மாதத்தில் திருமணம் செய்யமாட்டார்கள்.

சாமி கெளம்பிடும் : வி.மு. பார். சாமி எறங்கற நேரம்.

சாமிதொரை : பெ. மாமனார்.

சாமி மலை ஏறிருச்சி (ஏறிவிட்டது) : வி.மு. 1. சிறுவர்கள் கோபம் தணிதலைக் குறித்தல், 2. வாக்கு கூறுவதைச் சாமியாடி நிறுத்துதலைக் குறித்தல்.

சாமியழைப்பு : பெ. விழாச் சடங்கு.

சாமியாடி : பெ. தெய்வாவேசத்தால் குறிசொல்பவ-ன்-ள்.

சாமியாடுது : வி.மு. அருள்வாக்கு சொல்கின்றது 'ஈச்சனாரிலே ஒரு அம்மா சாமியாடுது கேக்கப் போலாம?'

சாமியார் : பெ. 1. பூசாரி, 2. யானை, 3. விநாயகர்.

சாமி வாக்கு : பெ. பார். 1. அருள்வாக்கு.

சாமை : பெ. தானியவகை.

சாய்ஞ்ச்சி : சாய்ந்து : வி.எ. 'நீ வரதுக்குள்ளெ பொழுது சாய்ஞ் சிருமாக்கும்'.

சாய்பு : பெ. முஸ்லீம் (அரபு).

சாய எலை : பெ. அரைத்துக் கையில் இட்டால் கைகளைச் சிவக்க வைக்கும் இலை.

சாயம் : பெ. நிறம்.

சாயம் புடிக்கறது : தொ. பெ. சாயம் தோய்த்தல்.

சாயரச்சே : வி.அடை. பொழுதும் சாயும்பொழுது.

சாயரச்சை : பெ. மாலைப்பொழுது.

சாயல் : பெ. ஒப்புமை.

சார்ச்சு : பெ. கட்டணம் (ஆங்கிலம்).

சாரக்கவுறு : பெ. கயிறுவகை.

சாரக்குச்சி : பெ. 1. கண்ணாடி, 2. காண்ணாடித் துகள்கள்.

சாரங்கெட்டவன் : வி.அ. பெ. பயனற்றவன்.

சாரட்டு : பெ. இரு குதிரை பூட்டி ஓட்டும் வண்டி (ஆங்கிலம்).

சாரணி : பெ. பார். கண் சட்டுவம் (சால்ரி).

சாரணை : பெ. கீரைவகை.

சாரம் : பெ. 1. இரசம், 2. ஊட்டம்.

சாரமண்ணு : பெ. உவர்மன், ஆடைவெளுக்கச் சோடா உப்பைப் போல் பயன்படுத்தப்படும் மண்.

சாராடி : வி.எ. கோபித்து 'சாராடிக்கு வா'.

சாரி : பெ. வெள்ளை நிற மாட்டிற்குக் கழுத்தின் இரு பக்கங்களில் கறுப்பு நிறம் இருத்தல்; இது நல்லதன்று.

சாரியும் : வி.அடை. பக்கமும் "சேத்திலெ பொதெஞ்ச கம்பம் எந்த சாரியும் திரும்பும்

சாரை : பெ. 1. பார். சாரப்பாம்பு, 2. சாரணை.

சாரைப்பருப்பு : பெ. மரவகை.

சாரைவால் : பெ. 1. மாட்டின் வால் சாரைப்பாம்புபோல் இருத்தல், 2. நீண்ட வாலுள்ள மாடு.

சால் : பெ.1. செவ்வகமான நிலத்தில் நீர் வடிவத்தில் விளா அறுப்பதற்குப் பெயர், 2. நீர் இறைக்கும் கலம், 3. நீர் நிரப்பும் பெரிய பித்தளைத் தவளை, 4. பெரிய மட்பாண்டம்.

சால்ரா : பெ. கைத்தாளம்.

சால்வன்சி : பெ. சொத்தின் பணமதிப்பீடு (ஆங்கிலம்).

சால்வை : பெ. மயிர்க்கம்பளம் (பெர்சியன்).

சால்காப்பு : பெ. 1. பார், 2. சாக்கு, 2. போலி சமாதானம் (அரபு).

சாலம் : பெ. போலி நடிப்பு (பெர்சியன். சாலாக்கு).

சாலமாலம் : பெ. பார். சாலம், 'சாலமாலக்காரி'.

சாலமான் ரேகை : பெ. மிகவும் அதிர்ஷ்டமான கைரேகை.

சாலவாடி : பெ. சோனகர்களின் கிராமச் சேவகன்.

சாலாக்கு கிலாக்கு : வி.அடை. பார். சாலம், 'சாலாக்கு கிலாக்கு பண்ணுனென உன்ற லோலாக்க கழட்டிப் போடுவெ'.

சாலுங்கரம் : பெ. மணவறையில் வைக்கக்கூடிய மண்ணால் செய்யப்பட்ட சால்.

சாலுத்திண்ணை : பெ. நீர்க்கலங்களை வைக்க வீட்டினுள் சுவர் இடையே உள்ள இடைவெளி.

சாலுப்பரி : பெ. இரும்புத் தகட்டால் ஆன நீர் இறைக்குங் கலம்.

சாலுவுடுதல் : தொ. பெ. விதையை எறிதல் அல்லது நடுதல் (ஏர்ச்சாலுடுதல்).

சாலேக்கெழங்கு : பெ. காடர்கிழங்கு வகை.

சாலை : பெ. 1. ஓலைச்சாலை - பனை ஓலையால் வேய்ந்தது; இது ஒரு வருடம் உழைக்கும், 2. மட்டச்சாலை தென்னை ஓலையால் வேய்ந்தது; இது மூன்றாண்டு வரை நிலைக்கும், 3. கூரைச்சாலை - பனை ஓலை அல்லது கரும்பின் சோகையால் வேய்ந்து, அதற்குமேல் கம்பின் தட்டை வேய்தல் - இது ஆறாண்டு உழைக்கும், 4. குடிசை வீடு.

சாலை அம்பாரம் : பெ. அதிகமான நெற்கதிர்களை அடிக்கும் போது, இரு குவியல்களைச் சாலை அமைப்பில் ஏற்படுத்தி இரு பக்கமும் கதிர் அடித்தல்.

சாவகாசம் : சகவாசம் : பெ. 1. சௌகரிய சமயம், 2. நட்பு "நாய்ச்சாவகாசம் சீலையைக் கிழிக்கும்" (சாவாசம்).

சாவடி : ஏ.வி. கொன்றுவிடு.

சாவடிச்சு சோறு போட்டா(ள்)சேவலை அறுத்துக் குழம்பு வைத்து உணவு படைத்தாள்.

சாவா : சேவல் : பெ.

சாவாரப் பலி உருவம் : பெ. பலியிட்ட பாலகர்களைப் போல் உருவம் அமைத்தல். பேரூர், அன்னூர் முதலிய ஊர்களில் இவ்விதச் சிலைகள் காணப்படுகின்றன.

சாவி : பெ. (போர்ச்சுக்கீசியம்).

சாவிக்கொத்து மணி : பெ. சாவியுடன் கோர்க்கப்படும் மணிவகை.

சாவுக்காசு : பெ. பிணம் செல்லும்போது பிணத்தின் பின்னால் பொரியுடன் கலந்து வீசப்படும் காசு.

சாவை : பெ.1.பதர், 2. வசதியின்மை 'சாவையாப் போனான்'.

சாளக்கொடி : பெ. வட்டவடிவமுள்ள பாக்கு வகை.

சாளாசனம் : சாலேசரம் : பெ. வெள்ளெழுத்து என்ற பார்வைக் குறைபாடு.

சாளாளிமரம் : பெ. நீர்க்கலங்களை வைக்கும் சற்று உயரமாக உள்ள மரப்பலகை.

சாறிட்டு : வி.எ. விளம்பரப்படுத்திவிட்டு 'நோம்பிது சாறிட்டுப் போனான்'.

சாறு : பெ. 1. குழம்புவகை "காரமில்லாத சாறு கட்டி நெறைய யூகமில்லாத புள்ளைக ஊட்டு நெறைய" 2. மிளகு ரசம்.

சான்சு : பெ. சந்தர்ப்பம் (ஆங்கிலம்).

சாஸ்த்தியா : வி.அடை. மிகுதியாக (தாயிஸ்தியா).

## சி

சிக்கடித்தல் : தொ.பெ. சிக்கு நாற்றமடித்தல்.

சிக்கி : பெ. விளையாட்டில் அடிப்பட்டவள்.

சிக்கில்லி : பெ. மரவகை.

சிக்கு : பெ. 1. எண்ணெய்ப் பிசுக்கு, 2. சிக்கு நாற்றம், 3. நூல் போன்றவற்றின் சிக்கல்.

சிக்கு : ஏ.வி. கிடைக்கப்பெறு.

சிக்கு புக்கு ரயில்வண்டி : பெ. சிறுவர். விளையாட்டு.

சிக்குலெ : வி.மு. கிடைக்கவில்லை.

சிகரெட் முட்டாயி : பெ. மிட்டாய்வகை.

சிகிரி : பெ. கிழங்குவகை.

சிகை : பெ. 1. குடுமி, 2. தலைமயிர்.

சிங்கப்பல்லு : பெ. முன்புறம் நீண்டுள்ள துணைப்பல்.

சிங்காவாகனம் : பெ. ஈசுவரியின் வாகனம்.

சிங்காரம் : பெ. அலங்காரம் "செட்டி சிங்காரிக்கறதுக்குள்ளே பட்டணம் பாழாப் போகும்".

சிங்காரிச்சு மூக்கறுக்கற மாதிரி : ஒருவனைப் புகழ்ந்து பின் இகழ்தல் குறிப்பு.

சிங்கியடித்தல் : தொ. பெ. 1. பிரச்சனையில் மாட்டுதல், 2. வறுமையால் துன்புறுதல்.

சிச்சி, சிச்சீ : இடை : இகழ்ச்சிக் குறிப்பு.

சிசர் : பெ. சிகரெட் 'சிசர் சிகரெட் ரெண்டு குடு' (ஆங்கிலம்).

சிசு : பெ. மரவகை.

சிட்டா : பெ. குறிப்பேடு.

சிட்டா : வி.அடை. விரைவுக்குறிப்பு 'சிட்டாப் பறந்துட்டான்'.

சிட்டாள் : பெ. கஞ்சாவைக் குறிக்கும் குறிப்பு (தம், மின்னல், ஸ்கைலாப்).

சிட்டிக்குளம்பு : பெ. மாட்டுக்குளம்பின் மேற்பகுதி (அடிசிட்டுக் குளம்பு, மேல்சிட்டிக் குளம்பு).

சிட்டை : பெ. கரை 'சிட்டைத் துண்டு', 2. சிட்டுக்குருவி "சிட்டைக்குப் பண்ணாட்டு வந்தாசட்டி பானையெல்லாம் ஏறிக் குதிக்குமாம்மா".

சிட்லி ஆடறது : தொ.பெ. பார். ஒட்டாங்கரம் (சில்லி, தெல்லா, தெல்லாட்டம்).

சிடுமூஞ்சி : பெ. கடுகடுப்பாகப் பேசுபவன்.

சிண்டு : பெ. குடுமி.

சிண்டுமுதல் : தொ.பெ. கலகம் மூட்டுதல்.

சிண்ணாம்பு : சுண்ணாம்பு : பெ. "ஒரு கண்ணுக்கு வெண்ணெயும் இன்னொரு கண்ணுக்குச் சிண்ணாம்பும்"

சிண்ணாம்புக் கல்லு : பெ.செங்கல்போல் பயன்படும் ஒருவகை மண். இம் மண்ணைப் பச்சையாக வெட்டி யெடுத்துக் காய வைப்பர்.

சிண்ணாம்புக்காயி : பெ. சுண்ணாம்பு டப்பா.

சிண்ணாம்புடப்பி : பெ. கையில் கட்டும் கடியாரம்.

சிணுங்கறது : தொ.பெ. கொக்கறை ஆட்டத்தில் கையின் பின்புறம் கல்லை நிறுத்திப், பின் கல்லை வீசிக், கையைக் கவிழ்த்து உள்ளங்கையால் பிடித்தல்.

சிணுக்கு ஆடறது : தொ.பெ. கொக்கறை ஆட்டச்சொல்.

சிணுக்குச் சண்டை : பெ. சிறுசிறுபூசல்.

சிணுங்குதல் : தொ.பெ. செல்லப்கோபம், கொஞ்சுதல்.

சித்த : சிறிது : வி.அடை. "சித்த நேர கூத்துக்கு மீசெயெ செரச் சாப்பலே".

சித்தங்குளிர : வி.எ. மனம் மகிழ.

சித்தங்கோரத்துக்குல்லெ : வி.அடை. சிறிது நேரத்திற்குள்.

சித்தப் பெரியப்ப மக்கொ (மக்கள்) : பெ. ஒன்றுவிட்ட சகோதரர்கள்.

சித்தப்பன் : பெ. 1. அப்பாவின் தம்பி, 2. அம்மாவின் தங்கைக் கணவன், 3. மாற்றாந்தகப்பன் “நடக்கமாட்டாதவ(ன்) சித்தப்பன் ஊட்லெ பொண்ணு கட்டுனானா”.

சித்தரத்தை : பெ. மருந்துப்பொருள்.

சித்தாடை : சிற்றாடை : பெ. சிறுபெண் குழந்தைகள் கட்டும் சேலை.

சித்தாண்டி : பெ. பண்டாரச் சாதியின் உட்பிரிவு.

சித்தாலைப் பொலவு : சிற்றிலைப் பொலவு : பெ. மரவகை.

சித்தாலைவாகை : பெ. மரவகை.

சித்தாள் : சிற்றாள் : பெ. “எட்டளுக்கொரு சித்தாள்”.

சித்தானைக்குட்டி : பெ. குண்டாக குள்ளமாக இருப்பவ-ன்-ள்.

சித்திர புத்திரப் பொங்கல் : பெ. சித்திரையில் பிறந்த தோசம் நீங்க சித்திரை மாதத்தில் ஏதாவது ஒருநாள் வைக்கும் பொங்கல் “சித்திரையிலே பொறந்தா சீரழிவு”

சித்திரான்னம் : பெ. தாளித்த உணவு.

சித்திரைக்கனி : பெ. தமிழ்ப் புத்தாண்டு பிறப்பு.

சித்தோடு கண்ணச்சி அம்மன் கருச்சிக்குமார் கோயில் : பெ. ஈரோட்டிலிருந்து மேற்கே சுமார் ஐந்து கிலோ மீட்டர் தூரத்திலுள்ள சித்தோட்டில் உள்ள ஆலயம்.

சிந்தடி சேலெ : சுங்குடிச் சீலை : பெ. ஒரு நிறத்தில் அமைந்த சேலையில் மற்றொரு நிறப் புள்ளிகள் வருவது.

சிந்தாக்கு : பெ. பார். அட்டி.

சிந்தாமணிக்கலரு : பெ.நிறம் (ஆனந்தாக் கலரு).

சிநேகமாயிடுச்சு : வி.மு. காதல் ஏற்பட்டுவிட்டது ‘சிநேகமாயி கட்டி கிட்டவங்க’.

சிநேதகாரரு : சிநேகிதர் : பெ. நண்பர்கள்.

சிப்புச் சிமிரு : பெ. சிறிய கிளைகள்.

சிப்லி : பெ. சிறுவர் விளையாட்டில் உபயோகிக்கும் வட்ட மான ஓடு (சிட்லி, சில்லி).

சிம்பலா : வி.அடை. எளிமையாக (ஆங்கிலம்).

சிம்பு : பெ. 1. கிளை. 2. நுனி (வாது).

சிம்பு எடுக்கறது : தொ.பெ. செடியின் பக்கங்களில் தழைத்த கிளைகளை நீக்குதல்.

சிம்மவாகன மெரவனை : பெ. விழாச் சடங்கு.

சிம்மாவிற்கு : சினிமாவிற்கு. வி.அடை.

சிம்மாடு : பெ. பாரதத்தைத் தாங்க உதவும்படி தலையிற் கொள்ளும் சுமைதாங்கி.

சிம்மாசனாதிபதி : பெ. தேவாங்கச் செட்டியார் சமூகத் தலைவர்.

சிம்லி : பெ. பார். கொளாப்பு.

சிமிக்கி : பெ. காதணி (இந்துஸ்தானி).

சிமிட்டி : சிமெண்ட் : பெ, (ஆங்கிலம்).

சிமிட்டிக்கலரு : சிமெண்ட் நிறம் (யானைக்கலரு),

சிமிட்டிக் கலவன் : பெ. ஏழு சட்டி மணலும் ஒரு சட்டி சிமெண்ட்டும் கலந்த கலவை.

சிமிட்டுக்கண்ணே (கண்ணன் ) : பெ. கொட்டுங் கண்ணை யுடையவன்.

சிமிட்டுதல் : தொ.பெ. கண்ணிமைகளை அசைத்தல் "சும்மா முழிக்க கண்ணக் காணோ சிமுட்டி முழினு சொன்ன கதையா இருக்கு".

சிமிட்டுப்பால் பூச்சு : பெ. சிமெண்ட் கரைக்கப்பட்ட நீரை ஊற்றிக் காரை போடப்பட்டுள்ள தரையைத் தேய்த்தல்.

சிமுறு : சிராய் : பெ. மரச்சக்கை (செதாலு, செராக்கு).

சிய்யினு : வி.அடை. சலிப்புக்குறிப்பு 'சிய்யினு இருக்கு'.

சிரங்கு : சொரிசிரங்கு : பெ. "இரும்பு புடிச்சவங்கையும் செரங்கு புடிச்சவங் கையும் சும்மா இருக்காது", (செரங்கு).

சிரி : ஏ.வி. புன்னகை செய்.

சிரிக்கி முண்டை : பெ. விபச்சாரி.

சிரிப்பா சிரிக்குது. வி.மு. இகழ்தல் குறிப்பு "உம்பொழப்பு தெரியாதா ஊரே சிரிப்பா சிரிக்குது".

சிரேட்டா : பெ. தீவனப்பயிர்.

சில்லறெ சாவுகாசம் : பெ. அற்பப் புத்தியுடையவர்களுடன் ஏற்படும் உறவு "சில்லறெ சாவுகாசம் சீலெயெ கிழிக்கும்.

சில்லறைப்பய : பெ. வசை.

சில்லறைப்புத்தி : பெ. அற்பப்புத்தி.

சில்லி : பெ. சிறு துண்டு.

சில்லுண்டித்தனம் : பெ. குறும்புத்தனம்.

சிலதிலச்சம் : பெ. சில லட்சம்.

சிலந்தி : பெ. 1. ஒருவகைப் புண்கட்டி, 2. பூச்சிவகை

சிலம்பு எறிதல் : தொ.பெ. விழாக்கால விளையாட்டு.

சிலவாகை : பெ. வாகைவகை (செலெவாகை).

சிலாப்புக்கலு : பெ. மழைநீர் உள்ளே வராதபடி சன்னலின் மேல் சிமெண்ட்டால் கட்டப்பட்ட அமைப்பு.

சிலிப்பு : பெ. சாட்டைபோன்ற அமைப்புடைய கயிறு.

சிலுக்கு : பெ. துணிவகை (டெர்லின்) (ஆங்கிலம்).

சிலுத்து : சிலிர்த்து : வி.எ. 'குளுருலே ஒடம்பு சிலுத்துப் போச்சு'.

சிலுப்பு : ஏ.வி. கடை .'தயிர் சிலுப்பு'.

சிலுப்புளான் : பெ. மரவகை.

சிலுப்பை : பெ. மரவகை.

சிலும்பி : பெ. பார். குடுகை.

சிலுமிசம் : பெ. குறும்பு, தவறு 'சிலுமிசம் பண்ணாதே'

சிறுவர் : பெ. மரவகை (ஆங்கிலம்).

சிலுவர் பாத்திரக்கூடை : பெ. கூடைவகை.

சிலுவாடு : பெ. சிறுசேமிப்பு (சிறுவாடு).

சிலுவானம் : சில்லறை : பெ.

சிலேட்டுத்தழை : பெ. கரும்பலகை, சிலேட்டு ஆகியவற்றைச் சுத்தம் செய்ய உதவும் இலை.

சிலேட்டுப் பென்சில் : பெ. பலப்பம்.

சிலேடு : பெ. பல்லைச் சுற்றியிருக்கும் தட்டும் (சேடு - ஆங்கிலம்).

சிலேபி : பெ. இனிப்புவகை (அரபு).

சிலையோடும் : வி.மு. எதிரொலிக்கும்.

சிலோனு பசலை : பெ. கீரைவகை.

சிவதீட்ச மந்திரம் : பெ. திருமணம் முடிந்த சில ஆண்டுகளுக்குள் மணமக்களுக்குப் பண்டாரச் சாதியில் குருக்கள் ஓதுவிக்கும் மந்திரம்.

சிவப்புக் கம்பளிப் பூச்சி : பெ. பூச்சிவகை.

சிவம்போனான் : வி.மு. இறந்துபோனான்.

சிவலாத்திரி : சிவராத்திரி : பெ. (சிவன் ராத்திரி).

சிவலோகம் : பெ. கைலாசம் (மேலோகம்).

சிவன்சடை : பெ. மணிக்கட்டில் குத்தப்படும் பச்சைவகை.

சிவன்மலைக் கோயில் : பெ. சிவன் ஆலயம்.

சிவன்ரேகை : பெ. நெற்றியிலுள்ள நல்ல ரேகை.

சிவனேன்னு : வி.அடை. 'சிவனேன்னு நா இருக்கெ எனக்கென்ன தெரியு'

சிவா : பெ. ஐயா எனும் மதிப்பைக் குறிக்கும் சொல்.

சிறியா நங்கை : சிறிய நங்கை : பெ. மருந்துப்பொருள்.

சிறுஈச்சை : பெ. மரவகை.

சிறுக்காம்பூச்சி : பெ. பூச்சிவகை.

சிறுக்கி : பெ. ஆட்பெயர் "செல்லக் சிறுக்கிப் பெத்தவளே வள்ளம் தடுக்கி உளுந்தவளே".

சிறுகால்தடம் : பெ. பார். கொடிவழி.

சிறுகிளா : பெ. மரவகை.

சிறுகீரை : பெ. கீரைவகை.

சிறுகொடலு பெருங்கொடலத் திங்குது : பசியின் கொடுமையைக் குறித்தல்.

சிறுத்தாணிக் குளாம்பு : பெ. மாட்டின் குளம்பிற்குப் பின்னால் உள்ள கால் நகம்.

சிறுத்தை : பெ. விலங்கு.

சிறுதாலி : பெ. பார் உக்கலக் செயினு.

சிறுநாக்கு : பெ. உள்நாக்கின் மேற்புறம் உள்ள பகுதி.

சிறுநாக்கு வளந்திருச்சு : வி.மு. 'சிறு நாக்கு சற்று நீளமாதல்.

சிறுநாக்குசுடறது (சுடுதல்) : தொ.பெ. மிளகையும் உப்பையும் கலந்து குச்சியால் உள்நாக்கில் வைத்தல்.

சிறுநெல்லிக்கனி யளவு : பெ. சிறு உருண்டை.

சிறுபாம்பு : பெ. அரிப்புத் தழும்பை உண்டாக்கக் கூடிய ஓர் விஷ ஜந்து.

சிறுபாம்புக்கடி : பெ. சிறுபாம்பு பட்டு உடம்பு தடித்தல்.

சிறுபொறுமி : பெ. கீரைவகை.

சிறுமூக்கு : சில்லிமூக்கு : பெ. இரத்தம் வடியும் மூக்கு.

சிறுமூக்கு ஒடஞ்சிருச்சு : வி.மு. சில்லி மூக்கிலிருந்து இரத்தம் வடிதல்.

சிறுவாய்உளி : பெ. தச்சுக் ருவி.

சிறுவார் : பெ. இளையார் "சிறுவாருட்ட வெள்ளாமெ வூடு வந்து சேராது".

சின்உயிர் : சிறிய உயிர் : பெ.

சின்க்கு : பெ. கலப்பிணப் பசுவகை.

சின்ன : சிறிய : பெ. அடை.

சின்னஅம்மன் : பெ.தெய்வம்.

சின்னக்கண்ணா : பெ. கடைசிப்பையன்.

சின்ன சங்கு : பெ. சங்கடை வகை.

சின்னத்தாய் : 1. சின்னம்மா; 2 . வளர்ப்புத்தாய்.

சின்னப்பன் : பெ. சிறிய அண்ணன்.

சின்னப்பூசாரி : சிறிய பூசாரி : பெ. பெரிய பூசாரிக்கு அடுத்துப் பணிபுரிபவர்.

சின்னபுத்தி : பெ. சிறுமைக் குணம்.

சின்னம் : பெ. குறியீடு.

சின்னமுத்திரை : பெ. இரு தோள்களிலும் நாமத்தால் சங்கும் சக்கரமும் வரைதல்.

சின்னவள் : பெ. கடைசிமகள்.

சின்னவன் : பெ. கடைசிமகன்.

சின்னவூட்டுக்காரி : பெ. வைப்பாட்டி.

சின்ன வெள்ளாமை : பெ. 1. குறுகிய கால விளைச்சல் (மூன்று மாதத்திற்குள்), 2. சிறிய அளவு விளைதல் (ஒருபாத்தி முதல் அரை ஏக்கர்வரை).

சின்னி : பெ. செடிவகை.

சின்னாண்டவர் : பெ. காவல் தெய்வம்.

சின்னாயா : பெ. 1. சின்னம்மா, 2. பெற்றோரின் தந்தைக்குப் தம்பி மனைவி, 3. பொற்றோரின் தாய்க்குத் தங்கை.

சின்னுமில்லை : வி.மு. சிறியவர்களும் இல்லை. 'வீட்டுலெ சின்னுமில்லெ பெரிசு மில்லெ'

சினுக்குளி : பெ. செருப்புத் தைக்கும் ஊசி.

சி.எஸ்.ஐ. வெல்லம் : பெ. பார். கருப்புவெல்லம்.

## சீ

சீ : பெ. 1. அலட்சியம், 2 . சீழ் "ஒதெச்சக்கால் புழுக்கறதுக் குள்ளே அடி வவுறு சீ புடிச்சுக்கும்".

சீ : இடை. இகழ்ச்சிக் குறிப்பு.

சீக்கடி : பெ. கொசு.

சீக்கடி : ஏ.வி. சீழ்க்கை அடி.

சீக்காளி : பெ. நோயாளி.

சீக்கி : பெ. 1. வாயில் வைத்து ஊதும் சிறு கருவி, 2. வாயினால் எழுப்பும் ஓசை (விசில், சீட்டி).

சீக்கிச்சோறு : பெ. தாய்மான் மணப்பெண்ணைத் தூக்கி வந்து நாட்டுக்கல் முன்பு நிறுத்திச் செய்யும் பூசை : எ-டு. நாடார்.

சீக்கிரமா : வி.அடை. வேகமாக.

சீக்கு : பெ. நோய் (ஆங்கிலம்).

சீகக்கா : சிகைக்காய் : பெ. "தலெக்கி வேற சீகக்கா(ய்) தாடிக்கு வேற சீகக்காயா?"

சீகை : பெ. செடிவகை.

சீங்கை : 1. கீரைவகை, 2. மரவகை.

சீச்சி : இடை. இகழ்ச்சி, வெறுப்பு உணர்ச்சிகளைக் காட்டும் குறிப்பு(சீசி, சீசீ).

சீசா : பெ. கண்ணடிக் குப்பி (சீசாக்காயி).

சீசாக் குச்சி : பெ. கண்ணாத் துகள்கள்.

சீட்டி : சீட்டு : பெ. உட்காரும் இடம் (ஆங்கிலம்).

சீட்டிக்கொம்பு : பெ. கூர்மையாய் நீண்டு நேராக உள்ள மாட்டின் நல்லகொம்பு.

சீட்டிக் கவரு : சீட்கவர். பெ. உட்காரும் ஆசனத்தின் உறை.

சீட்டுக்கச்சேரி : சீட்டாட்டம் : பெ.

சீட்டுக் குலுக்கிப் போடறது : தொ.பெ. சீட்டில் வருவதைச் செய்து காட்ட வேண்டிய விளையாட்டு.

சீட்டுப்பிடித்தல் : தொ.பெ. 1. கூட்டுச் சீட்டு ஏற்படுத்துதல்.

சீட்டுப்போடுதல் : தொ.பெ. கூட்டுச்சீட்டு நிதியில் பங்கெடுத்தல், 2. சீட்டாடுபவருள் ஒருவர் மற்றவர்க்குச் சீட்டுக்களைக் கலைத்துப் பிரித்துப் போடுதல்.

சீட்டு வெளையாட்டு : பெ. வட்டத்திற்குள் உள்ள சிகரெட் அட்டைகளைக் கல்லால் அடித்து வெளியே எடுத்தல்.

சீடை : பெ. சிறு பணியார வகை.

சீடையடிச்சிருச்சு : சீடை அடித்துவிட்டது : வி.மு. பயிர் சிவந்துபோதல்.

சீண்டு : ஏ.வி. தொந்தரவு செய்.

சீத்தா : பெ. பழவகை. (இந்துஸ்தானி).

சீதனம் : பெ. சீர்வரிசை.

சீதாளகிரி மாவு : பெ. பயத்தம் பருப்பு ஊறவைத்து ஆட்டி ஆவியில் வேகவைத்துத் தாளித்தல்.

சீதேவி : பெ. இலக்குமி 'வலிய வரசீதேவியெ வேண்டாங் காதே'

சீந்து : ஏவி. பொருட்படுத்து, மதி 'புளுத்த நாய்கூட சீந்தாது உன்னெ'.

சீப்பாறத்து : சீரழிந்து : வி.எ. சீர்பாறத்து போயிருவே.

சீப்பு : பெ. 1. மயிர் வாரும்கருவி, 2 . வாழைக் குலையில் ஒரு கொத்து.

சீப்பு ஸ்டேண்டு : பெ. சீப்பு, பவுடர் முதலியன வைக்கும் தாங்கி.

சீம்பால் முறிஞ்சிருச்சு : வி.மு. கன்று ஈன்றமாடு சுறக்கும் பால் தெளிதல்.

சீம்பு : பெ. சீம்பாலால் செய்யும் இனிப்பு.

சீம்புப்பால் : சீம்பால் : பெ. கன்று ஈன்ற மாடு கறக்கும் முதல் மூன்று நாளையப்பால்.

சீமக்கோழி : பெ. கோழிவகை.

சீமமாடு : சீமைமாடு : பெ. உயர்ரக மாட்டுவகை.

சீமமாரி : பெ. விபச்சாரி.

சீமவித்தையா : பெ.இகழ்ச்சிக் குறிப்பு 'இதென்ன நீ செஞ்சது பெரிய சீம வித்தையா'.

சீமாட்டி : பெ. ஆட்பெயர் "மசுருள்ள சீமாட்டி எப்படியும் முடிவா.

சீமாத்து ஊசிப்புல்லு : பெ. ஊசிப்புல்லில் ஒருவகை.

சீமாத்துக்குச்சி : பெ. பார். ஈக்கிக் குச்சி.

சீமாறு : பெ. துடைப்பம் "சீமாத்தெ ஒளிச்சா கலியாணம் நிக்குமா".

சீமெஅகத்தி : சீமையகத்தி : பெ. மரவகை.

சீமெ உளுவை : பெ. உளுவை மரவகை.

சீமெ எலந்தை : பெ. மரவகை.

சீமெண்ணே : பெ. மண்ணெண்ணெய்.

சீமெண்ணெ வெளக்கு : பெ. பார். கொளாப்பு.

சீமெநாகப்பழம் : பெ. ஜம்பு நாக மரத்திலிருந்து கிடைக்கும் புளிப்புச் சுவையும் இனிப்புச்சுவையும் உடைய வெளிர் வெண்டை நிறப்பழம்.

சீமெப்புல்லு : பெ. மாட்டுத்தீவனம்.

சீமெபட்டாணி : பெ. பட்டாணிவகை.

சீமெ வெள்ளரி : பெ. பழவகை (முலாப்பழம்).

சீமை : பெ. மேலைதேசம்.

சீமை ஓடு : பெ. ஓட்டில் ஒருவகை.

சீமைக்கருவேல் : பெ. மரவகை (டில்லி முள்ளு).

சீமைக்கள்ளி : பெ. கள்ளிவகை.

சீமைக்கத்தாழை : பெ. கற்றாழைவகை

சீர் : பெ. 1. சடங்கு, 2.செல்வம் "சீரைத்தேடின் ஏரைத்தேடு".

சீர்க்காரன் : பெ. பார். அருமைக்காரன்.

சீர்க்காரி : பெ. 1. பார். அருமைக்காரி, 2. காதுகுத்துச் சடங்கில் குழந்தைகளின் பெரியம்மா.

சீர்செனத்தி : பெ. சீதன வரிசை.

சீர்த்தண்ணிக்குப் போதல் : தொ.பெ. திருமணச் சடங்கு. எ-டு. உடையார், கவுண்டர்.

சீர்ப்பானை : பெ. திருமணச் சடங்கிற்குப் பயன்படும் மண் குடங்கள்.

சீரக(ச்)சம்பா : பெ. உயர்ரக அரிசிவகை.

சீரகமொளகு சாறு : பெ. மிளகுரசம்.

சீரகொ : சீரகம் : பெ. "செட்டினா சீரகம் மணக்குமா?"

சீரணம் : பெ. 1. உண்டது செரிக்கை, 2. தச்சுக்கருவி.

சீரத்தபாவி : சீரற்றபாவி : பெ. மோசமானவன் "சீரத்த பாவியெ நீர்லே பாரு; துப்பத்த பாவியே உப்புலே பாரு".

சீரலிப்பு : சீரழிவு : பெ. துன்பம், தொந்தரவு, "சீரலிப்பே சொல்லப் போனா சீலெ ஒரு மொழம் கிழிஞ்சுடும்".

சீரழிவு சிந்தனையுதா : விரக்தியில் கூறுதல்.

சீரழிஞ்சு சின்னப்பட்டுப் போயிடுவே : வசை.

சீராடி : வி.எ. கோபித்துக்கொண்டு "ஆத்தோட சீராடிட்டு சூத்தெக் கழுவாம வாந்தானாம்".

சீருசெறப்பு : பெ. பெண்ணிற்குத் திருமணத்திற்குப்பின் செய்யும் சீர்வகைகள்.

சீலெ : சேலை : பெ. "முள்ளுமேலே போட்ட சேலையை மெல்ல மெல்ல எடுக்கோனும்" (வகை : ஆரணிப்பட்டு, கத்தா

ழப்பட்டு அல்லது நார்ப்பட்டு அல்லது சின்னாளப் பட்டு, காஞ்சிவரம்பட்டு, காஷ்மீர் சிலுக்கு, கோடம் பாக்கம், தருமபுரி, நெகமம், நூறாம் நெம்பர் சீலெ, பன்சிலுக்கு, பெங்களூர் பட்டு).

சீவக்கட்டை : பெ. 1. கட்டையான துடைப்பம் (கட்டச் சீமாறு), 2. துடைப்பம்.

சீவங்கள் : பெ. உயிரினங்கள்.

சீவங்கெட்ட பய : பெ. வசை.

சீவமரம் : பெ.

சீவல் : பெ. பாக்குச் சீவல்.

சீவன் : பெ. உயிர் "சிறுக்கின்னா சீவனே போயிடுதாம்"

சீவி : பெ. துடைப்பம்.

சீவிக்கக்கூடிய எடம் : பெ. உயிர் வாழுமிடம்.

சீறாதே : எ.ம.வி. கோபிக்காதே.

சீன்போடுதல் : தொ.பெ. ஏமாற்றுதல்.

சீனைக்கா : பெ. வெளிநாடு, தொலைவிலுள்ள ஊர் 'பையெ சீனமக்கா போயிட்டாப்பலே'.

சீனிக்கட்டை : பெ. குதிரை வண்டியின் பாகம்.

சீனிப்புளியங்கா : பெ. மரவகை.

சீனிமொளகா : பெ. மிளகாய்வகை.

சீமை : பெ. வெளிநாடு.

## சு

சுக்காங்கீரை : பெ. கீரைவகை.

சுக்கு : பெ.1. உலர்ந்த இஞ்சி "எரிகற கண்ணிலெ சுக்குத்தட்டிப் போட்டாப்பலே" 2. சிறுதுண்டு.

சுக்கு(ச்) சுக்காய் : வி.அடை. துண்டு துண்டாய் 'சுக்கு சுக்கா வெட்டிப் பிடுவே'

சுக்குநாரி : பெ. புல்வகை.

சுக்குப்பொடி சூரணப்பொடி : பெ. விளையாட்டின் பெயர்.

சுக்குரெதெசை : பெ. அதிர்ஷ்டக்காலம்.

சுங்கக்காரன் : பெ. சந்தைக்குப் பொருட்களைக் கொண்டு வருபவரிடம் உள்ளே பொருட்களை அனுமதிக்கப் பணம் வசூலிப்பவன் "மொண்டிச்சுங்கக்காரன் எந்திரிச் சாப் பொல்லாதவன்".

சுங்கு : பெ. சேலை முந்தானையில் கட்டிவிடும் தொங்கல் (தெலுங்கு).

சுச்சு பாக்ஸ் : பெ. இயந்திரத்தின் பாகம் (ஆங்கிலம்).

சுட்டி : பெ. 1. அணிகலன், 2. ஆடு, மாடுகளுக்குள்ள வெண்புள்ளி அல்லது வெண்சுழி, 3. குறும்புக்காரன், 4. புத்திக்கூர்மையுள்ளவன், 5. மண்ணால் செய்த சிறு சிறு விளையாட்டுப் பொருள்கள்.

சுட்டி எருமை : பெ. தலையில் வெண்மைநிறமுள்ள எருமை.

சுட்டிவால் : பெ. மாட்டின் வாலிலுள்ள முடி வெள்ளையாக இருத்தல்.

சுட்டிவெள்ளை : பெ. குதிரையின் நெற்றியில் சற்று வெள்ளை இருத்தல்.

சுட்டுவெல்லு : சுட்டுவிரல் : பெ. ஆட்காட்டி விரல்.

சுடு : ஏ.வி. 1. எரி, 2. காயச்செய், 2. வேக வை.

சுடுகாடு : பெ. "சுடுகாட்டுப்போன பொணம் திரும்பி வராது" (சுடுவாயில்).

சுண்டக்கடலை : பெ. கடலைப் பருப்புச் சுண்டல்.

சுண்டக்கா(ய்) : பெ. "சுண்டெக்கா காப்பணம் சுமெகூலி முக்காப்பணம்.

சுண்டல் பருப்பு : பெ. பட்டாணி.

சுண்டாச்சட்டி : பெ. சிறிய சட்டி.

சுண்டான் ஆடறது : தொ.பெ. கொக்கறை ஆட்டச் சொல்.

சுண்டி இழுக்குது : வி.மு சொக்குதல்.

சுண்டிவில்லு : பெ. காக்காய் குருவிகளை விரட்டுங் கருவி (உண்டி வில்லு).

சுண்டுகால் மாடு : பெ. வாதத்தால் காலை இழுத்து வைக்கும் மாடு.

சுண்டுதல் : தொ. பெ. விரலால் நாணயம் முதலியவற்றைத் தெரித்தல்.

சுண்டுமுள்ளி : பெ. செடிவகை.

சுண்டுவாதம் : பெ. காலைச் சுண்டி நடக்கும் ஒருவித வியாதி.

சுண்டெக்கொழம்பு : பெ. எரித்த பழங்கறி.

சுண்டெலி : பெ. எலிவகை.

சுண்ணாம்புக்காரை : பெ. சுண்ணாம்பும் மணலும் கலந்த கலவை.

சுண்ணாம்புச்சீலை : பெ. வீட்டிற்குக் கையால் சுண்ணாம்பு பூசும் போது பயன்படுத்தும் துணி.

சுண்ணாம்புச் செங்கல் : பெ. சுண்ணாம்புக் கப்பியுடன் சிமெண்டையும் சுண்ணாம்பையும் சேர்த்துத் தயாரித்த செங்கல்.

சுண்ணாம்புச் சூளை : பெ. சுண்ணாம்பு தயாரிக்கும் இடம் (காலவாய்).

சுண்ணாம்பு நீலம் : பெ. காபிக்கலரில் உள்ள, சுண்ணாம் பிற்குப்போடும் நீலம்.

சுத்த இளிச்சவாயன் : பெ. அறிவற்றவன்.

சுத்தக் கர்நாடகம் : பெ. நாகரிகம் அறியாதவன் (பத்தாம் பசலி),

சுத்தக் கெரயம் : பெ. எல்லா உரிமையையும் விலைக்குக் கொடுத்துவிடுதல்.

சுத்த சொம்பாரெ : பெ. மோசமானவன்.

சுத்தப்பூசை : பெ. சவக்குழிக்குப் பந்தலிட்டு உட்கார்ந்து மந்திரம் சொல்லிப் பின் வீட்டிலும் சொல்லிச் செய்யும் பண்டாரச் சாதியின் சடங்கு.

சுத்த பக்கிகளா இருக்கீங்க : வசை.

சுத்தி : பெ. சுத்தியல்.

சுத்தி : வி.எ. 1. உடுத்தி 'துணி சுத்திட்டு வா', 2. சுற்றி 'சுத்தியும் நிக்காதிங்க'

சுத்தி சவுக்கு : பெ. சவுக்குவகை.

சுத்தியு முத்தியு : சுற்றும் முற்றும் : வி.அடை

சுத்து : பெ. 1. கையணி.

சுத்து : சுற்று : ஏ.வி.

சுத்து உட்டுட்டா : சுற்று விட்டுவிட்டான் : வி.மு. ஏமாற்றி விட்டான்.

சுத்துக்கோலு : பெ. உருண்டையான கோல்.

சுத்துத்தழை : பெ.புகையிலைகளைக் கட்டாகக் கட்டப் பயன் படும் இலை.

சுத்துத்திண்ணை : பெ. பார். எரவாரம்.

சுத்துப்போடுது : வி.மு. மாடு, கட்டப்பட்ட இடத்தைச் சுற்றிக் கொண்டே இருத்தல் -நல்லதல்ல.

சுதாரிப்பு : பெ. திடப்படுதல்.

சுதி : பெ. 1. இசைச்சுரம், 2. வீராப்பு, 'சுதி எறங்கிப் போச்சு'

சுதேசிக்கலரு : பெ. ஒருவகை நிறம் (ஊதாக்கலரு).

சுதேசிக் கடலை : பெ. உப்பு சேர்த்து வறுத்த கடலைப் பருப்பு (உப்புக் கல்லை, சுரேஸ் கல்லை).

சுபம் : பெ. 1. நன்மை, 2. மங்கலம்.

சும்மதா : வி.அடை. சும்மாதான் : 'சும்மதா இருக்கெ'.

சும்மனாச்சிக்கு : வி.அடை.1 . தமாசாக, 2. பொய்யாக.

சும்மா : வி.அடை. "சும்மா இருக்கற சாமிக்கு ரண்டு சோத் துருண்டை".

சும்மா திளுப்பரா (திருப்புகின்றாள்) : வி.மு. நடையில், செய லில் ஆணவம் காட்டுதல் :

சுரி ஏத்துரான் : வி.மு. தூண்டிவிடுகிறான் (கோள் சுத்தி வைக் கிறான்).

சுரிநாம் செரி : பெ. 1. பழவகை, 2. மரவகை.

சுருக்கா : வி.அடை. விரைவாக (குறுகிய அளவில்).

சுருங்காங்கண்ணி : பெ. கயிற்றில் போடும் ஒருவகை முடிப்பு.

சுருக்காணிப்பை : பெ. வாயைச் சுருக்கக்கூடிய பை (காசுப்பை, சுருக்குப்பை, வெத்தலை பாக்குப்பை).

சுருக்கிப்புடி : ஏ.வி. சிக்கனமாக இரு.

சுருக்கு : பெ. பார். சுருங்காங்கண்ணி.

சுருக்குப்பொடு : ஏ.வி. சுருக்கில் மாட்டு.

சுருக்குனு : வி.அடை. மனம் நோகும்படி ‘அவ சுருக்குனு கேக்கறா(ள்)’,

சுருட்டப்பாம்பு : சுருட்டை விரியன் : பெ.

சுருட்டப்புழுவு : சுருட்டைப்புழு : பெ.

சுருட்டு : பெ. புகையிலைச் சுருள் “ஊடு தீப்பத்தி எரிலே சுருட்டுக்குத் தீ கேட்டானாம்”.

சுருட்டு : ஏ.வி. திருடு ‘அவன் பணத்தே நீ சுருட்டிடு’.

சுருட்டைத்தலையன் : பெ. ஆட்பெயர்.

சுருள் : பெ. 1.கீரைவகை, 2. பூச்சிவகை, 3. மரவகை (சுருளி).

சுருளையாயி : வி.அடை. சுருண்டு.

சுலுண்டு : பெ. மரவகை.

சுவரேறிச் சுப்பன் : பெ. ஆட்பெயர்.

சுழட்டி : பெ. கழற்றுக் கருவியின் கைப்பிடி.

சுழல்காத்து : பெ. சுழன்று அடிக்கும் காத்து (சுழிக்காத்து, சூரக்காத்து, சூராவளிக் காத்து, பேய்க்காத்து).

சுழலும் கயிறு : பெ. மூன்று கயிறுகளை ஒன்றாக முறுக்குங் கருவி.

சுழி : பெ. 1. உடலில் சுழி அடையாளம், 2. விலங்கினங்களின் மயிர்ச்சுழி

சுள்ளல் : பெ. உலர்ந்த சிறுகொம்பு (சுள்ளி).

சுள்ளி : பெ. செடிவகை.

சுள்ளுப்பொறுக்கி : பெ. வசை.

சுள்ளுனு : வி.அடை. சுள்ளுனு வெயில் அடிக்குது.

சுள்ளெறும்பு : பெ. சிறிய எறும்புவகை “கோழி மொட்டுக்கு சுருக்கு வச்சு சுள்ளெறும்புக்கு ரவிக்கை தெச்சுப் போடு வடா நீ”.

சுளகுச்சோறு : பெ. சாவு, கருமாதி, ஆண்டு நிறைவு முதலிய சடங்கில் இருளர் வைத்து வழிபடும் உணவு.

சுளித்தல் : தொ.பெ. 1. கோபித்தல், 2. வெறுத்தல்.

சுளீர் சுளீர்னு : வி.அடை. ஒலிக்குறிப்பு ‘சுளீர் சுளீர்னு அடிச்சுட்டான்’.

சுளுக்கிருச்சு : சுளுக்கிவிட்டது : வி.மு. நரம்பு பிசகிக் கொள்ளுதல்.

சுளுவு : பெ. சுலபம் (தெலுங்கு).

சுனை : பெ. 1. நீர்நிலை, 2. மலையூற்று.

## சூ

சூ, சூச்சூ : இடை. நாயை ஏவும் ஒலிக்குறிப்பு.

சூட்டு : பெ. ஆடைவகை (ஆங்கிலம்).

சூட்டுமயிர் : பெ. நெற்றிப் புருவமுடி.

சூட்டை : பெ. கார்த்திகை தீபத்தன்று கொளுத்தி விளையாடும் துணிச்சுருளால் ஆன தீப்பந்தம்.

சூட்டொடம்பு : பெ. வெப்பம் மிகுந்த உடம்பு.

சூடத்தட்டு : பெ. கற்பூரம் கொளுத்தும் தட்டு.

சூடம் : பெ. கற்பூரம்.

சூடி : வி.எ. அணிந்து.

சூடிக்கவுறு : பெ. கயிறுவகை.

சூடிகட்டறது : தொ.பெ. பார். கோழ்வந்தி கட்டுதல்.

சூடுபோடறது : தொ.பெ. எவ்வகுப்பினரும் தாசர்ஆகச் செய்யும் சடங்கு. இவர்களுக்குத் தோளின் வலப்புறம் சக்கரமும் இடப்புறம் சங்கும் உள்ள திருமாலின் உருவைக் குரு வரைவார்.

சூதாடி : பெ, சூதாடுவோன்.

சூதாடி : வி.எ. ‘சூதாடி தொலைச்சான்’

சூத்து : பெ. ஆசனப்பக்கம் “சூத்திலே ஒதெச்சான் பல்லுப் போச்சு”.

சூதுகாரன் : பெ. தந்திரமுள்ளவன்.

சூதுவாது : பெ. தந்திரபுத்தி “சூதும் வாதும் வேதனை செய்யும்”.

சூந்து : பெ. கார்த்திகை தீபத்தன்று குச்சியின் முன்பகுதியைச் செதில் செதிலாகப் பிளந்து கொளுத்துதல், 2. பண்ணாடையால் கட்டப்பட்ட தீப்பந்தம் (சூழ்ந்து).

சூப்பு : பெ. இறைச்சிகள் சேர்த்துச் சமைத்த இரசம்.

சூப்பு : ஏ.வி. "வெல்லம் திங்கறவன், ஒருத்தன் வெரல் சூப்ப றவன் ஒருத்தன்"

சூப்உட்டுறு : ஏ.வி. ஏமாற்றிவிடு.

சூம்புதல் : தொ.பெ. மெலிந்து வாடுதல்.

சூர்தட்டை : பெ. பார். கரணைத்தட்டை.

சூர்ப்பாக்கு : பெ. பாக்குவகை.

சூரத்தேங்கா(ய்) : பெ. நிலத்தில் அடிக்கும் காய் (ஈடுதேங்கா).

சூரன் திருவிழா : பெ. சூரனுக்கு எடுக்கப்படும் விழா.

சூரி : பெ. 1. செடி, 2. பழம், 3. முள்.

சூரிக்கத்தி : பெ. கத்திவகை "ஏம் பறக்கறெ ஆட்டுக்குட்டி எங்கையிலிருக்குது சூரியக்கத்தி".

சூரிக்கப்பல் : பெ. புகையிலைவகை.

சூரி புடிக்கறது : தொ.பெ.கோம்பு போடும்போது மேய்ச்சல் சரியாமல் இருக்க, நிறுத்தப்பட்டுள்ள பயிர்த்தட்டையின் சருகைக் கொண்டு சுற்றிலும் சடைபோல் பின்னுதல்.

சூரியகாந்தி : பெ. மலர்வகை.

சூரியதெரிசனம் : பெ. திருமணச் சடங்கு.

சூரியபொறை : பெ. தலையணி.

சூரியன் பொங்கல் : பெ. தைமுதல் தினம் சூரியனுக்கு இடும் பொங்கல்.

சூரைநோவு : பெ. பயிர்நோய்.

சூலக்கட்டை நோவு : பெ. பயிர்நோய் : பயிர் நன்றாகத் தழை யாமல் கட்டையாதல் (சூலைப்பயிர் அடிச்சிருச்சு, பயிர் குச்சிப்போச்சு).

சூலம் : பெ. மும்முனையுடைய ஆயுதம் (சூலாயுதம்).

சூலம் போடுதல் : தொ.பெ. மாட்டிற்குக் காலம் தொடையில் சூலம் போட்டுக் கோவிலுக்கு என விட்டுவிடுதல்.

சூழக்கல்லு மாரியம்மன் : பெ. சிறு தெய்வம்.

சூறாவளி : பெ. சுழல்காற்று.

சூறை : பெ. 1. அசிங்கம், 2. அழுக்கு.

சூறைப்பழம் : பெ. ஓடும் தேரின்மீது வீசும் வாழைப்பழம்.

சூறையிட்டாள் : வி.மு. பறிகொடுத்தாள் ‘மகனெ ஆத்திலே சூறையிட்டா’.

## செ

செக்கச் செவேலுனு : வி.அடை. மிகச் சிவத்தல்.

செக்கா(ன்) : பெ. செக்கு அரைப்பவன் “பாப்பாங்கிட்ட சிக்கனி ஆளும் செக்காங்கிட்ட சிக்கின மாடும் ஒண்ணு” (செக்கான்).

செக்காத்தி : பெ. செக்கு அரைப்பவள்.

செக்கு : பெ.1. ஆட்டுக்கல் ‘செக்குலே ஆட்டி முறுக்கு சுட்டேன்’, 2. எண்ணெய் ஆட்டும் இயந்திரம் “ஊரெல்லாஞ் சேந்து செக்கு தள்ளினாப்பலே”.

செக்கோசை : பெ. குண்டித் திருகிக் கதவைத் திறந்து மூடும் போது வரும் கர், கர், கிர், கிர் எனும் ஓசை. குடும் பத்திற்குக் கெட்டது என்பது நம்பிக்கை.

செகண்டு : வி.எ. உடைந்து ‘அடிச்சா தலெ செகண்டு போயிடும்’.

செகாப்பு : பெ. 1. சிவப்பு, 2. பிறந்த குழந்தையின் உடம்பு, முகம் ஆகியவற்றில் சிவப்பு நிறத்திட்டு இருத்தல் (செகப்பு).

செகுடு : செவிடு : பெ. செவிடன் “குருட்டோடமுதாலும் செகுட்டோடழ முடியாது”. ‘செகுடு எங்க போனா’.

செகுணி : பெ. கன்னம்.

செகெப்புடுச்சுருச்சு. வி.மு. மாட்டிற்கு உடற்குடால் ஏற்படும் நோய்.

செங்கண்ணுமாடு : பெ. சிவந்த கண்களையுடைய இம்மாடு பாயும் தன்மையுடையது.

செங்கத்தூள் : பெ. செங்கல்லைத் தூளாக்கிய பொடி.

செங்கரம் : பெ. விளையாட்டுவகை.

செங்கல்சூளை : பெ. பார். சுண்ணாம்புச்சூளை (செங்கற் சூளை).

செங்கல் செவுறு : பெ. செங்கல் வைத்துக் கட்டப்பட்ட சுவர்.

செங்காடு : பெ. செம்மண் பூமி.

செங்கா நண்டு : பெ. நண்டுவகை.

செங்காய் : பெ. தாம்புஓட்டிய நெல்லின் மேலுள்ள பொடிப் புற்கள்.

செங்கால் : பெ. பழுப்புநிற வெல்லம்.

செங்குண்ணி கூட்டம் : பெ. ஓர். இனம்.

செங்குறிஞ்சி : பெ. மரவகை.

செங்கொளவி : பெ. பார். 1. கோதும்பி.

செஞ்சு : செய்து. வி.எ.

செஞ்சுட்டி ஆடு : பெ. தலையில் சிவப்பு நிறமுள்ள ஆடு.

செஞ்சுபோடலாம் : செய்துவிடலாம் : வி.மு.

செஞ்சோறு : பெ. மஞ்சளும் சுண்ணாம்பும் கலந்து வடை போல் தட்டிய சோறு.

செஞ்சோறு அஞ்சுடை சுத்துதல் : தொ.பெ. கண்ணேறு நீங்கச் செய்யும் திருமணச் சடங்கு (அடை தட்டுச்சீரு).

செட்டப்பு : பெ. அமைப்பாக இருத்தல் (ஆங்கிலம்).

செட்டி : பெ. ஓர்இனம் "செட்டி கெட்டாலும் எட்டு நாள்லெ பொழெப்பான்".

செட்டி நாட்டுத் தூக்கு : பெ. பாத்திரவகை.

செட்டு : பெ. 1. சிக்கனம் 'செட்டா குடும்பம் நடத்திடறா'.
2. பொருட்கள் 'இந்த செட்டு நல்லா பாடுதா' (ஆங்கிலம்).

செட்டுமை : பெ. தேவாங்கச் செட்டியார் இனத்தின் தலைவர்.

செடல்விழா : பெ. உடலில் ஊசி குத்தும் விழா.

செடி : பெ. புதர்.

செடிக்குப் போறெ : வி.மு. காட்டுக்குப் போகிறேன்.

செடிக்கு மண் கட்டுதல் : தொ.பெ. செடிக்கு மண் அணைத்தல்.

செடி குக்கிப் போச்சி (போயிற்று) : வி.மு. பயிர் நன்றாக வளரவில்லை.

செடி சவுங்கிப் போச்சு : வி.மு. பயிர் வாடிவிட்டது.

செடியரது : தொ.பெ. துன்பப்படுவது 'நாஞ்செடியரது யாருக்குப் புரியும்'.

செடியும் செத்தையுமா இருக்கு : வி.மு. செடிகள் அதிகக் களைகளுடன் ஒழுங்கின்றி முளைத்தல்.

செடியொருவி : செடிக்கு ஒருத்தி.

செடியோடி : வி.அடை. செடி முழுவதும் 'செடியோடிப் பூத் திருக்கு'.

செடில் : பெ. பார். 2. அலகு.

செடிவேலி : பெ. வேலிவகை.

செண்டுமல்லி : பெ. பார். கொளலைமல்லி.

செத்ததுக்குச் சமம் : பெ. உறுதி எடுத்தில் 'இதெ முடிக்க லேனா செத்ததுக்குச் சமம்'.

செத்தவன் : வி.அ.பெ. இறந்தவன் "செத்தவன் கையிலே வெத் தலெ பாக்கு குடுத்தாப்பலே".

செத்தை : பெ. 1. அழுகின சதை, 2. குப்பை, 3. சிறிது 'சித்தைக் கழிச்சு வா', 4. மாட்டின் நஞ்சு.

செத்தை போட்டிருச்சு : வி.மு. கன்று ஈன்ற மாட்டின் நஞ்சு விழுதல்.

செத்தை வச்சிருச்சு (வைத்துவிட்டது) : வி.மு. மாட்டுக்குப் புண்ணிலே உண்டாகும் புழு.

செதறி : சிதறி : வி.எ.

செடிதில் பூச்சி : பெ. பயிர்ப்புழு.

செதுக்கு : ஏ.வி. தகடுபோல் வெட்டியேடு "செக்களவு பொன் னும் செதுக்கியுண்டா எத்தனெ நாளக்கி".

செந்தக்கரா : பெ. நெல்லுக்கு வரும் களை.

செந்தணக்கு : பெ. மரவகை.

செந்தணலு : பெ. நெருப்புத்துண்டு.

செந்தலைக் கவுண்டர் : பெ. ஓர் சாதி.

செந்நாரை : பெ. மாட்டுவகை(செந்தாரை மயிலை).

செந்நண்டு : பெ. நண்டுவகை.

செந்நாய் : பெ. செந்நிறமுள்ள நாய்வகை.

செப்பம் : பெ. சீர்திருத்துதல்.

செப்பு ஆலாத்தி : பெ. கரும்புள்ளி செம்புள்ளி குத்திய செப்புக் குடத்தில் மஞ்சள் நீர் ஊற்றி வாய்ப்பாகத்தில் தேங் காய்த் தொட்டியை எரியவிட்டு ஆரத்தி எடுக்கும் பள்ளர் திருமணச் சடங்கு.

செப்பு ஒடைத்தல் : தொ.பெ. சாவுச்சடங்கு.

செப்புக்கொடம் : பெ. செப்பு முதலிய உலோகங்களால் செய்த நீர்க்குடம் "கெணத்துலே போட்டுட்டு செப்பு கொடத்தெ தேடினாப்பலே".

செம்பகப்பூ : பெ. மலர்வகை.

செம்பட்டை : பெ. வெளிர் சிவப்பு நிறம்.

செம்ப கூட்டம் : பெ. ஓர் இனம்.

செம்படவர் : பெ. மீனவர்.

செம்படவச்சி : செம்படைச்சி : பெ.

செம்பருத்தி : பெ. 1. அலங்காரச் செடி, 2. பருத்திவகை.

செம்பாட்டு மொளப்பு : பெ. காடுகளில் விதை விதைத்த மூன் றாம் நாள் மழை இன்றியே வந்துள்ள செழுமை யான முளைப்பு.

செம்பாட்டு வெதைப்பு : பெ. காய்ந்த பூமியில் விதை விதைத் தல் (புழுதி வெதைப்பு).

செம்பாடு களைத்தல் : தொ.பெ. களை வெட்டியபின் மீண்டும் பூமியைக் கொத்துதலும், தப்பித்த களைகளை வெட்டு தலும் "செம்பாடு பண்ணினா எம்பாடு தீந்துது".

செம்பா நோவு : பெ. பயிர்நோய் (செம்பட்டை தாங்கிப் போச்சு, செம்பாந்தாங்குது, செம்பான் உளுந்திடுது, செம்முதியா தாக்கிட்டுது, மஞ்சநோவு).

செம்பான் : பெ. சிவப்புச்சிலந்திப்பூச்சி.

செம்பு : சொம்பு : பெ. நீர் முகக்கும் கலம் "செம்பு நடமாடி னால் குயவன்தானே குடிபிடுங்குவான்" (சொப்புக்குடம்).

செம்புத்தோண்டி : பெ. தாமிரக்குடம்.

செம்புலிஞ்சான் : பெ. மரவகை.

செம்பூத்து : பெ. கருப்பும் சிவப்பும் கலந்த மாட்டுவகை (செம் பூத்து மறையன்).

செம்பூவன் : பெ. மரவகை.

செம்பூத்து : பெ. பருத்தியில் விழும் பேன்.

செம்போட : வி.அடை. ஈரமான மண்பதத்துடன் மண் பக்கு வத்துடன்.

செம்மம் : பெ. ஜென்மம்.

செம்மரம் : பெ. மரவகை.

செம்மறி ஆடு : பெ. ஆட்டுவகை (செம்புலி ஆடு).

செம்மறையன் : பெ. சந்தன நிறம் உள்ள மாட்டுவகை. பள பளப்பான வெள்ளையும் பிள்ளை நிறமும் கலந்த மாட்டு வகை.

செம்மன் : பெ. மண்வகை.

செம்மி ஆடு : பெ. 1. செம்மறி யாட்டு வகை - மரக்கலர், 2. வெள்ளாட்டு வகை - சிவப்பு நிறம்.

செம்மீனு : பெ. மீன்வகை.

செமத்தியா : வி.அடை. அதிகமாக.

செமத்தையா வாங்குவே : வி.மு. அதிக அடி அல்லது திட்டு வாங்குவாய்.

செமை தாங்கிக்கல்லு : சுமைதாங்கி : பெ. முன்பு வழிப்பயணம் செய்தோர் சுமையை இறக்கப் பயன்பட்ட கல்.

செமையா இருக்கு : வி.மு. பிரமாதமாக இருக்கிறது.

செய்குளம் : பெ. மாட்டுப் பொங்கலன்று சாணத்தால் குளம் கட்டி, அதில் மாட்டை மிதிக்கச் செய்தல்.

செய்வினை : பெ. எதிராளியின் காவலடி மண் அல்லது முடியை எடுத்து அதன்மூலம் அவருக்குத் தீங்கு விளைவித்தல் (சூனியம்).

செயின்ராட்டை : பெ. நெசவுக்கருவி (செயின் - ஆங்கிலம்).

செரகடித்தல் : தொ.பெ. பயம், நோய் நீங்க வேப்பிலையால் மந்திரித்தல்.

செரகு : பெ. நீளவாக்கில் பல பாத்திகள் கொண்ட அமைப்பு.

செரகு ஓட்டுதல் : தொ.பெ. ஏர் ஓட்டிப் பல பாத்திகளைக் கொண்ட அமைப்பை ஏற்படுத்துதல்.

செரகு கோதறது : தொ. பெ. செரகு ஓட்டியபின் செரகில் மண் வெட்டியால் பல பாத்திகளை ஏற்படுத்துதல்; செரகு வாய்க்கால் ; துண்டு வாய்க்கால் ஆகியவற்றை ஏற் படுத்துதல்.

செரகு வாய்க்கா : பெ. நெட்டு வாய்க்காலிலிருந்து பிரிதல்.

செரசு : பெ. தலை 'செரசுக்கு ஒத்த பூவாவே'.

செராய் : பெ.1. காற்சட்டை, 2. சிராய்.

செரிகெ : சரிகை : பெ.

செரிநாளு : பெ. வாழ்நாள்.

செரிப்பழம் : பெ. பழவகை (ஆங்கிலம்).

செரியா : வி.அடை. 1. சரியா, 2. சரியாக 'செரியா அஞ்சு மணிக்கு வந்துடு'.

செருக்கு : பெ. ஆணவம்.

செருகு : சொருகு : ஏ.வி. இடையே நுழை.

செருகு : சொருகு : வி. அடை. 'செருக்குத்தாம் போப்பா'.

செருப்பு : பெ. காலணி "ஆத்துக்குப்போகவும் வேண்டாம் செருப்பைக் கழற்றவும் வேண்டாம்". (வகை : அவாய் அல்லது லம்பர் அல்லது பேட்டா செருப்பு, கட்ட செருப்பு, தோல் செருப்பு, பாஞ்ச்சு செருப்பு, வார் செருப்பு, ஹீல்ஸ் செருப்பு).

செருப்பு தொட்டுக்க : ஏ.வி. செருப்புப் போட்டுக்கொள் (செருப்பு மிதிச்சுக்கோ)

செருப்புபிஞ்சு போவும் : வசை.

செருமான் : பெ. தாழ்ந்த சாதியினர்.

செரை : சிரை : பெ. களை "அருகுசெரை ஒதுக்கி வந்தே".

செரைக்க : சிரைக்க : வி.அடை. 'முடி செரைக்கப் போறேன்'.

செரையெடுத்தல் : தொ.பெ. தென்னை, பனை மரத்திலுள்ள மட்டை காய்ந்த ஓலை, பண்ணாடை முதலியவற்றை நீக்குதல்.

செல்லம் : பெ. கண்டிப்பு இன்றி இடங்கொடுத்தல் "செல்வம் முத்தின பாவக்கா புளியில்லாம நெளியுதாம்".

செல்லர் : பெ. நெல்லை, உமி தனியாக அரிசி தனியாகப் பிரிக்கும் இயந்திரம்; தவிடு வராது.

செல்லன் கூட்டம் : பெ. ஓர் இனம்.

செல்லியம்மன் : பெ. தெய்வம்.

செல்லியாண்டி அம்மன் கோவில் : பெ. பவானியில் உள்ள கோவில்.

செல்றது : சொல்லுவது : வி.அ.பெ.

செலகத்தட்டை : பெ. மாட்டு வியாபாரத்தில் இருபத்தைந்து ரூபாயைக் குறிக்கும் சொல்.

செலகை : சலகை : பெ. 1. அளவு, 2. மாட்டுவியாபாரத்தில் இருபது ரூபாயைக் குறிக்கும் சொல்.

செலங்கை : சலங்கை : பெ. 1. காதணி, 2. நாற்றின் வேரில் உருண்டைகள் இருத்தல் : நோய் தாக்கிய நாற்று.

செலந்திப்பண்டம் : பெ. பத்தியத்தின்போது நீக்க வேண்டிய உணவுகள்.

செலப்புடுச்சிருச்சு : வி.மு. மாட்டிற்கு நாக்கு நரம்பின் இரத்தம் கெடுதல்.

செலம்பு : சிலம்பு : பெ.

செலம்புவீசுதல் : தொ.பெ. சிலம்பாட்டம் (தடி வெளையாட்டு).

செலவாந்திரம் : பெ. பழமொழி.

செலவுப்பொட்டி : பெ. பார். அஞ்சரப்பெட்டி.

செலவுரசம் : பெ. சுக்கு, கொத்தமல்லி, மிளகு, சீரகம் முதலியவற்றால் தயாரிக்கப்பட்ட பிரசவித்த பெண்ணுக்குரிய ரசம்.

செலவு வாங்கப் போறெ (போகிறேன்) : வி.மு. வீட்டிற்குத் தேவையான பொருள்களை வாங்க கடை அல்லது சந்தைக்குச் செல்கின்றேன்.

செலையூஞ்சல் : பெ. மரவகை.

செலை வாங்குது : வி.மு. வெளுத்து வாங்குது 'நையாண்டி மேளம் செலை வாங்குது'.

செலை குத்தறது : தொ. பெ. மாட்டின் நரம்பிலுள்ள கெட்ட இரத்தத்தை ஊசியால் குத்தி எடுத்து உப்பு, புளி தடவுதல் (செலை கௌயரது).

செவ்எழனி : பெ. க்வுளித் தென்னையில் உண்டாகும் ஆரஞ்சும் மஞ்சளும் கலந்த சிறிய இளநீர் வகை.

செவ்வந்தி : பெ. பூவகை.

செவ்வழுதல் நோவு : பெ. பயிர் நோய், எ-டு. கரும்பு.

செவ்வாய்தோசம் : பெ. சாதகத்தில் நான்கு, ஏழு, எட்டாமிடங்களில் செவ்வாய்கிரகம் இருப்பதனால் ஏற்படும் தோஷம்.

செவ்வாய் தோசப் பரிகாரம் : பெ. தோசமுள்ளவ-ன்-ள் வாழைக் கன்றுக்குப் பொட்டுத்தாலியுள்ள மஞ்சள் கயிற்றைக் கட்டுதல், பின்அக்கன்றை வெட்டிவிடுதல்.

செவ்வாளக் குருத்தழகி : பெ. சிறிய இடை உள்ளவள்.

செவட்டை : பெ. பார். எலைச்சுருட்டை நோவு.

செவத்தல் : தொ. பெ. சிவத்தல்.

செவத்தாடு : பெ. எடுப்பான சிறப்பு நிறத் தோற்றமுள்ள ஆடு.

செவத்துக்கால் சட்டம் : பெ. வீட்டின் பாகம்.

செவப்பு : சிவப்பு : பெ. குங்குமம்.

செவப்புக்கல்லு : பெ. ஆட்டுக்கல், உரல் முதலியன செய்யும் கடினத் தன்மையுள்ள கல்.

செவப்புக்காரெ : சிவப்புநிறக் காரை : பெ.

செவப்புகூன்வண்டு : பெ. வண்டுவகை.

செவப்பு செதில்பூச்சி : பெ. பூச்சிவகை.

செவப்பு மஞ்சரி : பெ. மலர்வகை.

செவலாடைத் துணி : சிவப்புத்துணி : பெ.

செவப்பு வெல்லம் : பெ. பழுப்பு வெல்லம்.

செவலை : பெ. சிவப்பு நிறமுள்ள மாட்டுவகை.

செவலைப்போர் : பெ. இருநிறக் கலப்பில் சிவப்பு எடுப்பாக உள்ள மாட்டுவகை.

செவனேனு இரு : ஏ.வி.சும்மா இரு.

செவிடு : பெ.1. கன்னம், 2. காதுகேளாமை.

செவிணி : பெ. பார்.1. செவிடு, 2. காது.

செவுட்டுக்காதிலே கூப்பிட்டா ஏறவே மாட்டேங்குது அழைப்புக் குரல் கேட்காதவனைப் பார்த்துக் கூறுதல்.

செவுட்டு வேளா : பெ. மரவகை.

செவுறு : சுவர் : பெ. "செவுறில்லாம சித்திரம் எழுத முடியுமா?"

செள்ளு : பெ. அரிசி மாவு முதலியவற்றில் இருக்கும் சிறிய கறுப்புப் பூச்சி.

செறகு : பெ. சேலையில்முந்தாணி வேறுவிதமாக - டிசைனாக - இருத்தல்.

செறுமுதல் : தொ. பெ. கனைத்தல்.

சென்ட் : பெ. அளவு, நூறு சென்ட் ஒரு ஏக்கர் (ஆங்கிலம்).

சென்டரு : பெ. மையம் (ஆங்கிலம்).

சென்மப்பகை : பெ. பிறவிப்பகை.

சென்னா : சொன்னா : வி.எ. "உள்ளதைச் சென்னா ஒடம் பெரியும்".

சென்னையா : சொன்னாயா : வி.மு.

## சே

சே : இடை. வெறுப்புக்குறிப்பு.

சேக்கை : பெ. மயங்கி நிலை.

சேகண்டி : பெ. கோல் கொண்டு அடிக்கும் வட்டமணிவகை (சேவடி, சேவுண்டி).

சேகா போடறது : தொ.பெ. பொரி தயாரிக்கும்போது நெல்லை உலர்த்த பொரி ஓட்டில் போட்டு வறுத்தல்.

சேகு : பெ. திண்மை "மரம் முத்தினா சேகு மனுசன் முத்தினா கொரங்கு".

சேங்கன் சேத்தறது : தொ.பெ. பார். கூழி சேத்தறது.

சேங்கன்னு : பெ. ஆண் கன்று.

சேங்குதல் : தொ.பெ. திருடுதல்.

சேசராஜு : பெ. தேவாங்க செட்டியார் இனத்தின் செட்டு மைக்கும், எஜமானருக்கும் ஏவலாள்.

சேஞ்சிருந்தா : செய்திருந்தால் : வி.எ.

சேட்டை : பெ. குறும்புச் செயல்.

சேடன் : பெ. தேவாங்கர் பிரிவு. "சேடன் வாய்க்கொழுப்பு நீரா வடியும்".

சேடன் கூட்டம் : பெ. ஓர் இனம்.

சேடை : பெ. தொளியுழவுக்காக நீர் கட்டப்பட்ட வயல்.

சேடை அடித்தல் : தொ. பெ. உழவு ஓட்டுவதற்காகவிடும் தண்ணீர் (சேடை கட்டுதல் சேடைவுடுதல்).

சேடை பாயுது : வி.மு. நடவுக்குப் பின் பாயும் தண்ணீர்.

சேணியன்ன் பெ. எண்ணெய் வியாபாரி "செட்டி கூடிக் கெட்டான், சேணியன் பிரிஞ்சு கெட்டான்".

சேத்தங்கா(ய்) கொட்டை : பெ. ஆடைக்குக் குறியிடும் காய் (சேராங்கொட்டை).

சேத்தி : சேர்த்து : வி.எ. 'பணம்சேத்தி வை', 'நீ எதுலெ சேத்தி'.

சேத்துக்களை : பெ. ஈரத்தில் வெட்டும் களை.

சேத்துக்கால் : பெ. நீர் ஈரத்தில் மண் அணைத்தல்.

சேத்துப்புண்ணு : பெ. மாட்டின் காற்புண்.

சேத்துமடை : பெ. வாய்க்காலிலிருந்து செரகுக்குப் போகத் திரும்பும் மடை.

சேத்தெ எடுக்கறது : சேர் எடுத்தல் : தொ.பெ. தூர் எடுத்தல்.

சேதாரம் : சேதம் : பெ. தேய்மான நஷ்டம்.

சேதி : செய்தி : பெ.

சேந்து : ஏ.வி. கயிறு முதலியவற்றால் இழுத்தல்.

சேந்து : சேர்ந்து : வி.எ. "சேந்து கெட்டவரில்லே பிரிஞ்சு வாழ்ந்தவரில்லே"

சேந்துகவுறு : பெ. கிணற்று நீர் இறைக்கும் கயிறு (வடகவுறு, வால்கவுறு).

சேந்துகெணரு : பெ. குடிநீர்க்கிணறு.

சேப்பங்கெழக்கு : பெ. கிழங்குவகை.

சேப்பு : பெ. 1. சிவப்பு, 2. ஜோப்பு (சட்டைப் பை).

சேம்பா : பெ. குதிரைக்கு வரும் இருமல் நோய்.

சேம்பிலை : பெ. கொடிவகை (சேம்பு, சேமந்தலை).

சேம்புள்ளு : சேம்பிள் : பெ. மாதிரி (ஆங்கிலம்).

சேமப்படுத்தி : வி.எ. குணப்படுத்தி.

சேமம் : பெ. நல்வாழ்வு.

சேமமா : பெ. நலமா

சேமியா : பெ. 1. உணவுப்பொருள், 2. பார். சந்தகை (இந்துஸ்தானி).

சேயன் : பெ. குழந்தை.

சேர்ரதுக்கும் : சேருவதற்கும் : வி.எ.

சேரப்போலா : சேர்ந்து போவோம் : வி.மு. 'எல்லா வரட்டு சேரப்போலா'.

சேரபோது : சேர்ந்தபொழுது : வி.அடை.

சேரலன் கூட்டம் : பெ. ஓர். இனம்.

சேரி : பெ. 1. சரி, 2. தாழ்ந்தோர் குடியிருப்புப் பகுதி.

சேரிக்கா(ய்) : பெ. பப்பாளிப்பழம்.

சேரு : சேர் : பெ. 1. அடித்த தானியத்தைத் தற்காலிகமாகக் குவித்து வைக்கும் இடம் (களம்), 2. ஒன்றறைக் கிலோ கொண்ட அளவு, 3. நாற்காலி, 4. நீரும் மண்ணும் கலந்து குழம்பிய பகுதி.

சேரை : பெ. கையளவு; கையால் அள்ளி எடுக்கும் அளவு; விரித்த கையில் உள்ள அளவு.

சேவாக்கா(ய்) : பெ. முற்றிய நுங்கு.

சேவாத்தலையா : பெ. எண்ணெய் இல்லாத தலையை யுடையவன் (பரட்டத் தலையா, பனங்கொட்டத் தலையா).

சேவிக்க : வி.எ. வணங்க "பச்சரிசிக்குப் பறையனை சேவிக்கலாம்".

சேள : பெ. நீச்சல் 'ஆத்துலே சேளப்பழகினே'.

சேறு கலக்குதல் : தொ. பெ. தொளியடித்தல்.

சேனக் கெழங்குப்பூ : பெ. கருணைவகை.

## சை

சைக்கிலு(ள்) : பெ. மிதிவண்டி "சாமியே சைக்கிள் ஓட்டுது பூசாரி புல்லட் கேட்டானாம்" (ஆங்கிலம். பாகங்கள் : பம்பர், பிரேமு, பூக்கட்டு, பெல்லு, போர்க்கு, லைட்டு வீல்வு ஹேனல்பாரம்).

சைக்கிள் சடை : பெ. சடைப்பின்னல்வகை.

சைசு : பெ. 1. அளவு 'அரைக்கு முக்கால் சைசுக் கல்லு', 2. அழகு 'புள்ளெ போற வரச சைச பாரு'(ஆங்கிலம்).

சைடுபாரு : பெ. மாட்டு வண்டியின் நடுப்பாரின் இரு புறமும் வரும் பலகை (ஆங்கிலம்).

சைடு பகலை : பெ. வண்டியின் பக்கங்களில் நிறுத்தப் பட்டுள்ள பலகை (சைடு - ஆங்கிலம்).

சைடு வெட்டியாச்சா : வி.மு. பார். கங்கு அடிச்சுட்டாச்சா.

சைத்தான் : பெ. வசை (அரபு).

சைனா : பெ. 1. சப்பை மூக்குடையவள், 2. பாலைத் திரிக்க வைக்கப்போடும் பொருள்.

சைவ பிரியாணி : பெ. காய்கறி கலந்து சமைத்த உணவு (தற்காரி பிரியாணி).

## சொ

சொக்குது : வி.மு. மயங்குகிறது 'ஆடு சொக்குது'

சொக்கம் : சொர்க்கம் : பெ. சுவர்க்கம் 'சொர்க்க வாசல்'.

சொக்கர் கோயில் : பெ. ஆலயம்.

சொக்கன் : பெ. குரங்கு (மலையாளம்).

சொக்காயி : பெ. 1. பார். அங்கராக்கு, 2 . பார். 3. சட்டை (தெலுங்கு). .

சொக்குப்பொடி : பெ.ஆளை மயக்குதல் 'சொக்குப் பொடி போட்டுட்டா'

சொக்கு புடிச்சிருச்சு (பிடித்துவிட்டது) : வி.மு. துவர்ப்புள்ள இலைகளை ஆடுமாடு தின்பதால் ஏற்படும் தொண்டைப் பிடிப்பும் மயக்கமும்.

சொகம் : சுகம் : பெ. 'சொகமா'

சொகமில்லெ : சுகமில்லை : வி.மு. உடல்நலமில்லை.

சொகவாசி : பெ. துன்புறாமல் வாழ்பவன்.

சொங்கி : பெ. கையால் ஆகாதவன் 'சுத்த சொங்கியா இருக்கா'.

சொங்கு : பெ. கட்டிய வேட்டியின் எடுத்துச் சொருகும் நுனி.

சொச்சம் : பெ.1. மிச்சம், 2. மீதி.

சொட்ட கொத்தறது : தொ.பெ. உழாமல் விடுபட்ட பகுதியை மண் வெட்டியால் கொத்துதல்.

சொட்டத் தலையெ (தலையன்) : பெ. ஆட்பெயர் (வழுக்கத் தலையெ).

சொட்டவாளை : பெ. மீன்வகை.

சொட்டை : பெ. 1. இடைவெளி 'சொட்டையெ கொத்திவுடு' 2. குற்றம் 'சொட்டே சொல்லாட்டி ஆகாதா' 3. பள்ளம், 4. வழுக்கை (தெலுங்கு).

சொட்டை ஆடு : பெ. கறுப்பு, வெள்ளை, சிறிது சிவப்பு கலந்த ஆடு.

சொட்டைக்காலு : பெ. ஆட்டின் காது சிறியதாய் சுருங்கியது போல் இருத்தல்.

சொட்டைக்காடு : பெ. தற்சமயம் விவசாயம் செய்யப்படாத பூமி.

சொடலான : பெ. அடை. பிரகாசமான 'சொடலான மச்சம்'.

சொடுக்கு : பெ. கை நொடித்தல்.

சொண்டி : பெ. கையால் ஆகாதவன் (தெலுங்கு).

சொணங்காமெ : சுணங்காமல் : வி.அடை. தடை கூறாமல்.

சொத்து : பெ. உடைமை.

சொத்தெ சொல்லல் : பெ. குற்றங்குறை 'சொத்தை சொல் லாட்டி உனக்கு முடியாது'.

சொத்து சொகம் : பெ. உடைமை

சொதமண்ணு : பெ. குழகுழ என்றிருக்கும் சேற்றுமண்.

சொந்தக்காரன் : பெ. உறவுக்காரன்.

சொந்தக்காரி : பெ. உறவுக்காரி.

சொந்த வாத்தியார். பெ. சிறப்பு போதனை தரும் ஆசிரியர்.

சொப்பனம் : பெ. கனவு.

சொப்பு : பெ.1. உண்டியல், 2. சடங்குகளில் பயன்படும் பானை, 3. சிறியதாய் நீளமாய் உள்ள கலம் "அவ கெடக்கறா குடிகாரன் எனக்கு ஒரு சொப்பு ஊத்தடா" (செப்பு)

சொப்பொலிவு : சொற்பொழிவு : பெ.

சொமெ : சுமை : பெ. "போடப்போடத் தீனி வைக்க வைக்கச் சொமெ"

சொய்யான் : பெ. வெல்லம் சேர்த்து ஆட்டிய கடலைமாவை அரிசி மாவின் நனைத்துப் பணியாரக்கல்லில் போட்டு எடுத்த பணியாரம் (சொய்யமாவு).

சொயிங் சப்பா போடு : ஏ.வி. ஜால்ரா தட்டு.

சொரட்டை மசுறு : சுருட்டைமுடி : பெ.

சொரண்டு : சுரண்டு : ஏ.வி.

சொரண்டு களை : பெ. மண்வெட்டியால் பயிருக்கு எடுக்கும் முதற்களை.

சொரணை : சுரணை : பெ. உணர்ச்சி 'சொரணை கெட்டவனே'

சொரப்புரடை : சுரைக் குடுக்கை : பெ.

சொரம் : சுரம் : பெ. காய்ச்சல்.

சொரக்கா : சுரைக்காய் : பெ. "ஏட்டுச் சொரக்கா சமையலுக் காகாது"

(வகை : கும்பசொரை, பாம்பு சொரை).

சொரவி : பெ. கர்ப்பிணிக்கு வரும் கால் வீக்கம்.

சொரணை கெட்டவன் : வி.அ.பெ. நாணம் அற்றவன் (சூடு சொரணை அற்றவன்).

சொரிந்து : வி.எ. அழுத்தி "சொரிந்து தேய்க்காத எண்ணெயும் பரிந்து இடாத சோறும் பாழ்".

சொரிநாயி : பெ. 1. பார், 2. அல்சேசன், 2. நோயுற்ற நாய்.

சொரி நாரத்தங்கா(ய்) : பெ. மரவகை.

சொரெ முள்ளு : பெ. முள்வகை (வேலி முள்ளு).

சொரை : பெ. ஒடுக்கமான வாயுள்ள பாத்திரத்தில் திரவப் பொருளை ஊற்ற உதவும் கருவி:

சொரெ முள்ளு : பெ. முள்வகை (வேலி முள்ளு).

சொல்படி நட : சொன்னபடி நட : ஏ.வி.

சொல்லரெ : சொல்லுகின்றேன் : வி.மு.

சொல்லிச் செயிலேனா ஏண்டானு கேளு : சவாலாகக் கூறுதல்.

சொல்லிப் போட்டானா : சொல்லிவிட்டால் : வி.எ.

சொல்லிப்போட்டானா : சொல்லிவிட்டானா : வி.மு.

சொல்லிமுடியாது : வி.மு. 'அந்தத் தளுக்கி பிலுக்கறதே சொல்லி முடியாது'

சொல்லீட்டீயே : சொல்லிவிட்டாயே : வி.மு. "சந்தைக்குப் போயி ஆடு புடுச்சாப்பலே அத்தனை எளிசாச் சொல்லீட்டீயே".

சொல்லுவாப்பலெ : சொல்லுவார்கள் : வி.மு.

சொல்லை : பெ. கொசு.

சொல்றப்போ : சொல்லும்போது : வி.அடை.

சொலமாடுதல் : சுற்றிவருதல் : தொ.பெ. 'பலகாரம் தீர்ர வரைக்கு நீ ஊட்டச்சுத்தி சொலமாடிட்டுதா இருப்பே'

சொலவம் : பெ. பழமொழி (சொலேந்தரம்).

சொளட்டி : சுழன்று : வி.எ. 'காத்து சொளட்டி அடிக்குது'

சொளயன் : பெ. எதிலும் தப்பித்துக் கொள்பவன் (கழுவற மீன்ல நழுவறமீன்).

சொளெ : சுளை : பெ. 'ஆரஞ்சிச் சொளே', 'பருத்திச் சொளே'.

சொறா : சுறாமீன் : பெ.

சொன்ன பேச்சு தப்பமாட்டா(ன்) : வி.மு. சொற்பிறழாதவன்.

சொன்னி : பெ. ஆட்பெயர் (சொன்னிக்கையன், சொன்னாங் கையன்).

சொனை : சுனை : பெ. "ஆனெக்கிப் பயந்து மொதலெ சொனெ யிலே குதிச்சானாம்".

## சோ

சோக்கு : பெ. 1. அழகு 'சோக்கா இருக்கா(ள்)', 2. கவலையற்று 'சோக்கா சுத்தறா(ன்)'.

சோகு : சோகை : பெ. 1. 'கரும்புச்சோகு' (சோவ, சோவு).

சோகை உரிக்கறது : தொ.பெ. கரும்பு, சோளம் இவற்றில் காய்ந்து தொங்கும் சோகை உரித்துச் சுத்தம் செய்தல்.

சோகை வெளுப்பு நோவு : பெ. பயிர்நோய். எ-டு. சோளம்.

சோ, சோ, ட்டுர், ட்டுர் : இடை. வண்ணான் துணி துவைக்கும் போது எழுப்பும் ஒலி.

சோட்டாளி : பெ. 1. ஒத்த வயதினர், 2. நண்பர்கள்.

சோடனை : பெ. அலங்கரிப்பு.

சோடா : பெ. பானவகை (ஆங்கிலம்).

சோடி : பெ. 1. இரட்டை, 2. ஒப்பு, 3. நண்பன்.

சோடிச்சு : சோடித்து : வி.எ. அலங்கரித்து.

சோடிமார் : பெ. தோழிமார்.

சோடு : பெ. 1. அளவு 'அவெ எத்தச்சோடு இருக்கா', 2. இரட்டை 'ஒரு சோடு செருப்பு வாங்கனு' 3. செருப்பு 'சோட்டால் அடிச்சிடுவே'

சோடு அடிக்கறது : தொ.பெ. முன்கால்கள் உராய்தல். எ-டு. மாடு.

சோடு தவளை : பெ. பார். அண்டா.

சோத்தமிக்கி : பெ. சாதத்தை முக்கிமுக்கித் தின்பவன், 'சோத்தமிக்கி குண்டு ராமனா இருக்கியே'.

சோத்தாங்கை : பெ. வலக்கை (சோத்துக்கையில், வலங்கையில்).

சோத்துக்கத்தாளெ : பெ. கற்றாழை வகை.

சோத்துக்குச் செத்தவள் : கையால் ஆகாதவன்.

சோத்துக்குப் போடறது : சாதத்திற்குப் போடுவது : வி.அ.பெ. மருந்தாகப் பயன்படும்போது உப்பைக் குறித்தல்.

சோத்துநேரம் : பெ. நண்பகல் ஒருமணி.

சோத்துல : சோற்றில் : பெ. "சோத்துல கெடந்த கல்லெ எடுக்காதவன் சேத்துல கெடக்கும் எருமெயே தூக்குவானாம்".

சோத்து வடகம் : பெ. மிஞ்சிய சாதத்தில் செய்த வடகம்.

சோத்தெ கைதொடலே : வி.மு. சாப்பிடவில்லை. 'மூணு நாளா சோத்தெ கை தொடலை".

சோதா : பெ. பலவீனன் (அரபு).

சோதிக்கறெ : சோதிக்கின்றாய் : வி.மு. கஷ்டப்படுத்துகிறாய் 'பொறுமையெ ரொம்பத்தா சோதிக்கறெ'

சோந்தவ : சோர்ந்தவன் : வி.அ.பெ. "வாய் சோந்தவ சபெயிலே கெட்டான் கைசோந்தவ படெயிலே கெட்டான்".

சோப்பு : பெ. முகஸ்துதி 'ரொம்ப சோப்புப் போடாதே' (ஆங்கிலம்).

சோப்புக்கட்டி : பெ. குளிக்க, துவைக்க உதவும் சோப்பு.

சோப்பு டப்பாவு : பெ. சோப்பு வைக்கும் பெட்டி.

சோம்பேறி : பெ. கையால் ஆகாதவன் : "சோம்பேறிக்கு வாழெப்பழம் தொழியாமக்குடு" (ஒதவாக்கரை, சோப்ளாங்கி).

சோமணத்துண்டு : பெ. சரிகையுள்ள துண்டு.

சோமவாரம் : பெ. திங்கட்கிழமை 'சோமாரச் சந்தெ'

சோமாசு : பெ. பார். எருக்கலங்கா பூரி.

சோயா மொச்சை : பெ. பருப்புவகை (சோயா பீன்ஸ்).

சோரம்போதல் : தொ. பெ. 1. திருட்டுப்போதல், 2. விபசாரம் செய்தல் 'சோரம் போயிட்டா(ள்)'.

சோருறலா : சோர்ந்து போகின்றாலா : வி.மு. 'கண்ணக்கண்ண சோருறலா'.

சோலி : பெ. 1. பார். 3. சட்டை, 2. வேலை "தாயில்லா ஊட்லே தங்கமுடி சோலியில்லே, பொறப்பில்லா ஊட்லே பூத முடி சோலியில்லே."

சோலை : பெ. காடு (கானல்).

சோவை : பெ. இரத்தச்சோகை.

சோழி : பெ. தாய விளையாட்டில் விளையாடும் காய்.

சோழியப்பை : பெ. பிச்சையெடுப்பவர்கள் வைத்துள்ள பை.

சோழியன் : பெ. 1. கவுண்டர்களின் உட்பிரிவு "சோழியன் குடுமி சும்மா ஆடுமா", 2. பள்ளர் உட்பிரிவு.

சோழீஸ்வரர் : பெ. தெய்வம்.

சோளத்தட்டை : பெ. சோளத்தின் அரிதாள்.

சோளக்கட்டை : பெ. சோளத்தின் வேர்ப்பகுதி.

சோளக்களி : பெ. சோளமாவால் செய்த களி உருண்டை.

சோளக்கள பொம்மை : பெ. சோளக்கதிர், கம்பின் கதிர் முதலிய வற்றில் காகம், குருவி விழாமல் இருக்க நிறுத்தப்படும் மனித உருவம், 2. வேலை செய்யாதவனைக் குறிக்கும் வசை.

சோளக்காய் : பெ. உள்ளீடற்ற கொள்.

சோளக்குழி : பெ. தானியத்தைப் பாதுகாக்க வீட்டு வாசலின் முன் போடப்பட்ட பலகை மூடிய குழி.

சோளச்சோறு : பெ. சோளத்தை நன்றாக இடித்து வேகவைத் துப் புழுங்கச் செய்த உணவுவகை.

சோளதோசை : பெ. தோசை வகை.

சோளப்பொரி : பெ. பொரிவகை "ஆனெப் பசிக்கு சோளப் பொரி தாங்குமா?"

சோளம் : பெ. தானியவகை (எண்ணேய் வெள்ளச்சோளம், ஐபிரிட், கங்கா, கேசரி, கொக்கி வெள்ளை, தலைவிரிச் சான், மக்காச்சோளம், மஞ்சசோளம், வெள்ளசோளம்).

சோளம் போட்டோம் : வி.மு. சோளம் விதைத்தோம் : வி.மு.

சோளரொட்டி : பெ. ரொட்டிவகை.

சோற்றுவேர் : பெ. ஒருவகை வேர்.

சோறு : பெ. சாதம், "சோறு கண்ட எடம் சொர்க்கம்".

சோறு சுத்தறது : தொ.பெ. 1. திருமணச் சடங்கு. எ-டு. வேட்டுவர், 2. முதல்நாள் காதுகுத்துச் சடங்கு, எ-டு. உடையார்.

சோறு படைக்கறது (படைத்தல்) : தொ. பெ. புதைக்குழிக்கு உணவு படைத்தல்.

சோறு மொறண்டிடுது : வி.மு. சாப்பிட்ட சாதம் வாய்க்கு வருதல் (எதுக்களிக்குது).

சோனகர் : பெ. பழங்குடிச் சாதியினர்.

## சௌ

சௌடாம்பிகை திருவிழா : பெ. சௌடாம்பிகை அம்மனுக்கு எடுக்கும் விழா.

சௌடால் : பெ. இடம்பம் 'வாய்ச் சௌடால் அடிக்காதே'

## ட

ட்யூட்லைட்டு : பெ. எளிதில் எதையும் புரிந்து கொள்ள முடியாதவன் (ஆங்கிலம்).

ட்ரங்குப்பொட்டி : பெ. தகரத்தால் ஆன துணி வைக்கும் பெட்டிவகை. (ஆங்கிலம். டிரன்க்குப் பொட்டி).

ட்ரம்மு : பெ. 1. தகரத்தால் ஆன வாயகன்ற பெரிய பாத்திரம். 2. நெசவுக்கருவி, 3. பெரிய டின் (ஆங்கிலம்).

ட்ரிக் : பெ. தந்திம் (டிரிக்கு), (ஆங்கிலம்).

டக்கர் : பெ. 1. அழகு, 2. பிரமாதம் (ஆங்கிலம்).

டக்கப்போர் : பெ. 1. இழுபறி, 2. போராட்டம் (ஆங்கிலம்.

டக்கு : பெ. 1. சட்டை முதலியவற்றில் வைக்கும் மடிப்பு, 2. செய்தியில் பொடி வைத்துப் பேசுதல் (ஆங்கிலம்).

டக்குனு : வி. அடை. உடனே.

டசன் : பெ. அளவு (ஆங்கிலம்).

டங்க்கனாமாலம் : பெ. கொங்கல்லி கிராமத்தில் உள்ள ஓர் இடம்.

டங்குடங்குனு ஆடறா(ள்) : வி.மு. ஆணவமாய் நடப்பவள்.

டங்குவார் : பெ. குதிரைக்குப் பிணிக்கும் தோற்பட்டை, 2. வசை 'டங்குவார் பிஞ்சுபோகு ஜாக்கிரதெ'

டஞ்சன் : பெ. காற்றோட்டமில்லாத வெளிச்சம் குறைந்த நெருக்கடியான இடம் 'இதென்ன வீடா டஞ்சன் மாதிரி இருக்கு' (ஆங்கிலம்).

டணக்கு : பெ. மரவகை (தணுக்கு).

டப்பா : பெ. பெட்டி (இந்துஸ்தானி).

டப்பா வைண்டிங் : பெ. நெசவுக்கருவி (போகினி வைண்டிங் மிசின்).

டபுள் கத்தி : பெ. கத்திவகை (டபுள் -ஆங்கிலம்).

டபுள் பீன்சு : பெ. பார். கறிபீன்ஸ்.

டம்புடுச்சு : தம்பிடித்து : வி. அடை. தாக்குப்பிடித்து.

டம்ளரு : பெ.பார். குவளை (ஆங்கிலம். தம்ளர்).

டமாரம் : பெ. மத்தளம்.

டமாரம் அடிக்கறது : தொ.பெ. செய்தியைப் பரப்புதல் 'இவளுக்குத் தெரிஞ்சா டமாரம் அடிச்சுடுவா' (டமுக்கடிக்கறது, தமுக்கடிக்கறது).

டமுட்டா : பெ.1. பார். 2. கடலெ மாவு, 2. பழவகை.

டர்க்கி டவல் : பெ. துண்டுவகை.

டல்சீசன் : பெ. வியாபாரம் மந்தமாக நடைபெறும் காலம் (ஆங்கிலம்).

டல்லா : வி. அடை. 1. சோர்வாக 'ஏ டல்லா இருக்கே', 2. மந்தமாக 'யாவாரம் ஒரே டல்லா இருக்கு' (ஆங்கிலம்).

டவுசரு : பெ. பார். ஆப்பேண்டு (ஆங்கிலம்).

டவுன்காரரு : பெ. நகரத்தில் இருப்பவர் (டவுன் -ஆங்கிலம்).

டன் : பெ. ஆயிரம் கிலோ கொண்ட அளவு (ஆங்கிலம்).

## டா

டாக்கர் துண்டு : பெ. அகலக்கரையுள்ள துண்டு.

டாங்கி வெளையாட்டு : பெ. ஒருவகை விளையாட்டு (டாங்கி - ஆங்கிலம்).

டாண்டாண்ணு பேசுவா : கணீரென்ற குரல்.

டாண்ணு : வி. அடை. சரியாக 'அஞ்சு மணிக்கு டாண்ணு வந்துடு'.

டாப்பக் கழட்டு : ஏ.வி. மண்டையை உடை (டாப் - ஆங்கிலம்).

டாப்பங்கழட்டிடுவே சாக்கிரதை : வசை.

டாப்பிக்கட்டு : பெ. கடலை முட்டாய்.

டாம்டாம் : இடை 'ஒரு சேதி கெடச்சா டாம்டாம் அடிச்சுடுவா'.

டாவை அணைக்கட்டு : ஏவி. வியாபாரக் குழூஉக்குறி. கடையின் பெயர் பிரேஸ்கடை, எண். 36. சூதாட்ட வகைகளுள் ஒன்றான சீட்டுக் குலுக்கி எடுத்தல் இக்கடையில் நடைபெறும் தொழில். இக்கடையாட்களில் சிலர் பொதுமக்களுடன் அவர்களுள் ஒருவரைப் போல் கலந்து நிற்பர். இவர்களின் பெயர் கிளாசு; பொதுமக்களின் பெயர் டாவு. மக்கள் ஆட்டத்திலிருந்து வெளியேற முயன்றால் அவர்களைக் கடைக்காரன் சொல்லும் வார்த்தை 'டாவை அணைக்கட்டு'

## டி

டி.எம்.கே. வேட்டி : பெ. கறுப்பு சிவப்பு கரையுள்ள வேட்டி.

டிக்குட்டு : டிக்கெட் : பெ. 1. ஆட்களைக் குறிக்கும் குறிப்பு 'நாலு டிக்கட் குறையுதே' 2. பயணச்சீட்டு (ஆங்கிலம்).

டிக்கா எலைப்புள்ளி நோவு : பெ. கடலை இலையில் விழும் நோய்.

டிக்கிரி : பெ. 1. போதை 'டிக்கிரி எறங்கலையா', 2. வழக்குத் தீர்ப்பில் நிறைவேற்றுவதற்குரிய அம்சம்.

டிக்ளர் : பெ. சீட்டாட்டப் பெயர் (ஆங்கிலம்).

டிச்சுக்குழி : பெ. சாக்கடை (டிச்சு -ஆங்கிலம்).

டிச்சு எடுக்கறது : தொ.பெ. திராட்சை போட குழி எடுத்தல்.

டிசம்பர் பூ : பெ. கனகாம்பர வகை (டிசம்பர் -ஆங்கிலம்).

டிப்பு : பெ. முறை 'எத்தன டிப்பு சொல்லறது' (ஆங்கிலம்). (டிரிப்பு).

டிமாண்டு : பெ. தட்டுப்பாடு (ஆங்கிலம்).

டிமிக்கி : பெ. தந்திரம் (அரபு).

டிரிப்ளட் : பெ. 1. ஒருவகைச் சீட்டாட்டத்தின் பெயர், 2. சீட்டாட்டத்தில் ஒரே எண் மூன்றைச்சேர்த்தல், 3. சீட்டாட்டத்தில் மூன்று ஜாக்கி சேர்த்தல் (ஆங்கிலம்).

டில்லி : பெ. வேலிக்கு உதவும் மரவகை (ஆங்கிலம்).

டின்னு கட்டுதல் : தொ. பெ. குறிப்பு 'அவ போடற அடியெடுத் தாங்க டின்னு கட்டிக்கோனு? ஆமா' (டின் - ஆங்கிலம்).

## டீ

டீக்கடை : பெ. தேநீர் அகம் (டீ -ஆங்கிலம்).

டீப்பாய் : பெ. நாற்காலிவகை (ஆங்கிலம்).

## டு

டுரியன் : பெ. பழவகை (ஆங்கிலம்).

## டூ

டூப்பு : பெ.1. குழாய், 2. பொய் 'டூப்பு வுடாதே' (ஆங்கிலம்).

டூரிங் : பெ. ஓலைக்கொட்டகை (ஆங்கிலம்).

## டெ

டெம்போ : பெ. சிறிய வேன் (ஆங்கிலம்).

டெயர் : டயர் : பெ. வாகனங்களின் சக்கரத்திற்குப் போடுவது (ஆங்கிலம்).

டெயர் செருப்பு : பெ. செருப்புவகை.

டெயர் வண்டி : பெ. டயர் சக்கரமுள்ள மாட்டுவண்டி, 2. விளையாட்டு கருவி. ஓட்டை விழுந்த அல்லது பழைய சைக்கிள் டயர்.

டெயவரு : டிரைவர் : பெ. (ஆங்கிலம்).

## டே

டேக்குமாரி : பெ. நடையுடை பாவனையில் ஆணவப் பகட்டுடையவள்.

டேக்குப் பண்ணறா : வி.மு. அலங்காரம் மிகுதியாகச் செய்து கொள்பவளைக் கூறுதல்.

டேக்ஷா : பெ.பார். காப்பித்தவளை (பெர்சியன். தேக்கிசா).

டேங்கு : டேன்க் : பெ. (ஆங்கிலம்).

டேசது : பெ. காவல்நிலையம் (ஆங்கிலம்).

டேஞ்சப்பூ : பெ. மலர்வகை (காயிதப்பூ, பொகினியா).

டேபுள் ரோசா : பெ. சிறிய சிவப்பு நிறப்பூ (ஆங்கிலம்).

டேமணி : பெ. குதிரையின் திமில் அருகிலுள்ள நற்சுழி (ஆங்கிலம்).

டேலியாப்பூ : பெ. மலர்வகை (ஆங்கிலம்).

டேரா : பெ. கூடாரம் (இந்துஸ்தானி).

டேரா தூக்கிடும் : வி.மு. காற்று கடையைத் தூக்கிவிடும்.

டேரா தூக்கிப்போடுவே(ன்) : குடியிருக்கும் இடம்

அல்லது கடையை அழித்துவிடுவேன் எனும் மிரட்டல் குறிப்பு.

டேராப் போடறது : தொ.பெ. தங்குதல் ‘பத்து நாளா இங்கியெ டேராப் போட்டுட்டான்’.

## டை

டைட்டு : பெ. இறுக்கம் ‘பணத்துக்கு ரொம்ப டைட்டா இருக்கு (ஆங்கிலம்).

டைமன் : பெ. சீட்டாட்டச் சீட்டின் நான்கு குறிகளுள் ஒன்று (ஆங்கிலம்).

டைமன் வேட்டி : பெ. நூலின் பெயரால் சொல்லப்படும் வேட்டிவகை.

## டொ

டொயினு : பெ. பார். 2. சணலு.

டொப்பி : பெ. பார். 2. அல்சேசன் (இந்துஸ்தானி. தொப்பி).

டொப்பிப் பருத்தி : பெ. ஐபிரட் பருத்தியின் பெண்பகுதியை மூடி வைத்து அடுத்த நாள் வேறு ஒரு பருத்தியின் ஆண் பகுதியைச் சேர்ப்பதால் கிடைக்கும் பருத்தி.

டொங்கு : வி. அடை. பொய் புளுகு ‘டொங்கு உடறான்’.

## டோ

டோபி : பெ.வண்ணான் (இந்துஸ்தானி).

டோரிக்கண்ணெ : பெ. ஒல்லக்கண்ணெ.

டோஸ் : பெ. திட்டு (ஆங்கிலம்).

***

